உ

சிவமயம்

சேக்கிழார்சுவாமிகளருளிச்செய்த

பெரியபுராணமென்றுவழங்கும்

# திருத்தொண்டர்சரித்திரம்.



இஃது

சென்னையில்- சிலபத்திமான்களும்-பிரபுக்களும்

அடியார்களது - திருவுருவச் சித்திரப்படங்களுடன்

அச்சிலியற்றிக்கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டபடி

பூவைசியர்களில்

தொண்டைமண்டலத்தாராகிய துளுவவேளாளர்குலச் சேக்கிழார்வம்சம்

பென்னிஅவுஸ்-துவிபாஷியாயிருந்த

குன்றத்தூர்

## செல்லப்பவேங்கடாசலமுதலியாருடைய

அபிமானபுத்திரர்

## பொன்னம்பலமுதலியார்

அநுமதியில்

அவரது மைத்துனர்

திருமயிலை-கிராமம்

நாட்டாண்மை-முத்தியப்பமுதலியார் வம்சம்

வைத்தியநாதமுதலியார்-பௌத்திரரும்

**சுப்பராயமுதலியார் புத்திரருமாகிய**

## அருணாசலமுதலியாராலும்

அவரிஷ்டர்

**கல்லேட்டி-லட்சுமையசெட்டியாராலும்**

புதுவை

**க - சுப்பராயமுதலியாரால்**

பலபிரதிகளைக்கொண்டுபரிசோதிப்பித்து

புங்கத்தூர்

**ம-சபாபதிமுதலியாரது**

கல்விவிளக்கஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சாலிவாகனசக௵ ௧௭௮௮-ல்-நிகழாநின்ற-குரோதன௵.

Registered Copyright

உ

சிவமயம்.

## விநாயகர் வணக்கம்.

ஒருகொம்பிரண்டுசெவிமூன்றுமதநால்வாய் ....................*
பொருசெங்கையைந்துடையபுத்தேள்-வருகங்கை ...........*
யாறுதரித்தோன்மைந்தனானைமுகத்தோனைநினைந் ............*
தேழுபிறப்புந்தீரவெட்டு .............................................*

இஃது, புதுவை - க - சுப்பராயமுதலியாராலியற்றியது.

## சிறப்புப்பாயிரம்.

திருவினைப்பயந்து மருவுநல்லிசைபெறீஇப்
பொங்குறுமமுதப் பைங்கடலாகுந்
தாசிடைக்கசைத்த காசினிமடந்தை
முகமெனச்சிறந்த தகைமிகுசோழ
நாட்டினம்முகத்திற் றீட்டுதிலதமெனு
முறையூரிருந்து மறையாறொழுகி
மறக்கோலின்றி யறக்கோனடாத்துஞ்
சோழனநபாயன் வாழுமந்நாளிற்
சிவசமயமதனைவிட் டவசமயமாகு
மாருகதசரிதை நேரியன்விழைந்து
பற்பலகவிஞர் சொற்பலவிரித்தாங்
குரைத்திடநாளுந் திருத்தியதாகி
மகிழ்வுறுநாளிற் புகழ்பெறுசைவ
சமயமேமெய்ம்மைச் சமயமென்றறியா
வரனலதுலகிற் பரமிலையென்றப்
பரமனையுளத்திற் றிரமுறவிருத்தி
யோவிலாதருச்சனை யாவலிற்புரியுஞ்
சேக்கிழாரெனும்பெயர்ப் போக்கறுமமைச்சர்
மன்னனைநோக்கி மின்னுபாற்கடனுட்
டோன்றுமீனந்த வான்றபாலுண்ணு
திழிவுளபலபொரு டழுவியுண்டதுபோல்
சத்தியமாஞ்சிவ பத்திநூலின்றிச்
செய்தவமில்லாக் கைதவவமணர்தம்
மிழுக்குறுநூலின் வழுக்களைக்கற்றீங்
கிம்மைமறுமைப்பயன் றம்மையுமிழந்து
பிறப்பெனுங்கடலினும் வறப்பிலாதழுந்தி
வருந்துறுதன்பென விருந்திறற்சோழன்
மிகமநம்வருந்தியித் தகைமையில்சரிதை
யிருமையின்பமு மொருமையினிழத்தற்
கேதுவாமெனி லோதுசிவநூலது
சொன்னவர்யாரதில் மன்னியசரிதமென்
னெங்குளததனையெற் கிங்கருள்கவென்றனன்
மூவர்புகழருண் மொழித்தேவருண்மகிழ்ந்து
திருவாரூரின் மருவியபரமன்

அடியவர்திறத்தைப் படியவருய்யச்
சூழ்வந்ததில்லைவாழந்தணர்தம்
மடியார்க்குமடியே னெனவடியெடுத்துத்
தந்திடவவர்தஞ் சுந்தரத்துதித்த
தோமில்சுந்தர சுவாமிகள்வாக்கால்
பதினொருசெய்யுளா லிதமுறவருந்திருத்
தொண்டத்தொகையென விண்டனர்பதிக
மப்பதிகக்காங் கொப்பில்வேதாகம
மாதியநூல்தமக் கோதியநாரையூர்ப்
பொல்லாப்பிள்ளையார் சொல்லப்பொருடெரிந்
தந்தாதியாகச் செந்தமிழினம்பி
யாண்டார்நம்பி மீண்டுவிரித்துரைத்தனர்
திருமுறைகண்ட பெருமையனபய
குலசேகரனொடு நலசிவாலயமுநி
யாதியமஹான்க ளோதியின்புற்றூர்
எனவிறைதேர்ந்து மநமிகமகிழ்ந்து
சொன்னவந்நூலின் மன்னுநற்பொருளை
யென்னுளந்தேறப் பன்னியுரையென்ன
வருண்மொழித்தேவர் மருண்மிகவகலக்
கோதிலந்நூலை யோதியுரைசொல்லத்
தெரிந்திறையின்பப் பெருந்திரைமூழ்கித்
தொண்டர்தமன்புந் துண்டவெண்மதிசேர்
வேணியனருளும் பேணிமநமுருகியிவ்
வற்புதச்சரிதையைப் பொற்புறவெவர்க்கும்
விளங்கிடவிலக்கணக் களங்கமிலாமற்
பெருங்காப்பியமதாத் தருங்காருணிய
னீயேயாதலின் றூயோயதனை
விரைவினிற்றரவெனப் பரவிநின்றுரைக்க
வருண்மொழித்தேவர் பொருண்மிகக்கொண்டு
பதம்பரமருளுஞ் சிதம்பரஞ்சென்று
பவமங்கொழிக்குஞ் சிவகங்கையினிற்
படிந்துசிவார்ச்சனை முடிந்துபினெழுந்து
சபாபதிமுன்னர்த் தபோமணிநின்றுங்
கழலிடைப்பட்ட மெழுகெனவுருகி

யிருகரங்கூப்பிப் பெருகுமானந்த
விழிநீர்பெருக மொழியதுகுழறச்
செய்யமேனியவெம் மையநின்றொண்டர்
அன்பின்றிறத்தை யின்பொடுமெடியேன்
பெருங்காப்பியமாத்தருங்கவித்திறமெற்
கருளுவதன்றி மருளுறுமெனக்கு
வேதமாதிய வோதுநின்வாக்கால்
முதலடியெடுத்திங் குதவுதல்வேண்டு
மென்றடிவணங்கி நின்றனனுங்கன்
றையனதருளாற் றுய்யவம்மன்றில்
உலகெலாமுணர்ந் தோதற்கரியவன்
என்றசரீரிவாக் கொன்றெழுந்ததுகேட்
டின்புளம்பொங்கி யன்பொடுநடேசனைப்
பரவியங்ககன்று திருவினிலுயர்ந்து
மீயுயர்ந்தோங்கு மாயிரங்காலுள
மண்டபமிருந்து தொண்டரினுயர்ந்த
மூவரைப்புகழ்ந்து தேவருள்புரிந்த
வடிமுதலெடுத்து வடிதமிழ்க்காப்பியம்
பெரிதாவியற்றின ரரிதாமந்நூல்
வண்டமிழ்தெரிந்த பண்டிதர்க்கன்றிப்
பாமரரதனைத் தோமறவறித
லரியதிலரிதாம் பெரியவந்நூலை
வாசகநடையாத் தேசுறவியற்றி
யெழுதாவெழுத்தில் வழுவாதிசைவித்
தடியவர்வடிவினைப் படியவர்மயங்கச்
சித்திரனைக்கொடு சித்திரித்தாங்காங்
கொருபடமமைத்துத் தரவெனச்சென்னைப்
பதியினில்வாழு மதியினிலுயர்ந்த
சங்கரனடியவர் பொங்குறுசெல்வ
ரியம்பினராக வயங்கெழின்முன்னு
லாய்ந்தரும்புலமை வாய்ந்திடுமறிஞரைக்
கொண்டெவர்தமக்கும் விண்டிடவெளிதாச்
சந்திகள்கடிந்து சுந்தரமான
சித்திரப்படமோ டுத்தமமான
வச்சினிலெவரு மெச்சிடப்பதித்துத்
தந்தனன்வயலி னந்துருளுளைந்தாங்
கீன்றமணிநிலவு கான்றுற்பலமுகை
கண்மலர்ந்தொளிரத் தண்ணொளிவீசி
மன்னிருளகற்று மின்னிவளர்தொண்டை
நாட்டினிலமர ரீட்டமதிறங்க
வைத்தபல்லேணி யொத்துவளர்தாருத்
தலைமிசைப்பூத்த வலரினைவிரும்பிக்
கொள்ளைவண்டினஞ்சென் றள்ளியுண்டலர்த்தே
காமரம்பாடித் தேமலர்குடைந்து [ன்
கொங்குதிர்த்தாகாய கங்கையைத்தூர்க்குஞ்
சோலையதுசூழ்ந்த வேலைநிகர்வாவி
வாளைகளெழுந்து பாளைவிரிதெங்கின்
பழக்குலையுதிர்த்தாங் குழக்கலின்விழுந்த
தெங்கம்பழநீ ரெங்குஞ்சிதறி
மறுகினிலெழுந்து நிறைதருதுகளை
மேலெழாதடக்கி நாலுவீதியினு
நதியெனச்சென்று பதிகுளிர்விக்கு
நகரிருமருங்கு நிகராறுசுண்ணச்
சாந்தெழினிலவின் காந்தியைவிரிக்கு
மாடமாளிகைக ணீடுநாணியமத்
துள்ளெழில்குலவும் பள்ளியுளமர்ந்த
தாருகன்வனத்திற் காரிகைதங்கள்
கற்பினையழித்த பொற்பமர்கபாலி
கொச்சையம்பதியார் மெச்சவளர்ஞான
சம்பந்தரந்த நம்பனிசைபாடித்
தசையிலென்பதனை வசையில்பூம்பாவைப்
பெண்ணெனச்செய்த வெண்ணில்புகழ்பெற்று
மந்தரிமயிலா வந்தவதரித்துப்
பரமனைப்பூசித் தருவரம்பெற்ற
காரணமதனாற் சீரணிமயிலைப்
பதியெனும்பெயரிய துதிமிகுநகரஞ்
சுந்தரமமைந்த வந்திவண்ணன்சிரந்
தங்கிநின்றொளிருங் கங்கைபெற்றெடுத்த
புத்திரனாகி யித்தலமதனில்
கல்விகேள்வியினில் வல்லவனாகி
நீதிநான்முற்று மோதிநன்குணர்ந்து
மன்னர்க்கமைச்ச னென்னவிருந்து
செறிபுலமன்னர்க் கறிவுகொளுத்தித்
தனைப்புகழ்புலவர் நினைப்பறக்கொடுத்தாங்
கிலையெனவந்தோர்க் கிலையெனாதீந்து
பவமகன்றிடநஞ் சிவனடியவரைக் [லாந்
காண்டொறுமெதிர்ந்து வேண்டிவேண்டுவவெ
தந்துவேளாண்மைசெய் முந்துவேளாளர்தங்
குடியிலவதரித்துப் படியினர்புகழக்
கேண்மையினவர்க்குநாட் டாண்மையாயிருந்து
வருமுத்தையவேள் மரபினில்வந்த
வயித்தியநாதன் வியப்புறுபௌத்திர
னம்மரபினர்தந் தம்முறைவழாம
லில்லறவாழ்க்கையைச் சொல்லுறநடாத்தி
யறம்பொருளின்பந் திறமுறப்பெற்றே
யொப்புரவமைந்த சுப்பராயப்பெருந்
தகைசெயுந்தவத்தின் றகைமிகுபயனென
வந்தவதரித்துச் செந்தமிழாதி
கல்விபலதேர்ந்து செல்விமனைமேவக்
கற்றவர்புகழ்பாப் பெற்றவர்மகிழக்
கநகமதளிக்கு மநகனென்றிசைக்கும்
அருணாசலமெனுங்கருணை
மலையெனவுரைக்குந் தலைமைமிக்கோனே.

2|1

உ

# திருத்தொண்டர்புராண அட்டவணை.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சேக்கிழார்சுவாமிகள்சரிதம்.

ஆதிகாலத்திலே நந்திமலையில் வசிஷ்டர்ஆசிரமத்திலுள்ள காமதேனுபொழிந்த பால்பெருகிய காரணத்தால் பாலாறென்று பெயர்பெற்ற புண்ணியநதியானது இடைவிடாது ஒழுகுதலால் மிக்கவளஞ்சுரந்தளிக்க செழுமையுள்ளதாகிய நீர்வளமும் நிலவளமும் பயிர்வளமுமுள்ளதாய் காஞ்சிபுரமுதலான பாடல்பெற்ற சிவஸ்தலங்களும் விஷ்ணு ஸ்தலங்களும் உள்ளதான தொண்டைநாட்டுக்கு உட்பிரிவாகிய இருபத்துநான்குகோட்டத்துள் ஒன்றாகியபுலியூர்க்கோட்டத்தைச்சேர்ந்த குன்றைவளநாட்டில் குன்றத்தூரில் வாழும் வேளாளர் குலஞ்செய்த தவப்பயனால் சேக்கிழார்மரபில் சைவசமயம் விளங்கும்படி சிவபுண்ணியந்திருவுருக்கொண்டதுபோல பாலருவாயரென்னும் தம்பியாருடன்திருவவதாரஞ்செய்து அருண்மொழித்தேவரென்னும் பிள்ளைத்திருநாமம் புனைந்து கல்வியறிவு முதிர்ந்து சைவ சமயத்துக்குரிய தீக்ஷைகளும் சிவபத்தியிலதிகரித்துச் சத்காலக்ஷேபஞ் செய்துகொண்டிருக்கையில் அனபாயசோழமஹாராஜன் அறிந்து வரவழைத்து மந்திரித்தலைமையும் உத்தமச்சோழப் பல்லவராயனென்னும் பட்டப்பெயருங் கொடுக்கக்கொண்டு இமசேதுபரியந்தம் நீதிதவறாமல் செங்கோல்செலுத்துகையில் அந்தச் சோழதேசத்திலிருக்கும் திருநாகேச்சுரமென்னும் பாடல்பெற்ற சிவஸ்தலத்தில் தாம் வைத்திருக்கும் அன்பின் மிகுதியால் தமது பதியாகிய குன்றத்தூரில் மடவளாக மொன்றேற் படுத்தி ஆலய பிரதிஷ்டையுஞ் செய்து சோழ நாட்டிலிருக்கும் திருநாகேச்சுரம்போல திருப்பேர்கற்பித்துக் கும்பாபிஷேகமுஞ் செய்வித்து நித்தியநைமித்திய காமியமென மூன்று வகையாகிய பூசைகளுஞ் சிறப்பாக நடத்திவருநாளில்.

அனபாயசோழமஹாராஜன் சைவசமயப்பற்றுள்ளவனாயிருந்தும் சைனசமயராஜனாகிய சீவகராஜனுடைய சரிதமென் றேற்பட்டிருக்கிற சிந்தாமணியென்னும் இலக்கியத்தை நாள்தோறும் பாராட்டிக்கொண்டிருக்கின்றமையால் சிவசிவா இவர்கள் யாதொருபயனும் அடையாமல் வீணாள் கழிக்கின்றார்களேயென்று மநவிரக்கமுற்று அரசனைநோக்கி இம்மைமறுமைப்பயனைத் தரத்தக்கதாகிய நம்முடைய சைவசமயகதையிருக்கக் கரும்புதின்னாமல் வேம்புதின்பதுபோல பயனற்ற அரசன்கதையைக் கேட்பதென்னவென அரசன் அவமானபயனற்றகதை யீதாகில் இம்மைமறுமைக்குறுதி பயக்கத்தக்க சிவகதையேது அதுகற்றுவல்லார்யார் சிந்தாமணிபோலிடையில்வந்த கதையோ அன்றி புராதனமோ முன்னாலுண்டோ அது சொன்னவர்யார், கேட்டவர்யார், தவகதையோ தவம்பண்ணிப் பேறுபெற்ற ஒப்பற்றகதையோ விவரமாச் சொல்லவேண்டுமென்றான் சேக்கிழார் அதுபரமசிவத்தின் அடியார்களாகிய திருத்தொண்டர்களுடையசரித்திரம்சாமானியர்களான மற்றொருவரால் சொல்லப்பட்டதல்ல பரமசிவம் தடுத்தாட்கொண்ட வன்றொண்டரென்னுஞ் சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குத் திருவாரூரில் பரமசிவம் கிருபைகூர்ந்து "தில்லைவாழந்தணர்தம் அடியார்க்குமடியேனென்று" நம்முடையதொண்டர்களைப்பாடித் துதிசெய்யென்று முதலெடுத்துக் கொடுத்து அவர்களுடைய பெருமைப்பாட்டினையுஞ் சரிதங்களையுந்தெரித்தருள அதுவே முதலடியாக அமைத்து பதினொருதிருப்பாடலாகச்செய்த திருத்தொண்டத்தொகைக்குத் திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி பொல்லாப்பிள்ளையாரதற்குப் பொருளுணாக்கத் திருத்தொண்டர்களுடைய பெருமைப்பாடுதோன்றக் கலித்துறையந்தாதியாகச் செய்தனர்.

அதைத்திருமுறைகண்டராஜராஜதேவர்சிவாலயதேவர்முதலான பெரியோர்களும் மற்றுமுள்ள யாவரும் பாராட்டிக்கொண் டிருந்தார்களென்று திருத்தொண்டர் ஊர் பேர்மரபு தொண்டுயாவும் விவரமாகச்சொல்ல அரசன்கேட்டு ஆநந்தமடை

ந்து சேக்கிழார்சுவாமிகளைநோக்கி இவ்வாறே திருத்தொண்டர்பெருமைகள் விளங்கும்படிபெருங்காப்பியமாக விரவிற்செய்து தந்தருளவேண்டுமென்று மிகுந்த பொருளுங் கொடுத்தனுப்புவிக்க அருண்மொழித்தேவர் சிதம்பரத்தையடைந்து சிவகங்கையில்ஸ்நாநஞ்செய்து திருநீறுதரித்துக்கொண்டு பரிசுத்தத்தோடு சிற்சபைக்கெதிரில் சாஷ்டாங்கமாகப்பணிந்து ஐயனே தேவரீருடையதிருத்தொண்டர் பெருமையைப்பெருங்காப்பியமாகப்பாடும்படி அடியெடுத்துத்தந்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய நடேசமூர்த்தி அருண்மிகுந்து "உலகெலாமுணர்ந்தோதற்கரியவ" னென்று முதலடியெடுத்துக் கொடுத்த அசரீரிவாக்கு அடியார்களுக்குந் தில்லைவாழந்தணர்முதலானவர்களுக்குங் கேட்டபோது யாவரும்ஆநந்தபரவசமடைந்தார்கள். சேக்கிழாருங்கேட்டுக்களிகூர்ந்து வணங்கி திருநெறித்தலைவனாயுந்தோத்திரஞ்செய்து விபூதிருத்திராக்ஷமுதலான சிவசாதனந்தரித்துக்கொண்டு ஆயிரக்கால்மண்டபத்தில் வீற்றிருந்து "உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்" என்னுந்திருப்பாட்டுமுதல் வெள்ளையானைச்சருக்க மீறுகப்புராணஞ்செய்து நிறைவேற்றினர். இவ்வாறுபுராணம் நிறைவேறியசெய்தியை அனபாயச்சோழமஹாராஜன்ஏவலாளிகளாலுணர்ந்து மிகமகிழ்ந்து நடேசமூர்த்தியானவர் உலகெலாமென்று முதலடியெடுத்துக் கொடுக்கச்சேக்கிழார்சுவாமிகள் நிறைவேற்றிய புராணத்தை தில்லையிற்சென்று வணங்கவேண்டுமென்று விருப்பங்கொண்டு சதுரங்கசேனைகளுந் தன்னைச்சூழ்ந்துவர யானையின்மீது எறிச்செல்ல அதையறிந்த தில்லைவாழந்தணர்களும் மடாதிபதிகளும்மற்றுமுள்ள பெரியோர்களும் சேக்கிழார்சுவாமிகளும் மகாராஜாவை யெதிர்கொண்டுகண்டு ஆசீர்வாதஞ்செய்தார்கள் அப்போது முண்டிதமான திருமுடியும் குண்டலமசையுந் திருச்செவிகளும் ருத்திராக்ஷகெவுடும் கரமாலையும் சிரமாலையும்விளங்கும்படி சேக்கிழார்சுவாமிகள் கொண்டிருக்கிறசிவவேடத்தை சோழராஜன்கண்டு மகிழ்ந்து தன்னையுமறியாமல் இரண்டுகரங்களையும் அஞ்சலியாகச்சிரசின்மீது வைத்துக்கொண்டு சேக்கிழார் சுவாமிகள் திருவடியைவணங்கி நடேசமூர்த்தியினுடைய திருவடியையும் வணங்கவேண்டுமென்கிற அன்புகொண்டு சேக்கிழார் சுவாமிகளும் தில்லைவாழந்தணரும்கூட வரச்சென்று நடேசமூர்த்தியைத் தரிசித்து அன்பினாலாநந்தப் பரவசங்கொண்டு சாஷ்டாங்கமாகப் பணிந்து துதிசெய்யநடேசமூர்த்தியானவர் அரசனே நம்முடைய அன்பனாகிய சேக்கிழான் அடியார்களுடைய பெருமையைப்புராணமாகச்செய்யும்பொருட்டு நம்முடையவாக்கினால் "உலகெலாமென" அடியெடுத்துக்கொடுத்து அவர்களுடைய தொண்டுமுதலானவையும் தெரித்தருளக்கொண்டு புராணஞ்செய்து நிறைவேற்றினன்.

அதனைநீவிரைவில்கேட்கக்கடவையென்றுஅந்தச்சிதாகாசமாகிய ஞாநவெளியில் அசரீரிவாக்கு திருச்சிலம்பொலியுடன் உண்டாக அவ்வொலி களங்குநின்ற அடியார்களுடைய செவிகளிலும் புகுந்தன அதைக்கேட்ட சோழராஜன் மநமகிழ்ந்து தேசங்களிலுள்ள அரசர்களும் மடாதிபதிகளும், சிவனடியார்களும் மற்றுமுள்ளவர்களும் வரும்படி ஓலையெழுதி யனுப்பி அவர்களெல்லாம் வரக்கண்டு சந்தோஷித்து சேக்கிழார் சுவாமிகளை நோக்கி நடேசமூர்த்தியின் கிருபையால் தேவரருளிச்செய்த திருத்தொண்டர்புராணத்தைத் தேவரோ வாசித்து அதனது பொருளைவிளங்க அருளிச்செய்யவேண்டுமென்று அரசர்முதலிய அடியவர்களெல்லாங் கேட்டுக்கொள்ள சம்மதித்தனர் அதற்குமேல் கநகசபையி னிடத்தில் மெழுகிக்கோலமிட்டு அறுகாற்பீடம்வைத்து அதன்மேல் பட்டுவஸ்திரமும் அதன்மேல் வெள்ளைவஸ்திரமும் மடித்திட்டு மலர்களுந்தூவித் தூபதீபங்களுங்கொடுத்து பிராமணர்கள் ஆதனங்கற்பித்து அதன்மேற் றிருத்தொண்டர் புராணத்தை வைக்கச்சேக்கிழார் சுவாமிகள் அரசர் முதலானவர்களை நோக்கிச் சிற்சபையில் நடனஞ்செய்யும் நடேசமூர்த்திக்குப்பொதுவாக அமைந்திருக்கும் ஹரனென்னுந் திருநாமத்துக்கு இசைந்த நட்சத்திரமும் திருஞாநசம்பந்தசுவாமிகள் திருவவதாரஞ்செய்த நட்சத்திரமும் ஷை சுவாமிகள் திருமுலைப்பாலுண்டநட்சத்திரமும்திருவாதிரைநட்சத்திரமாதலால் சித்திரைமாதம் திருவாதிரை நட்சத்திரமாகிய இன்றுமுதல் திருத்தொண்டர் சரித்திரத்தை பிரசங்கஞ்செய்துகொண்டுவந்து மேல்வருஷம் சித்திரைமாதம் திருவாதிரை நட்சத்திரநாளில்பூர்த்திசெய்கிறோமென்று சொல்லி உத்தேசித்து நாள்தோறும் பிரசங்கநடத்திவர அரசர்முதலானயாவரும் அன்புடனிருந்துகேட்டு ஆநந்தபரவசத்தையடைந்தார்கள் அதன்பின்பு திருமுறை

யைப் பசும்பட்டுக்கவளிகைசாத்தி பொன்தட்டி ல்வைத்து அந்தத்தட்டுடன் திருமுறையை யெடு த்துக்கொண்டுபோய்ப் பட்டத்துயானையின்மே ற் கட்டியிருக்கும் அம்பாரியில்வைத்துச் சேக்கி ழார்சுவாமிகளையும் ஆரோகணிக்கச்செய்து தா னுமேறிச் சேக்கிழார் சுவாமிகளுக்குப் பின்புற மிருந்து தன்னிரண்டு கரங்களாலும் சாமரைவீசி க்கொண்டு கிராமப்பிரதக்ஷிணஞ்செய்வித்துச் சி ற்சபைக்குமுன்வந்தபோது அரசர்களும் மற்று முள்ளவர்களும் திருமுறையை யெழுந்தருளப்ப ண்ணிக்கொண்டுபோய் சந்நிதியில்வைத்து அரச ர்முதலாகிய அடியார்கள்யாவரும் நடேசமூர்த்தி யைச்சேவித்துச் சேக்கிழார்சுவாமிகளையும் சே வித்துக்கொண்டார்கள் அதன்பின் அரசன் தனக் கு மந்திரிவேண்டுமேயென்று கருதிப் பாலறுவா யர் எங்கிருக்கின்றனரென்று வினவ அவர்குன்ற த்தூரில்தன்பேரால் பாலறுவாயன்கேணியென் று ஒருதடாகப் பிரதிஷ்டைசெய்து திருநாகே ச்சுரமென்னுஞ்சிவாலயத்திருப்பணிசெய்துகொ ண்டு இருக்கிறார் என்றுசொல்ல அதைக்கேட்டு அவரையழைப்பித்து மந்திரிப்பட்டமுந்தொண் டைமானென்னும் பட்டப்பேருங் கொடுத்துத் தம்மிடத்திலேவைத்துக்கொள்ள அங்குநீதிசெலு த்திக்கொண்டிருக்கும்நாளில் தொண்டைமண்ட லத்தில் கருப்புக்காலஞ் சம்பவித்தமையால் அந் த நாட்டிலிருப்பவர்களெல்லாருந் தம்மைவந்து அடைய அவர்களுக்கு யாதொரு குறையுமில்லா மல் ஆதரித்தமையால் தொண்டைமண்டலங்காத் தபெருமானென்று புகழ்பெற்றுவிளங்கினார் சேக் கிழார்சுவாமிகள் அறவாச்சிரமத்திலிருந்து நடே சமூர்த்தியினுடைய திருவடிநீழலிலடைந்தனர்.

முற்றுப்பெற்றது.

---

## சேக்கிழார்சுவாமிகள் மரபுமுறைவிளக்கம்.

---

சேக்கிழார்வம்சத்திலவதரித்த

அருண்மொழித்தேவர்
அவர்புத்திரர்-பொன்மலைத்தேவர்
அவர்புத்திரர்-மின்னதேவர்
அவர்புத்திரர்-காத்தாம்பலதேவர்
அவர்புத்திரர்-கைலைத்தேவர்
அவர்புத்திரர்-கடவுட்டேவர்
அவர்புத்திரர்-முக்கணதேவர்
அவர்புத்திரர்-தில்லையம்பலதேவநாயனார்
அவர்புத்திரர்-திருவம்பலதேவநாயனார்
அவர்புத்திரர்-அருண்மொழியுடையார்
அவர்புத்திரர்-திருவாலியையருடையார்
அவர்புத்திரர்-மலையப்பமுதலியார்
அவர்புத்திரர்-சடையப்பமுதலியார்
அவர்புத்திரர்-வெள்ளியப்பமுதலியார்
அவர்புத்திரர்-செல்லப்பமுதலியார்
அவர்புத்திரர்-நயனப்பமுதலியார்
அவர்புத்திரர்-செல்லப்பமுதலியார்
அவர்புத்திரர்-செல்லப்பவெங்கடாசலமுதலியார்
அவர்புத்திரர்-பொன்னையாமுதலியார்
அவர்புத்திரர்-செல்லப்ப அப்பாவுமுதலியார்

## விளம்பரம்.

---

இப்புத்தகம் வேண்டியவர்கள் சென்னப்பட்டணம் பென்னி அவுஸ்-கிளர்க்கு-மயிலை அருணா சலமுதலியா ரவர்கள்பேருக்காவது அல்லது-நாட்டுப்பிள்ளையார்கோவில்வீதியில் - சு - வது நெம் பருடையவீட்டில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும், ஆதிகலாநிதி-அச்சுக்கூடத்தலைவர் பால்குரிகி-குமாரா யரவர்கள் குமாரராகிய பா - சோமைய ரவர்கள்பேருக்காவது தபால்மார்க்கமாய் தங்கள் வாசஸ் தலம்-நாமதேய முதலியவை விவரமாய்த்தெரியப்படுத்த வேண்டியது.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சைவசித்தாந்தாசாரியபரம்பரைவிளக்கம்.

சைவசித்தாந்தோபதேசசந்தானுசாரியர்களுள் தலைவராவார் பரமசிவனது அருள்பெற்ற திருநந்திதேவர், அவர்மாணுக்கர் சனற்குமார மகாமுனிவர், அவர்மாணுக்கர் சத்தியஞானதரிசனிகள் அவர்மாணுக்கர் பரஞ்சோதிமகாமுனிவர், அவர் கிருபாவசத்தினுலே கைலாசகிரியினின்றும் நீங்கித் தமிழ்நாட்டிற்கு எழுந்தருளியபோது அவரிடத்திலே ஞானேபதேசம்பெற்ற மாணுக்கர் திருவெண்ணெய்நல்லூரில் எழுந்தருளியிருந்த வேளாளராகிய மெய்கண்டசிவாசாரியர் என்னும்காரணப்பெயரை உடைய சுவேதவனப்பெருமாள் அவர்மாணுக்கர் நாற்பத்தொன்பதின்மருள் சிரேஷ்டர் திருத்துறையூரில் எழுந்தருளியிருந்த ஆதிசைவராகிய சகலாகமபண்டிதர் என்னும் காரணப்பெயரைஉடைய அருணந்திசிவாசாரியர், அவர் மாணுக்கர் சிதம்பரத்தில் எழுந்தருளியிருந்த ஆதிசைவராகிய மறைஞானசம்பந்தசிவாசாரியர், அவர் மாணுக்கர் தில்லைவாழந்தணரில் ஒருவராய் அந்தத் திருப்பதியைச்சார்ந்த கொற்றவன்குடியில் எழுந்தருளியிருந்த உமாபதிசிவாசாரியர், அவர் அத்திருத்தொண்டர் புராணத்தைச் சுருக்கித் திருத்தொண்டர்புராணசாரம் எனப்பெயர்தந்து எழுபத்தைந்து திருவிருத்தத்தால் அருளிச்செய்து, சேக்கிழார்புராணமும் பாடியருளினுர்.

# திருப்பதிக்கோவை.

## இப்போதுஉள்ள தேவாரத் திருப்பதிகங்களை உடையனவாய் இருக்கின்ற சிவஸ்தலங்கள் இருநூற்றெழுபத்திநான்கு அவைவருமாறு:

சோழநாட்டிலே காவேரிக்குவடகரையில் உள்ள ஸ்தலங்கள்.—சிதம்பரம், திருவேட்களம், நெல்வாயில், கழிப்பாலை, பெருமணம், மயேந்திரப்பள்ளி, திருமுல்லைவாயில், கலிக்காமூர், சாய்க்காடு, பல்லவனீச்சரம், திருவெண்காடு, திருக்காட்டுப்பள்ளி, குருகாவூர், சீர்காழி, கோலக்கா, புள்ளிருக்கும்வேளூர், கண்ணார்கோயில், கடைமுடி, நின்றியூர், திருப்புன்கூர், நீடூர், அன்னியூர், வேள்விக்குடி, எதிர்கொள்பாடி, மணஞ்சேரி, திருக்கொறுக்கை, கருப்பறியலூர், குரக்குக்கா, வாளொளிபுற்றூர், மண்ணிபடிக்கரை, ஓமாம்புலியூர், கானாட்டுமுள்ளூர், திருநாரையூர், கடம்பூர், பந்தணநல்லூர், கஞ்சனூர், கோடிகா, மங்கலக்குடி, திருப்பனந்தாள், ஆப்பாடி, திருச்சேய்ஞலூர், தேவன்குடி, வியலூர், கொட்டையூர், இன்னம்பர், புறம்பயம், விசயமங்கை, வைகாவூர், வடகுரங்காடுதுறை, திருப்பழனம், திருவையாறு, நெய்த்தானம், பெரும்புலியூர், திருமழபாடி, திருப்பழுவூர், திருக்கானூர், அன்பிலாலந்துறை, மாந்துறை, பாற்றுறை, திருவானைக்கா, திருப்பைஞ்ஞீலி, பாச்சிலாச்சிராமம், ஈங்கோய்மலை. ௬௰௩

சோழநாட்டிலே காவேரிக்குத் தென்கரையில் உள்ள ஸ்தலங்கள்.—வாட்போக்கி, கடம்பந்துறை, பராய்த்துறை, கற்குடி, மூக்கீச்சரம், திருச்சிராப்பள்ளி, எறும்பியூர், நெடுங்களம், மேலைக்காட்டுப்பள்ளி, ஆலம்பொழில், பூந்துருத்தி, கண்டியூர், சோற்றுத்துறை, வேதிகுடி, தென்குடித்திட்டை, புள்ளமங்கை, சக்கரப்பள்ளி, கருகாவூர், பாலைத்துறை, நல்லூர், ஆவூர்ப், பசுபதீச்சரம், சத்திமுற்றம், பட்டீச்சரம், பழையாறை, வடதளி, வலஞ்சுழி, கும்பகோணம், குடந்தைக்கீழ்க்கோட்டம், குடந்தைக்காரோணம், திருநாகீச்சர

ம், திருவிடைமருதூர், தென்குரங்காடுதுறை, நீ
லக்குடி, வைகன்மாடக்கோயில், நல்லம், கோழம்
பம், திருவாவடுதுறை, துருத்தி, திருவழுந்தூர்,
மாயூரம், விளநகர், பறியலூர், செம்பொன்பள்
ளி, நனிபள்ளி, வலம்புறம், தலைச்சங்காடு, ஆக்கூ
ர்த்தான்தோன்றிமாடம், திருக்கடவூர், திருக்கட
வூர்மயானம், வேட்டக்குடி, தெளிச்சேரி, தரும
புரம், திருநள்ளாறு, கோட்டாறு, அம்பர்ப்பெ
ருந்திருக்கோயில், அம்பர்மாகாளம், மீயச்சூரிள
ங்கோயில், திலதைப்பதி, பாம்புரம், சிறுகுடி, தி
ருவீழிமிழலை, வன்னியூர், கருவிலி, பேணுபெரு
ந்துறை, நறையூர்ச்சித்தீச்சரம், அரிசிற்கரைப்பு
த்தூர், சிவபுரம், கலயநல்லூர், கருக்குடி, வாஞ்
சியம், நன்னிலத்துப்பெருங்கோயில், கொண்டீ
ச்சரம், பனையூர், விற்குடி, திருப்புகலூர், வர்த்த
மானீச்சரம், இராமனதீச்சரம், பயற்றூர், செங்
காட்டங்குடி, மருகல், சாத்தமங்கை, நாகைக்கா
ரோணம், சிக்கல், கீழ்வேளூர், தேவூர், பள்ளியி
ன்முக்கூடல், திருவாரூர்மூலட்டானம், திருவாரூ
ரரனெறி, திருவாரூர்ப்பரவையுண்மண்டளி, வி
ளமர், கரவீரம், பெருவேளூர், தலையாலங்காடு,
குடவாயில், சேறை, நாலூர்மயானம், கடுவாய்க்
கரைப்புத்தூர், இரும்பூளை, அரதைப்பெரும்பா
ழி, அவளிவணல்லூர், பருதிநியமம், வெண்ணி, பூ
வனூர், பாதாளீச்சரம், திருக்களர், சிற்றேமம், உ
சாத்தானம், இடும்பாவனம், கடிக்குளம், தண்டலை
நீணெறி, கோட்டூர், வெண்டுறை, கொள்ளம்பூ
தூர், பேரெயில், கொள்ளிக்காடு, தெங்கூர், நெ
ல்லிக்கா, நாட்டியத்தான்குடி, காறாயல், கன்றாப்
பூர், வலிவலம், கச்சினம், கோளிலி, வாய்மூர், வே
தாரணியம், அகத்தியான்பள்ளி, கோடிக்குழகர்,

ஆ ௱௨௭.

ஈழநாட்டில் உள்ள ஸ்தலங்கள்.—திருக்கோண
மலை, திருக்கேதீச்சரம்,

ஆ ௨

பாண்டிநாட்டில் உள்ள ஸ்தலங்கள்.—மதுரை
ஆப்பனூர், திருப்பரங்குன்று, திருவேடகம், கொ
டுங்குன்றம், புத்தூர், புனவாயில், இராமேச்சரம்
ஆடானை, கானப்பேர், பூவணம், திருச்சுழியல், தி
ருக்குற்றாலம், திருநெல்வேலி,

ஆ ௰௪

மலைநாட்டில் உள்ள ஸ்தலம்.—திருவஞ்சைக்க
ளம்,

ஆ ௧

கொங்கநாட்டில் உள்ள ஸ்தலங்கள்.—அவிநாசி
முருகன்பூண்டி, திருநணா, கொடிமாடச்செங்கு
ன்றூர், வெஞ்சமாக்கூடல், பாண்டிக்கொடுமு
டி, கருவூர்,

ஆ ௭

நடுநாட்டில் உள்ள ஸ்தலங்கள்.—அரத்துறை,
தூங்கானைமாடம், கூடலையாற்றூர், எருக்கத்தம்பு
லியூர், தினைநகர், சோபுரம், திருவதிகை, திருநா
வலூர், முதுகுன்றம், நெல்வெண்ணெ, கோவலூர்,
அறையணிநல்லூர், இடையாறு, திருவெண்ணைந
ல்லூர், துறையூர், வடுகூர், திருமாணிகுழி, பாதி
ரிப்புலியூர், முண்டீச்சரம், புறவார்பனங்காட்டூர்
ஆமாத்தூர், திருவண்ணாமலை,

ஆ ௨௨

தொண்டைநாட்டில் உள்ள ஸ்தலங்கள்.—கச்சி
யேகம்பம், கச்சிமேற்றளி. கச்சியோணகாந்தன்
றளி, கச்சியனேகதங்காவதம், கச்சிநெறிக்காரைக்
காடு, குரங்கணின்முட்டம், மாகறல், ஓத்தூர், வன்
பார்த்தான்பனங்காட்டூர், வல்லம், மாற்பேறு, ஊ
றல், இலம்பையங்கோட்டூர், விற்கோலம், திருவா
லங்காடு, பாசூர், வெண்பாக்கம், கள்ளில், திருக்
காளத்தி, திருவொற்றியூர், வலிதாயம், வடமுல்லை
வாயில், வேற்காடு, மயிலாப்பூர், வான்மியூர், கச்
சூராலக்கோயில், இடைச்சுரம், திருக்கழுக்குன்ற
ம், அச்சிறுபாக்கம், திருவக்கரை, அரசிலி, இரும்
பைமாகாளம்,

ஆ ௩௨

துளுவநாட்டில் உள்ள ஸ்தலம்.—கோகரணம்,

ஆ ௧

வடநாட்டில் உள்ள ஸ்தலங்கள்.—திருப்பருப்
பதம், இந்திரநீலப்பருப்பதம், அனேகதங்காவத
ம், திருக்கேதாரம், நொடித்தான்மலை என்பது.
(கைலாசமலை.)

ஆ ௫

---

சமயகுரவர் நால்வர் வயசு.

அப்பருக்கெண்பத்தொன் றருள்வாதவூரருக்குச்
செப்பியநாலெட்டினிற்றெய்வீக - மிப்புவியிற்
சுந்தரர்க்குமூவாறு தொன்ஞானசம்பந்தர்க்
கந்தம்பதினாறறி.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருக்கைலாயச்சிறப்பு.

## கடவுள்வணக்கம்.

உலகெலா முணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

பொன்போன்ற வெள்ளியதிருநீறுதரித்தபரமசிவன் திருவோலக்கமாக எழுந்தருளியிருக்கும் வெள்ளிமலையானது இமயமலையின்பக்கத்திலிருக்கின்றது அதுபெரியோர்கள் களங்கரகிதமானமதம்போலும், படிகம்போலும், திரிலோகங்களுஞ்செய்த புண்ணியங்களேதிரண்டு ஒருருவாகப் பிரகாசிப்பதுபோலு மிருக்கின்றது அதில் இருக்கு, யசசு, சாமம், அதர்வணம், என்னுநான்கு வேதங்களும் துதிக்கின்றவோசையும், வித்தியாதரர்கள் வீணையோசையும், யானைகளுடைய முழக்கமும் தேவதுந்துபிமுழக்கமும்இடைவிடாதொலிக்கின்றன அன்றியும் தேவர்கள் சிரமாலைகளும் பற்பலமுநிவர்களஞ்சலிசெய்து அர்ச்சித்தமலர்மாலைகளும் அம்மலைப்பக்கங்களெங்கு நெருங்கி மயங்குகின்றன - அமரர், சித்தர், அசுரர், தைத்தியர், கருட, காந்தருவர், கிந்நரர், நிருதர், கிம்புருடர், இயக்கர், விஞ்சையர், பூதர், பைசாசர், அந்தரர், முநிவர், உரகர், ஆகாயவாசிகள், போகபூமியர், என்னும் பதினெண்கணங்களும் துதிக்கின்ற பேரொலிமுழக்க நிறைந்துள்ளதாகிய அக்கைலாயமலையினுச்சியில் கோடாகோடி சூரியப்பிரகாசம்போலும் விளங்குகின்ற நவமணிகள்பதிக்கப்பட்ட திருக்கோயிலுக்கு முதற்கோபுரவாயிற்காவற்றலைவர் அதிகாரநந்திதேவர் அவர் உலககர்த்தாவாகிய பரமசிவனது திருப்பணிக்கு அதிகாரத்தலைவர் அவர் உடைவாளும் திருப்பிரம்பும்பெற்று கைலையைக்காக்கின்றவர் தேவர்முதலிய யாவருக்கும் மேலானவர் பரமசிவனிடத்து அதிகபத்தியும் அன்புமுள்ளவர் இவராலிரவும் பகலும் இடைவிடாமற் காக்கப்பட்ட வெள்ளிமலை யென்னுங் கைலாயத்தின் அடிவாரத்தில் எச்சமயங்களினும் சைவசமயமேமெய்ச்சமயமென்றும் எக்கடவுளினும் பரமசிவமே மெய்க்கடவுளென்றும் நிச்சயித்தறிந்தவராகிய உபமன்னிய மஹாமுநிவர் இவர் கிருஷ்ணனுடைய தலையில் தன்றிருவடியைச் சூட்டினவர் பிறப்பிறப்பில்லாதவர் பரமசிவன் அருளால் திருப்பாற்கடலையுண்டவர் கடவுளினிடத்து இடைவிடாத மிகுந்த அன்புள்ளவர்.

இந்த வுபமன்னிய மஹாமுநிவர் ஒருநாள் அடியார்களும் முநிவர்களும்பெரியோர்களும்தன்னைச்சூழ்ந்திருக்குஞ் சமயத்தில் தமக்கெதிராகஆயிரம் ஆதித்தகிரணங்கள் ஏககாலத்தில் ஒன்றாகத்திரண்டு பிரகாசிப்பதுபோல ஓரொளிதோன்ற அதைக்கண்டு தன்னைச்சூழ்ந்திருந்த எல்லோரும் உபமன்னிய மஹாமுநிவனைநோக்கி இதுவென்னவாச்சரியம் இப்படிப்பட்ட வொளிதோன்றுவதற்குக்காரணமென்னென உபமன்னியர்சிவனைத்தியானித்துத்தெரிந்து தென்றிசையில் திருநாவலூரிலவதரித்த சுந்தரமூர்த்தியென்றும் வன்றொண்டரென்றுந் திருநாமம்பெற்றவர் சிவனது ஆஞ்ஞையால் வருகிறாரென்று தனதிருகரமுஞ்சிரமேற்குவித்து அத்திசையைநோக்கி வணங்கி ஆநந்தக்கண்ணீருடன் முழுதுநனைப்பச் செல்லும் போதுமற்றவர்கள் தங்களுக்குண்டாகிய சந்தேக

நிவர்த்தியாகும்பொருட்டு எங்களாண்டவராகிய
முநிவரோ சிவனது திருவடிகளையல்லாமல்வேறொ
ருதெய்வத்தினடிகளையும் மனதினாலுஞ் சிந்தியா
ததேவரீர் - இன்று வணங்குதற்குக் காரணமென்
னென உபமன்னியர் கேளுங்கள் பெரியோர்க
ளே பரமசிவன்றரிக்கப்பட்ட திருமாலையையும்
திருவெண்ணீற்றினையும் எடுத்துவருகின்றவர் அவ
ருடையபெயர் ஆலாலசுந்தரர் முற்காலத்திலொ
ருநாள் பரமசிவனுக்குத்தக்க மலர்களெடுக்கநந்
தனவனத்திற்குச் சென்றார்-அவர் செல்லுமுன்ன
மே பார்வதிதேவியாருக்கு மலர்கள்பறித்துவர
தோழிமார்களாகிய அநிந்திதையென்றும் கமலி
னியென்றும் இருபெண்கள்வந்து மலர்கள்கொய்
துகொண்டிருக்கும்போது தான்வந் துற்பவிக்க
மிகுந்ததவஞ்செய்த தென்றிசையானது வாழவும்
குற்றமற்ற திருத்தொண்டத்தொகை சொல்லவும்
வருகின்றவராகிய ஆலாலசுந்தரர் இதுகடவுளின
தருளென்றுகருதி அவ்விருவரையுங் கண்டிச்சை
கொண்டார் அப்பெண்களிருவரும் அவ்வாலால
சுந்தரரைக்கண்டிச்சித்தார்கள் பின்பு ஆலாலசுந்த
ரரும் பரமசிவனுக்குத்தக்க மலர்களை யெடுத்துக்
கொண்டுபோனார் அப்பெண்களும் பார்வதியா
ருக்குத்தக்கமலர்களை யெடுத்துக்கொண்டுபோனா
ர்கள் இவையெல்லாமறிந்த பரமசிவனார் ஆலால
சுந்தரரைப்பார்த்து நீபெண்களிடத்திச்சைவைத்
தபடியால் தென்தேயத்திற்போய்ச் சநநமெடுத்
து அந்தப்பெண்களோடும் ஆசைதீரும்படி கலந்
தனுபவிக்கக்கடவாயென்று கட்டளையிட ஆலால
சுந்தரர் இருகரங்களுங்குவித்து மநங்கலங்கி என்
னுடைய வபாக்கியத்தால்தேவர் திருவடிகளைவிட்
டு நீங்கும் அடியேன்விதிவிலக்குகளையறியாதவன்
ஆகையால் எளியேனைத் தடுத்தாட்கொள்ளவேண்
டுமென்று கேட்டுக்கொள்ள சுவாமியப்படியே
தடுத்தாட்கொள்வோமென்று கட்டளையிட்டருளி
யபின்பு ஆலாலசுந்தரரும் அநிந்திதையும் கமலி
னியுந்தென்றிசையிலவதாரஞ்செய்து இன்பத்தை
யநுபவித்தார்கள் அவர்களில் ஆலாலசுந்தரர் வரு
கிறாரென்று அவருடைய செய்திகளையெல்லாம்
வரன்முறையாகஉபமன்னிய மஹாமுநிவர் மற்ற
முநிவர்களுக்குச்சொல்ல அதைக்கேட்ட அம்மு
நிவர்கள் பாசபந்தங்களில் அகப்பட்டுத்தடுமாறு
கின்ற மானுடர்பிறப்பதற்கிடமான தென்றிசை
யானது மற்றத்திசைகளைப்பார்க்கிலுஞ் சிறந்தத
ற்கு அதுசெய்தபுண்ணியம் யாதென உபமன்னி
ய மஹாமுநிவர் என்பிதாவாகிய வியாக்கிரமபா
தரால் பூசித்த சிதம்பரமும் பூமிதேவிக் கிருதய
மாகிய திருவாரூரும் கம்பாநதிசூழ்ந்த காஞ்சீபு
ரமும் சிவனெழுந்தருளிய திருவையாறும் பிரள
யகாலத்துமழுங்காத தோணிபுரமும் மற்றும்பல
திவ்வியஸ்தலங்களும் தென்றிசையினிடத்திருக்கி
ன்றன இவ்விதமான தலங்களின்பெருமையுமித்
தலங்களிலேசிவபணிவிடைகள் செய்துபேறுபெ
ற்ற சிவனடியார்கள் பெருமையும் திருவாய்மலர்
ந்தருளினார் இந்தப்பிரகாரம்சுந்தரமூர்த்திசுவாமி
களால் திருவுளமகிழ்ந்தருளிய திருத்தொண்ட
த்தொகைப்படிசேக்கிழாரருளிச்செய்தபுராணத்
தை வாக்கியமாகச்சொல்லுகிறோம்.

---

## மநுச்சக்கிரவர்த்திசரித்திரம்.

எவற்றிற்குமுதல்வனாகியபெரியதவத்தையுடை
ய அகத்தியமுநிவனது கமண்டலத்தி னின்றும்
வெளிப்பட்ட பூமிதேவியின் மார்பிற்றங்கிய நித்
திலமாலையையொத்த காவிரியாற்றாற் சூழப்பெ
ற்ற பலவளங்களு நிறைந்துள்ள சோழநாட்டின்
மத்தியில் மிகுந்தபழமையானதும் இலக்குமியா
ற் பூசிக்கப்பெற்ற வன்னியும், கங்கையும், மதியு
ந்தங்கிய சிவந்த சடையினையுடைய பரமசிவன்
வசிக்கின்ற திருவாரூரென்னு நகர மொன்றுண்டு
அந்நகரத்தில் அநபாயச்சோழவம்சத்திற் பிறந்த
மநுச்சக்கிரவர்த்தி, மநுமுறைவழாது, செங்கோ
ல்செலுத்தி அசையாமணிகட்டி ஆறிலொருகட
மைவாங்கி அரசாளுங்காலத்தில் பரமசிவனது தி
ருவருளால் தம்முடையமனைவியார் திருவயிற்றில்
சிங்கக்குட்டிக்கொப்பாகிய வீதிவிடங்கனென்னு
ம் ஒருபிள்ளைபிறந்தது அநேகதவங்களைச்செய்து
அருமையாகப்பெற்ற ஒப்பற்ற அப்பிள்ளையான
து நாள்தோறும் பரமசிவத்தைப் பூசைசெய்யுமு
யற்சியிலிருந்து அவரருளினால் வடமொழிமுதலி
ய பலபாஷைகளுந் திருத்தமாகவோதி யானையே

ற்றங் குதிரையேற்றந் தநுர்வேதமுதலிய எல்லாவற்றையுங்கற்று வல்லவனாகி தன்னையருமையாகப் பெற்ற தந்தைமநமகிழ்ந்து அன்புகூரும்படிமேலான நற்குணங்களானிறையப்பெற்று இளவரசாகிவாழுகின்றநாளில் ஒருநாள் வெண்கொற்றக்குடையினையுடைய அரசனதுஅழகுமிகுந்த அரண்மனையினின்றும் ஆகாயத்தையளாவிய மாடமாளிகைகள் நெருங்கியவீதியில் அநேக அரசர் குமாரர்கள் தன்னைச்சூழ வாசனைதங்கிய மலர்மாலைகள் தொங்காநின்று குங்குமமணிந்த தோள்களையுடைய இராஜபுத்திரன் மிகுந்தசேனைகள் தன்னைச்சூழ இரதத்தின்மீதேறி முன்னர் வந்தியரும், சூதரும், மாகதரும், தன்வீரமுதலியவற்றைப்புகழ்ந்துசெல்ல ஒருபக்கத்தில் முரசுவாத்தியங்களும், ஒருபக்கத்தில் சங்கவாத்தியங்களு முழங்கச் செல்லும்போது ஒப்பற்றபெரிய தருமதேவதையானது தயையில்லாமல் நாலுவகைச்சேனைகளையுடைய சோழமஹாராஜனது அச்சமற்ற மநதினுண்மையைச்சோதிக்கவந்ததுபோல அங்குசெல்லுமனிதர்கள் தனதுவரவைக்காணாத வண்ணம் ஓரழகியபசுவின் புதிய இளங்கன்றானது துள்ளிக்கொண்டு அவ்வீதியின்வந்து அரசகுமாரன்தேர்க்காலிலகப்பட்டு இறந்தது.

அதைக்கண்ட தாயாகிய பசுவானது மனவருத்தமடைந்து துள்ளித்துடித்துக்கதறிக்கீழேவிழுந்தது, அதைக்கண்ட இராஜகுமாரன் ஐயோ அபாயம்வந்ததேயென்று சொல் தடுமாறி அத்துயரினால்வருந்தி யறிவழிந்து இந்தப்பசுவுங்கன்றும் என்னறிவின்பெருமைகெட அழித்துவிட்டதே இதற்கென்னசெய்வேன் என்று தேரினின்று மிழிந்து கீழேவிழுந்து அலறுகின்ற பசுவைப்பார்த்து உயிர்பதைத்துச் சோர்ந்து பூமியிலிறந்தகன்றை நோக்கிப் பெருமூச்சுவிட்டு அழுது நிலைபெற்றவிவ்வுலகத்தைக்காக்கும் மநுவென்கிற என்கோமானுக்கு உலகத்தில் இந்தப்பழிவந்து சம்பவிக்க நான்பிறந்தேனன்றோவென்றுசொல்லி இதனால்வந்தபாவத்தை பிராமணர்களிடத்திற்சென்று அவர்களால்செய்யத்தக்க யாகாதிகளால்நீக்கிக்கொள்வது அறமேயானால் எந்தையறிதற்குமுன்னர்செய்வேனென்று அந்தணர்முன்பாகச்சென்றான் அப்பொழுதுபசுவானது மிகவுந்தளர்ந்துபெருமூச்சுவிட்டு மநுச்சக்கிரவர்த்தி அரண்மனைவாயிலிற் கட்டிய ஆராய்ச்சிமணியினிடத்திற்போய் அதைக்கொம்பினாலடித்தது அவ்வோசையானது மநுச்சோழரது செவியிற்கேட்டவளவில் அவர்தம்பிள்ளைப்பிராணனைக் கொண்டுபோகவரும் இயமன் வாகனத்திற்கட்டிய மணியோசையோ வென்றுசொல்லி என்றுங்கேளாத மணியோசை செவியிற்புகுந்ததென்னவென்று சிங்காதனம்விட்டிறங்கி ஆராய்ச்சிமணிகட்டியிருக்கிறவாயில் வந்தார் காவலாளர் எதிராகவந்து ஆண்டவரே ஒருபசுவந்து மணியைக் கொம்பினாலாட்டிய தென்றார்கள் மநுச்சோழரானவர் அவர்கள் சொல்லைக்கேட்டு வருத்தமடைந்து பசுவைப்பார்த்து உங்கள் அசாக்கிரதையினாலே இதற்குத்துன்பமுண்டாயிற்றென்று கோபிக்க ஒருபழமையானமந்திரி எதிராகவந்து சுவாமீ வீதிவிடங்கன்தேரிலேறிப்போகும்போது இப்பசுவின்கன்று தேர்ச்சக்கிரத்திலகப்பட்டிறந்ததென அம்மந்திரி சொன்னவார்த்தையைக்கேட்ட இராஜாவானவர் மிகவு மநங்கலங்கி வியசனமடைந்தார் அவ்வாறு வியசனப்படு மநுச்சோழரது துக்கத்தைக்கண்டு மந்திரிகள் வணங்கி ஆண்டவரே வியசனப்படாதீர் அந்தப் பாவந் தீரும் படிக்கு பிராயச் சித்தமுண்டு அதுசெய்யுமென்றார்கள் அப்பொழுது சோழராசன் மந்திரிகளே நீங்கள் சொல்லுவது நியாயமல்ல பிராயச்சித்தம் பசுவடைந்த துன்பத்திற்கு மருந்தாகுமா பழிக்குப்பழி யென்பிள்ளையைக் கொடுப்பதே நியாயமென்று மநுச்சோழர் குமாரனைத் தம்மிடத்து வரவழைத்து ஒருமந்திரியைப்பார்த்து இந்தப்பிள்ளையைப்பசுவின்கன்று இறந்தவீதியிலேகிடத்தித் தேரை யவன்மார்பின் மேலே நடத்தென்று கட்டளைகொடுக்க மந்திரியும்விடைபெற்றுச்சென்று தானவ்வாறுசெய்யமநமில்லாமல் தன்பிராணனைவிட்டுவிட்டான்.

மந்திரியிறந்த செய்தியைக்கேட்ட மநுச்சோழர் பிள்ளையைத்தாமே யழைத்துக்கொண்டு பசுவின்கன்றிறந்த வீதியிற்சென்று தமதுகுலத்திற்கு ஓர்பிள்ளைதானிருக்கிறதென்பதை நினையாமற்றருமவழியிலேநடப்பதுதகுதியென்று, தன்குமாரனைக் கீழேகிடத்தித் தேருருளையானது பிள்ளைமார்பிலழுந்தும்படி தன்தேரைநடத்தினார். அச்செய்கையைக்கண்டு, உலகிலுள்ளோர் கண்ணீர் விட்டார்கள் தேவர்கள் மலர்மாரிபொழிந்தார்கள். அப்பொழுது பார்வதியும், பரமசிவனும், இடபாரூடராய்வந் தெதிர்நின்று, காக்ஷிகொடுத்து அநுக்கிரகஞ்செய்தார்கள். இறந்தபசுவின்கன்றுடனே, வீதிவிடங்கனாகிய விராஜகுமாரனும், மந்

திரியும், சிவனுடைய திருவருளினாலே உயிர்த்தெழுந்தார்கள். மநுச்சோழரானவர் மகனையெடுத்து மார்போடணைத்து மநமகிழ்ச்சி யடைந்தார். பார்ப்பதியும் பரமசிவனும் அந்தரமாக மறைந்தார்கள்.

திருச்சிற்றம்பலம்.

———:0:———

# தேவாசிரியமண்டபச்சிறப்பு.

பூதகணங்களுக்குத் தலைவராயும், புற்றைத்தமக்கிடமாகக் கொண்டவருமாகிய எவற்றிற்கு முதலாயுள்ள கடவுள்வாழாநின்ற அழகியஆலயத்துள் பிரகாசம்பொருந்திய மதிலையுடைய திருவாயிலின்முன்னர் பிரமன், இந்திரன், திருமால், முதலிய தேவர்கள் இடைவிடாது நிறைந்திருக்கின்ற தேவாசிரியமண்டபமானது, அடைந்தவரது துன்பத்தைநீக்காநின்ற அடியவர்களது திருமேனியிற் பூசிய திருநீற்றினாலும், அவரது நிறைந்த பரிசுத்தத்தினாலும் பஞ்சாக்ஷரவோசை பொலிதலினாலும், பரவியதிருப்பாற்கடலுக் கொப்பாயிருக்கின்றது, அதனிடத்து பரமசிவன் முன்னர்தானேவிரும்பி அடிமைகொண்ட அடியார்களும், தங்கள் கரங்களினாலே திருத்தொண்டு செய்யு முறைமையையுடையவர்களும், குற்றமற்ற திருமேனியில் பூசிய திருநீறுபோல் உள்ளம் பரிசுத்தமானவர்களும் பஞ்சபூதங்களு நிலைகெட்டுக் கலங்கினாலும் உமையையொருகூறாகவுடைய பரமசிவனது திருவடியை மறவாதவர்களும் செல்வமும் வறுமையுமில்லாத செல்வத்தையுடையவர்களும் ஓடும்பொன்னுமொன்றாக நினைப்பவர்களும், அன்போடு பரமசிவனை வணங்குதலேயன்றி, வீட்டினையும் விரும்பாதமநவலியால் விளங்குகின்றவர்களும்முத்தாரமுதலிய ஆரங்களும், கண்டிகைகளும், வஸ்திரங்களும், பாரமென்றெறிந்து பரமசிவனது பணிவிடையல்லது வேறொன்றினும் இச்சைவையாதவர்களும் ஆகிய இவ்வடியார்கள் நெருங்கியிருக்கின்ற இம்மண்டபத்திலுள்ள அடியவர்களது பெருமையை யென்னாற்சொல்லுந் தகைமையையுடையதன்றாயினும், ஆலாலசுந்தரர் சொல்லிய திருத்தொண்டத்தொகையி லுள்ளபடி சொல்லுகின்றேன்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சுந்தரமூர்த்திநாயனார்புராணம்.

தண்கயிலையதுநீங்கிநாவலூர்வாழ் சைவனார்சடையனார்தநயனாராய்
மண்புகழவருட்டுறையானோலைகாட்டி மணம்விலக்கவன்றொண்டாயதிகைசேர்ந்து
நண்பினுடனருள்புரியவாரூர்மேவி நலங்கிளரும்பரவைதோணயந்துவைகித்
திண்குலவும்விறன்மிண்டர்திறல்கண்டேத்துந் திருத்தொண்டத்தொகையருளாற்செப்பினாரே.

செப்பலருங்குண்டையூர்நெல்லழைத்துத் திருப்புகலூர்ச்செங்கல்செழும்பொன்னாச்செய்து
தப்பின்முதுகுன்றர்தரும்பொருளாற்றிட்டுத் தடத்தெடுத்துச்சங்கிலிதோள்சார்ந்துநாத
னைப்பிறனித்தூதுவந்தாறூடுகேறி யுறுமுதலைசிறுமதலையுமிழநல்கி
மெய்ப்பெரியகளிறேறியருளாற்சேர வேந்தருடன்வடகயிலைமேவினாரே.

ஸ்ரீகைலாசகிரியிலே, அகண்டபரிபூரண சச்சிதானந்த ஸ்வரூபியாகிய பரமசிவனானவர், ஆன்மாக்களுக்குஅருள்செய்யும்பொருட்டு, மாயாகாரியமாகிய எங்கள் சரீரம்போலாகாது சத்தியகாரியமாயுள்ள சரீரத்தை எடுத்து, தமது அருட்சத்தியாகிய பார்வதிதேவியோடு வீற்றிருப்பார். அக்கடவுளுக்குத் திருத்தொண்டுசெய்யும் அடியார்கூட்டத்திலே ஆலாலசுந்தரர் என ஒருவர்உளர். அவர் ஆதிகாலத்திலே ஒருநாள், பத்தர்கள்செய்யும் அருச்சனையை அவர்கள் முத்திபெற்று உய்யும்பொருட்டு அங்கீகாரஞ்செய்தருளுகின்ற அக்கடவுளுக்குத் தரிக்கும்பொருட்டு, புஷ்பங்களைக்கொய்வதற்கு நந்தனவனத்துக்குப் போனார் போனபோது, பார்வதிதேவியாருக்குத் தரிக்கும்பொருட்டு அந்த நந்தனவனத்திலே புஷ்பங்கொய்துகொண்டுநின்ற அவருடைய சேடியர்களாகிய அனிந்திதை கமலினிஎன்னும் பெயர்களை உடைய பெண்களிருவரையுங்கண்டு, அவர்கள்மேல் ஆசைவைத்தார். அவர்களும் ஆலாலசுந்தரரைக்கண்டு அவர்மேல் ஆசைகொண்டார்கள். பின்பு ஒருபிரகாரம் மனதைத்திருப்பி, புஷ்பங்களைக் கொய்துகொண்டு, ஆலாலசுந்தரர் சுவாமிசந்நிதானத்துக்கும், சேடியர்கள் தேவிசந்நிதானத்துக்கும், திரும்பிவிட்டார்கள். அப்பொழுது, சமஸ்த ஆன்மாக்களிடத்திலும் வியாபித்திருந்து அந்த அந்த ஆன்மாக்கள் மனம் வாக்குக் காயங்களினாலே செய்கின்ற கர்மங்களை அறிந்து அந்த அந்தக் கர்மங்களுக்கு எற்றபலங்களை ஊட்டி அக்கர்மங்களைத் தொலைப்பிக்கின்ற காருண்ணிய ஸ்வரூபியாகிய கடவுளானவர் ஆலாலசுந்தரரைநோக்கி, நீ பெண்கள்மேல் இச்சைகொண்டபடியால் தக்ஷிணபூமியிலே மானுடதேகம் எடுத்துப் பிறந்து அந்தப்பெண்களோடுபுணர்ந்து இன்பம் அனுபவிப்பாய் என்று திருவாய் மலர்ந்தருளினார். அதைக்கேட்ட ஆலாலசுந்தரர்மனங்கலங்கி, சந்நிதானத்திலே சாஷ்டாங்கமாக நமஸ்காரம்பண்ணி, எழுந்துநின்று அஞ்சலியஸ்தராகி, சுவாமீ! தேவரீருடைய அருமைத்திருவடிகளைப் பிரிதற்கு எதுவாகிய கொடும்பாவத்தைச் செய்தவனாகிய சிறியேன் மயக்கம்பொருந்திய மனிதப்பிறப்பை எடுத்து, செய்யவேண்டியது இன்னது என்றும் நீக்கவேண்டியது இன்னது என்றும் அறியாமல் பிரபஞ்சவாழ்க்கையிலே மயங்கும்போது, தேவரீர் வெளிப்பட்டுவந்து அடியேனைத்தடுத்து ஆட்கொண்டருளவேண்டும் என்று பிரார்த்திக்க; வேண்டுவார்வேட்டவைகளை ஈந்தருளுங் கடவுளும் அவ்வேண்டுகோளுக்கு இசைந்தருளினார்.

பின்பு ஆலாலசுந்தரர், பூமியிலே புண்ணியபூ

மியாகிய பரதகண்டத்திலே தமிழ்வழங்கும் நிலமாகிய தென்னாட்டைச்சேர்ந்த திருமுனைப்பாடிநாட்டிலே திருநாவலூரென்னுந் திருப்பதியிலே ஆதிசைவரென்னும் பிராமணகுலத்திலே சடையனாரென்னும் சிவாசாரியருக்கு அவருடைய மனைவியாராகிய கற்பிலேசிறந்த இசைஞானியார் என்பவரிடத்திலே, ஆன்மாக்கள் சைவசமயமேமெய்ச்சமயமென்று உணர்ந்து அதனை அனுசரித்து உய்யும்பொருட்டு, பிறந்தருளினார். பிறந்த அப்பிள்ளைக்கு நம்பியாரூரர் என்று நாமகரணஞ்செய்தார்கள். அந்தப்பிள்ளை ஒருநாள் வீதியிலே சிறுதேர் உருட்டி விளையாடும்போது, அந்தத்திருமுனைப்பாடி நாட்டுக்கு அரசராகிய நரசிங்கமுனையரென்பவர் அந்தப் பிள்ளையைக்கண்டு, அவர்மேல் ஆசைமிகுந்து, அவருடையதந்தையாராகிய சடையனாரிடத்துக்குப்போய், இந்தப்பிள்ளையை எனக்குத்தாருமென்றுகேட்டுப்பெற்றுக்கொண்டுபோய், அவரை அபிமானபுத்திரராகப் பாவித்துவளர்த்தார். அந்தப்பிள்ளை அரசரால் வளர்க்கப்படினும், தமது பிராமணவருணத்திற்கு உரிய ஒழுக்கத்தையே உடையவராகி வளர்ந்து, உரிய காலத்திலே உபநயனஞ்செய்யப்பெற்று, வேதங்களை அத்தியயனஞ்செய்து, சகலகலைகளிலும் மகாபாண்டித்திய முடையவராய், விவாகஞ்செய்தற்கு உரியபருவத்தை அடைந்தார்.

அதுகண்டு, தந்தையாராகிய சடையனார் ஆதிசைவர்குலத்திலே தம்முடைய கொள்வகைக்கு ஏற்பப்பந்துவாய்ப் புத்தூரில் இருக்கின்ற சடங்கவிசிவாசாரியரிடத்திலே, அவருடைய புத்திரிக்கும் தம்முடைய புத்திரருக்கும் விவாகம்பேசிவரும்பொருட்டு, சிலமுதியோர்களை அனுப்பினார். அவர்கள் சடங்கவிசிவாசாரிய ரிடத்திற்போய்ப் பேசி, அவர் உடன்பட்டதுகண்டு, சடையனாரிடத்துக்குத் திரும்பிப்போய்த் தெரிவித்தார்கள். அப்பொழுது சடையனார் மகிழ்ச்சிகொண்டு, விவாகத்துக்கு முகூர்த்தம்நியமித்து, தம்முடைய ஞாதிகள் சிநேகிதர்கள் யாவரையும் விவாகபத்திரம் அனுப்பி அழைப்பித்தார். பின்பு நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்திநாயனார் விவாகதினத்துக்கு முதற்றினத்திலே சமாவர்த்தனம்பண்ணி, ரக்ஷாபந்தனஞ்செய்து; மற்றாநாள் நித்தியகர்மங்களை முடித்துக்கொண்டு, மணக்கோலங்கொண்டு, குதிரைமேல் ஏறி, மகாஅலங்காரத்தோடு புத்தூரிலேசடங்கவிசிவாசாரியர் வீட்டிலே திருக்கல்யாணப்பந்தருக்கு முன்சென்று, குதிரையினின்றும் இறங்கி, உள்ளேபோய், ஆசனத்தில் இருந்தார்.

அப்பொழுது, ஊரும் பேரும் உருவும் இல்லாதவர் ஆயினும் ஆன்மாக்களுக்கு வினையினால் வந்த வாஸ்தவமாகிய ஊரையும் பேரையும் உருவையும் இருவினையொப்பாகிய பக்குவகாலத்திலே ஒழிக்கும்பொருட்டுக் கற்பிதமாகிய ஊரும் பேரும் உருவுங்கொண்டருளுகின்ற பரமசிவனானவர், தாம் கைலாசத்திலே சுந்தரமூர்த்திக்கு வாக்குத்தத்தம்பண்ணியபிரகாரம் அவரைப் பிரபஞ்சவாழ்க்கையிலே மயங்கவிடாமல் தடுத்து ஆட்கொண்டருளும்பொருட்டு, ஒருவயோதிகப்பிராமணவடிவங்கொண்டு, அவ்விடத்திலே எழுந்தருளிவந்து நின்று, இவ்விடத்தில் இருக்கின்றயாவர்களும் நான்சொல்லும் இவ்வார்த்தையைக்கேளுங்கள் என்றுசொன்னார். அப்படிச்சொல்லிய அந்த ஐயரை விவாகஞ்செய்யத்தொடங்கும் நம்பியாரூரரும் அங்கிருக்கின்ற மற்றப்பிராமணர்களும் பார்த்து, இவ்விடத்திலே நீர்சொல்ல விரும்பியதைச் சொல்லும் என்றார்கள். அதைக்கேட்ட ஐயர் நம்பியாரூரரைநோக்கி, எனக்கும் உனக்கும் ஒருவழக்கு இருக்கின்றது. அதை முடித்துக்கொண்டு உன்னுடைய விவாகத்தை நடத்து என்று அருளிச்செய்தார். நம்பியாரூரர் உமக்கும் எனக்கும் ஒருவழக்கு உளதாயின், அதைமுடித்தன்றி நான் விவாகஞ்செய்யேன். நீர் அவ்வழக்கு இன்னதெனத் தெரியும்படி சொல்லும் என்றுகேட்க, அந்த ஐயர் பிராமணர்களைப்பார்த்து, இந்தத்திருநாவலூரானாகிய நம்பியாரூரன் எனக்கு அடியவன் என்று சொல்லியருளினார். அதைக்கேட்ட நம்பியாரூரர் இந்த ஐயர்சொன்னவார்த்தை நன்றாயிருக்கின்றது என்று இகழ்ச்சியாகச்சொல்லிச்சிரிக்க, பிராமணவேடங்கொண்ட கடவுள் அவருக்குச்சமீபத்திலேபோய், அக்காலத்திலே உன்னுடையபாட்டன் எனக்கு எழுதித்தந்த அடிமையோலை இதுவே. அப்படியிருக்க, இந்தக்காரியத்தைக்குறித்து நீ பரிகாசம்பண்ணியது என்ன என்றார். உடனே நம்பியாரூரர் ஐயரைப்பார்த்து

பிராமணருக்குப் பிராமணர் அடிமையாதல் இன்றைக்கு நீயேசொல்லக்கேட்டோம். நீ பித்தனோ என்றுசொல்ல, ஐயர், நான்பித்தனானாலும் ஆகுக. பேயனானாலும் ஆகுக. நீ இப்போது எத்தனைவசைமொழிகளைச்சொன்னாய்! அவைகளினால் நான் சிறிதாயினும் வெட்கம் அடையேன். நீ என்னைச் சிறிதும் அறிந்திலை. இப்படிநின்று விளையாட்டுமொழிகள் பேசவேண்டாம்? அடிமைத்தொழில் செய்யவா என்றார். அப்பொழுது, நம்பியாரூரர், இவர் அடிமையோலை ஒன்று உண்டென்றாரே அதின் உண்மையை அறியவேண்டும் என்றுநினைத்து, ஐயரே! உம்முடைய ஓலையைக்காட்டும் என்று சொல்ல, ஐயர், நீயிந்தவோலையைப்பார்த்து நிச்சயிக்கத்தக்கவனோ, நான் இந்தச் சபையாருக்கு ஓலையைக்காட்டி மெய்யென்று அங்கீகாரஞ்செய்வித்தபின், எனக்கு ஊழியஞ்செய்தற்குமாத்திரம் தக்கவன் என்றார். அதுகேட்ட நம்பியாரூரர் கோபங்கொண்டு அவர்கையில் இருக்கும் ஓலையைப்பறிக்கும்படி அவருக்கு எதிரேவிரைந்து சென்றபோது, அவர் ஓடத்தாமும் ஓடி, அவரைப்பின்றொடர்ந்து பிடித்து, ஓலையைப்பறித்து, பிராமணர்கள் அடிமையாய் ஊழியஞ்செய்தல் என்ன முறையென்றுசொல்லிக் கிழிக்க, ஐயர் சுந்தரமூர்த்தியைப்பிடித்துக்கொண்டு, ஒருதரம் இது முறையோ என்று சத்தமிட, சமீபத்தில் நின்றவர்கள் அவ்விருவரையும் விலக்கி, உலகத்திலே ஒருகாலமும் நடந்திராத ஏற்பாட்டைக்கொண்டு வழக்காடுகின்றபிராமணரே ? நீர் எங்கே இருக்கிறவர் சொல்லும், என்றார்கள் அதற்கு ஐயர், நான் இந்தத் திருவெண்ணெய் நல்லூரில் இருக்கின்றவன் அதுநிற்க, இந்தநம்பியாரூரன் தருமவழிக்கு விரோதமாக வலாற்காரம்பண்ணி என்கையில் ஓலையைப்பறித்துக்கிழித்தவினாலே, தான் எனக்கு அடியவன் என்றதை ஸ்திரப்படுத்தினான் என்றார். அப்பொழுது,சுந்தரமூர்த்திநாயனார்,நீர் திருவெண்ணெய் நல்லூரில் இருக்கிறவராகில் இந்தவழக்கை அங்கேதானேபேசித் தீர்ப்புச்செய்யவாரும் என்றுசொல்ல, ஐயர் அதைக்கேட்டு, திருவெண்ணெய்நல்லூரில் இருக்கின்ற பிராமணர்களுக்கு முன்னே ஆதியில் எழுதப்பட்ட மூலவோலையைக்காட்டி நீ எனக்கு அடிமை என்பதைச்சாதிப்பேன் என்றுசொல்லி, தண்டைஊன்றிக்கொண்டு முன்னேநடந்தார். சுந்தரமூர்த்தியும் மற்றப்பிராமணர்களும் பின்னாகப்போனார்கள்.

ஐயர் தனக்குப்பின்வந்த சுந்தரமூர்த்தியோடும் மற்றப் பிராமணர்களோடும் திருவெண்ணெய் நல்லூரை அடைந்து, அங்கு இருக்கின்ற பிராமணர்களுடைய சபையிலேபோய், அவர்களைநோக்கி, அறிவால் அமைந்த பெரியோர்களே: திருநாவலூரில் இருக்கின்ற ஆரூரனானவன் நான் நீ எனக்கு அடிமையென்று காண்பித்த ஓலையைக்கிழித்துவிட்டு உங்களிடத்துக்கு வந்திருக்கிறான் என்றுசொல்லி முறைப்பாடுசெய்தார். அந்த அபியோகத்தைக்கேட்ட பிராமணர்கள் அவரைப்பார்த்து, பிராமணர்கள் அடிமையாதல் இவ்வுலகத்திலே இதுவரையிலும் இல்லை. ஐயரே, நீர் என்ன தப்புவார்த்தை சொன்னீர், என்றுசொல்ல, ஐயர் நான் பொய்வழக்குக் கொண்டுவரவில்லை. மெய்வழக்கே, கொண்டுவந்தேன். இவன் பறித்துக்கிழித்த ஓலை இவன்பாட்டன் தானும் தன்மரபினரும் எனக்கு அடிமையென்று எழுதித்தந்த அடிமையோலை என்றார். உடனேபிராமணர்கள் சுந்தரமூர்த்தியை நோக்கி, இவர் உம்முடைய பாட்டன் அடிமைசெய்தற்கு இசைந்து எழுதிக்கொடுத்த ஓலையைக்காட்டினாராகில், நீர் அதைப்பறித்துக் கிழித்ததனால் உம்முடைய பட்சம் சயம்பெறுமோ, இவர் தம்முடைய வழக்கை யாவரும் அங்கீகரிக்கும்படி சொன்னார். இனி உம்முடைய எண்ணம்யாது. என்றார்கள். அதற்குச்சுந்தர மூர்த்தி, வேதாகமம் முதலாகிய சமஸ்த சாஸ்திரங்களையும் உணர்ந்தமகான்களே ? நான் ஆதிசைவன் என்பது உங்கள் எல்லாருக்குந் தெரியும், அப்படியிருக்க, இந்தப்பிராமணர் தமக்கு என்னை அடிமையென்று சாதித்தாராகில், இதுமனசினால் அறிதல் கூடாத ஒருமாயையென்று நினைக்கவேண்டும் இதைக்குறித்து நான்யாதுசொல்வேன் இது என்னால் அறியப்படுதல்கூடாது என்றுசொல்ல, பிராமணர்கள்கேட்டு, அந்த ஐயரைப்பார்த்து நீர் இவரை உம்முடைய அடிமை என்றுசொல்லுகின்ற விவகாரத்தை எங்களுக்கு முன் உறுதிப்படுத்தவேண்டும். ஒரு விவகாரத்தை உண்மையென்று நிச்சயிப்பதற்கு, அனுபவம் லிகிதம் சாட்சி என்கின்ற மூன்று

ம்வேண்டும். ஆயினும், இந்த ஆரூரர் உமக்கு அ
டிமையென்பதற்கு அம்மூன்றில் ஒன்றாயினும்
காட்டும் என்றார்கள். அப்பொழுது ஐயர், இவன்
கிழித்த ஓலை மூலவோலையைப்பார்த்து எழுதிய
படியோலை. மூலவோலையோ என்னிடத்தில் இரு
க்கின்றது என்றுசொன்னார். உடனே பிராமணர்
கள், அதை எங்களுக்குக் காட்டும் என்றுசொல்ல,
ஐயர், ஆரூரன் அதையும்பறித்துக் கிழியாதபடி
செய்வீர்களாயின், அதைக்காட்டுவேன் என்றார்.
அதற்கு, பிராமணர்கள், நாங்கள் கிழிக்க விடோ
ம் என்று சொல்ல, ஐயர், மூலவோலையைக்கையி
ல் எடுத்தார். அப்பொழுது சபையாருடைய கட்
டளையினால் ஒரு கரணன் அவரைக்கும்பிட்டு அந்
த ஓலையைவாங்கி, சுருளா யிருக்கின்ற மடிப்பை
நீக்கிவிரித்து, சபையார் கேட்கும்படி திருநாவ
லூரில் இருக்கின்ற ஆதிசைவனாகிய ஆரூரன் என்கி
ன்ற நான் திருவெண்ணெய் நல்லூரில் இருக்கின்
ற பித்தனுக்குநானும் என்சந்ததியாரும் வழித்
தொண்டு செய்வதற்கு உள்ளும்புறமும் ஒப்ப உ
டன்பட்டு எழுதிக்கொடுத்தேன். இப்படிக்கு ஆ
ரூரன் என்றுவாசித்தான். பின்பு, அந்த ஓலையி
லே சாட்சிகளாகக் கையெழுத்து இட்டவர்கள்
தங்கள் கையெழுத் தென்றே ஒத்துக்கொண்டார்
கள். அதைக்கண்ட பிராமணர்கள் சுந்தரமூர்த்தி
யை நோக்கி, இது உம்முடைய பாட்டனுடைய
எழுத்தோ, பாரும் என்றுசொல்ல, ஐயர் அவர்க
ளைப்பார்த்து, இந்தச்சிறுவன் அடிமையோலையி
ல் எழுதப்பட்டிருக்கின்ற தன்பாட்டன் கையெ
ழுத்தைக் கண்டறியச் சக்தியுள்ளவனோ, இவன்பா
ட்டன் எழுதியவேறு கைச்சாத்து உண்டாகில், வ
ருவித்து, இதனுடன் ஒத்துப்பார்த்து, உங்கள் ம
னசிலே தோன்றிய தீர்ப்பைச் சொல்லுங்கள் எ
ன்றார். அதைக்கேட்ட பிராமணர்கள், சந்தேகந்
தெளியும்படி, சுந்தரமூர்த்தி சமுகத்திலே அவர்
பாட்டனார் எழுதிய கைச்சாத்து ஒன்று அழைப்
பித்து, அதின் எழுத்தையும் அடிமையோலையின்
எழுத்தையும் ஒத்துப்பார்த்து, இவ்விரண்டும் ஒ
த்திருக்கின்றன. இனி நீர் தப்பவழியில்லை. நீர்
இந்தப்பிராமணருக்குத் தோற்றுப்போனீர். ஆத
லால், அவர் இஷ்டப்படி அவருக்கு ஏவல்செய்
வதே கடன் என்றுசொல்ல, சுந்தரமூர்த்தி, விதி
முறைஇதுவேயானால், நான்இதற்கு உடன்படா
திருத்தல் கூடுமோ என்று சொல்லிநின்றார். அப்
பொழுது பிராமணர்கள் அந்த ஐயரைப்பார்த்து
நீர்காட்டிய அடிமையோலையிலே எங்கள்ஊரோ
உம்முடையஊராக எழுதப்பட்டிருக்கின்றது. ஆ
தலால், உமக்கு இவ்வூரிலே தலைமுறையாக இருக்
கின்ற வீடும் நிலையுள்ள ஆஸ்தியும் காட்டும் என்
றுசொல்ல, பிராமணவடிவங்கொண்ட கடவுள்,
இத்தனைவிருத்தர்களில் ஒருவரும் என்னுடைய வீ
டுமுதலியவற்றை அறியாமல் இருப்பீரானால், கா
ட்டுகிறேன். வாருங்கள் என்றுசொல்லி, சுந்தரமூ
ர்த்தியும் பிராமணர்களும் பின்னேவர, தாம் அவ்
வூரிலிருக்கின்ற திருவருட்டுறை என்னும் சிவாலய
த்தினுள்ளே போனார். பின்புசபையார் அவரைக்
காணாமல் திகைத்து நின்றார்கள்.

அப்பொழுது சுந்தரமூர்த்தியானவர், என்னை
அடிமைகொண்ட பிராமணர் எங்கள் கடவுளாகி
ய பரமசிவன் வீற்றிருக்கும் கோயிலினுள்ளேபுகு
ந்தது என்ன ஆச்சரியம், என்று நினைத்து, அத்திய
ந்த ஆசையோடும் தனியே அவரைத் தொடர்ந்து
போய்க்கூப்பிட, பரமசிவனானவர் தருமவடிவா
கிய இடபவாகனத்தின்மேலே பார்வதிசமேதரா
ய் வெளிப்பட்டு, சுந்தரமூர்த்திக்கு, நீ முன்னே
நமக்குத்தொண்டனாய் இருந்தாய். நீ பெண்கள்
மேல் இச்சைவைத்ததினால் நம்முடைய ஆஞ்ஞை
யினாலே பூமியிலே பிறந்தாய். இப்பொழுது
துன்பத்தைத்தருகின்ற சமுசார பந்தமானது உ
ன்னைத்தொடராதபடி, நாமேவலியவந்து உன்
னைத்தடுத்து ஆட்கொண்டோம் என்று திருவாய்
மலர்ந்தருளினார். இந்தப்பிரகாரமாக எழுந்த சத்
தத்தைக்கேட்டு, சுந்தரமூர்த்தியானவர் தன்னை ஈ
ன்றபசுவினது குரலைக்கேட்ட கன்றுபோல அல
றி, சரீரமுழுதும் உரோமப்புளகங் கொள்ள, இ
ரண்டு கண்ணில் நின்றும் ஆனந்தபாஷ்பம் பொ
ழிய, அடியற்றமரம்போல நிலத்திலே விழுந்து
நமஸ்கரித்து, எழுந்துநின்று, இரண்டுகைகளையு
ம் சிரசின்மேல் ஏறக்குவித்து, கனகசபையிலே
படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருள
ல் என்கின்ற ஐந்தொழில் ஆகியதிருநடனத்தைச்
செய்தருளுகின்ற சுவாமீ, தேவரீர் ஒன்றுக்கும்
பற்றாத சிறியேனை மார்ச்சாரசம்பந்தம்போல

வலியவந்து தடுத்தாட்கொண்ட காருண்ணியமகிமை இருந்தபடி என்னென்று சொல்லுவேன் என்றார்; அப்பொழுது, தம்மால்செய்யப்படும் கிரித்தியங்கள் ஒவ்வொன்றையும் தம்பயன்கருதாது பிறர்பயன் கருதியேசெய்கின்ற பரமசிவனானவர், தமிழ்நாட்டில் உள்ளவர்கள்தாமே மெய்ப்பொருளென்று உணர்ந்துதம்மை வழிபட்டு மும்மலத்தடைகளையும் நீங்கிப்பேரின்பம் பெற்று அநுபவிக்கவேண்டும் என்று தமது திருவுளத்திலே முகிழ்த்தபெருங்கருணையினாலே, சுந்தரமூர்த்தியை நோக்கி, நீ என்னோடு வன்சொற்களைச் சொல்லி வன்றொண்டன் என்கிற பெயரைப்பெற்றாய் நமக்கு அன்பினோடு செய்யத்தக்க அருச்சனையாவது பாடலேயாம் ஆதலால், நம்மேலே தமிழ்ப்பாட்டுகளைப்பாடு என்று அருளிச்செய்ய சுந்தரமூர்த்தி அஞ்சலியஸ்தராகி, தேவரீர் பிராமணவடிவங்கொண்டு என்னை வழக்கினால் வெல்லுதற்கு எழுந்தருளி வந்தமையை அறியாதசிறியேனுக்குப் பழைய அறிவைத்தந்து உலகவாழ்க்கையிலே மயங்காமல் உய்யும்படி செய்தருளிய கடவுளே! அடியேன் தேவரீருடைய அநந்த குணங்களில் எதையறிவேன், என்னசொல்லிப்பாடுவேன், என்றார். அதற்குக் கடவுள், நீ முன்னே என்னைப் பித்தனென்று சொன்னாய். ஆகையால் என்பெயர் பித்தனென்றே பாடு என்று சொல்லியருள, சுந்தரமூர்த்தியானவர் தம்மை ஆண்டருளிய பரமசிவன்மேல் "பித்தாபிறைசூடி" என்னும்சொற்றொடரை முதலாகக்கொண்ட திருப்பதிகத்தைப்பாடியருளினார்.

திருவெண்ணெய்நல்லூர்த்தேவாரம்-பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

பித்தாபிறைசூடிபெருமானேயருளாளா
வெத்தான்மறவாதேநினைக்கின்றேன்மனத்துன்னை
வைத்தாய்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளத்தாவுனக்காளாயினியல்லேனெனலாமே.

காரூர்புனலெய்திக்கரைகல்லித்திரைக்கையாற்
பாரூர்புகழெய்தித்திகழ்பன்மாமணியுந்திச்
சீரூர்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளாரூரனெம்பெருமாற்காளல்லேனெனலாமே.

திருச்சிற்றம்பலம்.

அதன்பின் கடவுளானவர் சுந்தரமூர்த்தியை நோக்கி, தொண்டனே; நீ இன்னும் நம்முடைய புகழைக்குறித்துப் பலவகையாகப்பாடு என்று அருளிச்செய்துஅந்தரத்தானமானார். அதுநிற்க, புத்தூரிலிருக்கின்ற சடங்கவிசிவாசாரியருடைய புத்திரியாரோவெனில், கலியாணந்தவிர்ந்ததினாலே சுந்தரமூர்த்தி நாயனாரையே தியானஞ்செய்து கொண்டிருந்து சிலகாலத்தின்பின் சிவலோகப்பிராப்தியானார்.

சுந்தரமூர்த்திநாயனார், திருவெண்ணெய் நல்லூரில் உள்ள திருவருட்டுறையென்னும் ஆலயத்தில் வீற்றிருக்கின்ற கடவுளானவர் தம்மை ஆட்கொண்டபின்பு, திருநாவலூருக்குப்போய்ப்பதிகம்பாடியருளினார்.

திருவெண்ணெய்நல்லூரும் திருநாவலூரும்-பண்-நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

கோவலனான்முகன்வானவர்கோனுங்குற்றேவல்செய்ய
மேவலர்முப்புரந்தீயெழுவித்தவனோரம்பினா
லேவலனார்வெண்ணெய்நல்லூரில்வைத்தென்னையாளுங்கொண்ட
நாவலனார்க்கிடமாவதுநந்திருநாவலூரே.

நாதனுக்கூர்நமக்கூர்நரசிங்கமுனையரைய
னாதரித்தீசனுக்காட்செயுமூரணிநாவலூரொன்
ரோதநற்றக்கவன்றொண்டனாரூரனுரைத்ததமிழ்
காதலித்துங்கற்றுங்கேட்பவர்தம்வினைகட்டறுமே.

திருச்சிற்றம்பலம்.

பின்பு பரமசிவன் வாசம்பண்ணுகின்ற திருத்துறையூருக்குச் சென்று அக்கடவுளைநோக்கி அடியேன் தீவினையினாலே அவமானநெறியிற் செல்லாமல் தடுத்தாட்கொண்டாய் அடியேனுக்கு த்தவநெறி தந்தருளென்று பவநெறிக்குவிலக்காகும் திருப்பதிகத்தைப்பாடியருளினர்.

திருத்துறையூர்த்தேவாரம்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

மலையாரருவித்திரண்மாமணியுந்திக்
குலையாரக்கொணர்ந்தெற்றியோர்பெண்ணைவடபாற்
கலையாரல்குற்கன்னியராடுந்துறையூர்த்
தலைவாவுனைவேண்டிக்கொள்வேன்றவநெறியே.

செய்யார்கமலம்மலர்நாவலர்மன்னன்
கையாற்றொழுதேத்தப்படுந்துறையூர்மேற்
பொய்யாத்தமிழூரனுரைத்தனவல்லார்
மெய்யேபெறுவார்கடவநெறிதானே.

திருச்சிற்றம்பலம்.

திருத்துறையூரைவணங்கி சிவபெருமான் எழுந்தருளிய பலதலங்களினுஞ்சென்று வணங்கி சிதம்பரத்தில் வீற்றிருக்கின்ற சபாநாயகரைத்தரிசிக்கவிரும்பி, பெண்ணைநதியைக்கடந்து, அஸ்தமயனகாலத்திலே திருவதிகையென்னுந் தலத்தினெல்லையிலேபோய், திருநாவுக்கரசுநாயனர் உழவாரத்தினலேபரமசிவனுக்குக்கைத்தொண்டுசெய்த இந்தஸ்தலத்திலேகால்மிதிக்க அஞ்சுகிறேன் என்றுசொல்லி, அதற்கு உள்ளே போகாமல் சமீபத்திலிருந்த சித்தவடமடத்திற்குப் போய், திருவதிகை வீரட்டானத்தில் வீற்றிருக்கும் கடவுளுடைய திருவடிகளைத் தியானித்துக்கொண்டு நித்திரைசெய்தார். நித்திரைசெய்யும் பொழுது, வீரட்டானேசுரர் ஒரு விருத்தப்பிராமணராகி அம்மடத்தினுள்ளே புகுந்து, சுந்தரமூர்த்திநாயனருடைய சிரசின்மேலேபாதங்களைவைத்துநித்திரைசெய்பவர்போலக் காட்டியருளினர்.

அப்பொழுது சுந்தரமூர்த்திவிழித்து,ஐயரே! என் உம்முடைய பாதத்தை என் சிரசின்மேல் வைத்தீர், என்றுசொல்ல ஐயர், என்னுடைய மூப்பினாலே நீர் தலைவைத்திருக்கும் திசையை அறியாமல் அப்படிச் செய்துபோட்டேன் என்றார் சுந்தர மூர்த்திநாயனர் அதற்கு ஒத்துக் கொண்டு, தம்முடையசிரசை வேறொருதிக்கில் வைத்துக்கொண்டு நித்திரைசெய்தார். சுவாமி அவ்விடத்திலும் சென்று சுந்தரமூர்த்தியுடைய சிரசின்மேலே பின்னும் தம்முடைய பாதத்தைநீட்ட சுந்தரமூர்த்தி, இங்கேயென்னைப்பலமுறைமிதித்த நீர் யாவர்? என்று கேட்டார். உடனே சுவாமி, என்னை நீயறியாயா, என்றுசொல்லி மறைந்தருளினார். அதுகண்டு, சுந்தரமூர்த்தி, தம்மைமிதித்தவர் கடவுளென்று அறிந்து, நான் இறுமாப்படைந்து ஆண்டவரை அறியாமல் என்னசெய்தேன், என்று சொல்லி, வீரட்டானேசுரர்மேல் திருப்பதிகம் பாடினர்.

கரியதென்பதும், அங்ஙனமாகையால் அவ்வன்பு செய்தற்கேயன்றி மற்றொன்றிற்கும் சமயமில்லை என்பதும், அது செய்யுமிடத்தும் நமக்கு ஓர்சாமர்த்தியமுளதெனக்கருதி அதனைமுன்னிடாது திருவருளையே முன்னிட்டு நின்று செய்யவேண்டும் என்பதுமே வேதாகமாதி சமஸ்தசாஸ்திரங்களானும் துணியப்படும் மெய்ப்பொருள் என்று சந்தேக விபரீதமறத்துணிந்து கொண்டார். அந்த யதார்த்தமாகிய துணிவுதோன்றவே அவருக்குச் சிவனிடத்தே மெய்யன்புகலைதோறும் வளர்வதாயிற்று.

ஒருநாள் அவர்தம்மோடு அத்தியயனம் செய்கின்ற பிள்ளைகளோடும் அவ்வூரவர்களுடையபசுநிரைகளுடன் கூடிச்சென்றபொழுது ஓரிற்றுப் பசு ஒன்று மேய்ப்பானாகிய இடையனைக் குத்தப்போயிற்று. அவ்விடையன் சிறிதும் பாவத்துக்கு அஞ்சாமல் அப்பசுவைக்கோலினால் அடித்தான். சாஸ்திரஞானம் உள்ளபடி கைவந்த விசாரசருமர் அதுகண்டு மிகுந்த பதைபதைப்போடும் அவன்சமீபத்திற்சென்று, தீமைபயத்தலின்றிநன்மையேபயத்தலால் விவேகிகளால் பாவமென்று சிறிதும் இகழப்படாது பெரும்புண்ணியமெனநன்குமதிக்கப்படுகின்ற மகாகோபங்கொண்டு பின்னும் அடியாதபடி அவனைத்தடுத்துநின்று, பசுக்களின் வரலாற்றையும், அவைதரும் பஞ்சகவ்வியங்கள் சிவனுக்கு அபிஷேகஞ்செய்தற்கு உபயோகித்தலையும், சைவசாதனமாகிய விபூதிக்கு மூலம் அவற்றின்சாணமாதலையும், சிந்தித்து, அந்தப்பசுக்களைத்தாமே மேய்க்கும்படிவிரும்பி, அவ்விடையனைநோக்கி, இப்பசுநிரையை இனி நீமேய்க்க வேண்டியதில்லை; நானே மேய்ப்பேன் என்றார். இடையன் அதைக்கேட்டுப்பயந்து கும்பிட்டுக்கொண்டுபோய்விட்டான். விசாரசருமர் பசுக்களை அவ்வவற்றிற்குரிய பிராமணர்களின் சம்மதிபெற்று தினந்தோறும் மண்ணியாற்றங்கரையில் இருக்கின்ற காடுகளிலும், வயலோரங்களிலும், புல்லுநிறைந்திருக்கும் இடத்திற் கொண்டுபோய், வேண்டுமட்டும் மேயவிட்டும் தண்ணீரூட்டியும் வெய்யிலெறிக்கும்பொழுது நிழலிருக்குமிடங்களிலே செலுத்தியும் நன்றாகக்காப்பாற்றி, சமித்துக்கள் ஒடித்துக்கொண்டு, அஸ்தமயனத்துக்கு முன் அந்தந்தப்பசுக்களை அவரவர்வீட்டுக்கு ஓட்டிக்கொண்டுபோய்விட்டு, தம்முடைய வீட்டுக்குப்போவார்.

இப்படிச்செய்யுங்காலத்திலே பசுநிரைகளெல்லாம் அழகோடு மிகப்பெருகி, போசனபானங்களிலே குறைவில்லாமையால் மகிழ்ச்சியடைந்து, இராப்பகல் மடிசுரந்து பாலைமிகப்பொழிந்தன. பிராமணர்கள் நித்தியஓமாகுதியின் பொருட்டு விட்டிருக்கின்ற தங்கள்பசுக்கள் விசாரசருமர்மேய்க்கத்தொடங்கியபின் முன்னினும் அதிகமாகக்கறக்கக்காண்கையால் மிகுந்த சந்தோஷத்தை அடைந்தார்கள். பசுக்கள் எல்லாவகை யுபசரிப்பினாலும் அளவிறந்தகளிப்பை அடைந்து வீட்டிலே கட்டப்பட்டிருக்கின்ற தங்கள் கன்றுகள் பிரிந்தாலும் சிறிதும் வருத்தமுறுதவைகளாகி, மிகுந்த அன்போடு தங்களைமேய்க்கின்ற விசாரசருமர் சற்றுயினும் பிரிவாராகில் அப்பிரிவாற்றாமல் தாய்போல உருகி, அவர்சமீபத்திலேசென்றுகனைத்து மடிசுரந்து ஒருவர் கறக்காமல் தாமே பால் பொழியும். அதுகண்டவிசாரசருமர் அப்பால் பரமசிவனுக்குத் திருமஞ்சனமாந் தகுதியுடைமையைநினைந்தார், நினைக்கவே அவருக்குச் சிவார்ச்சனையினிடத்தே அத்தியந்த அபிலாஷை தலைப்பட்டது. உடனே அவர் மண்ணியாற்றின் கரையிலிருக்கின்ற ஒருமணற்றிட்டியிலே ஆத்திமரத்தின்கீழே மணலினாலே ஒருசிவலிங்கங்குவித்து; கோயிலும் கோபுரமும்மதிலும்வகுத்து, ஆத்திப்பூமுதலிய புஷ்பங்களும் பத்திரங்களும்பறித்துப்பூங்கூடையிலிட்டுக்கொண்டுவந்து வைத்துவிட்டு, புதியகுடங்களைத்தேடி வாங்கிக்கொண்டுவந்து கறவைப்பசுக்கள் ஒவ்வொன்றினிடத்திலும் சென்று முலையைத்தீண்டினார். அவைகள் கனைத்துப்பாலைப்பொழிந்தன. பாலினாலேநிறைவுற்ற அக்குடங்களைக் கொண்டுபோய் ஆலயத்திலேவைத்து, பத்திரபுஷ்பங்களால் சுவாமியை அருச்சித்து, பாலினால் அபிஷேகஞ்செய்தார், பரமசிவன் அவ்விலிங்கத்தினின்று அவ்விசாரசருமர் அன்போடு செய்யும் அருச்சனையை அங்கீகாரம் செய்தருளினார், விசாரசருமர் சிவபூசைக்கு அங்கமாகிய திருமஞ்சனம் முதலியபொருள்களுள், கிடையாதவைகளை மானசமாகக்கிடைத்தனவாகக்கொண்டு நிறை

வுசெய்து விதிப்படி அருச்சித்துவணங்கிவந்தார், பசுக்கள் அபிஷேகத்தின் பொருட்டு அவ்விசாரசருமர் கொண்டுவரும் குடங்கள் நிறையப் பாலைச் சொரிந்தும், பிராமணர்க்கும் முன்போலக் குறைவுதீரப் பாலைக்கொடுத்துவந்தன. இப்படிநெடுநாளாகப் பார்ப்பவர்களுக்கு விளையாட்டுப்போலத் தோன்றுகின்ற சிவார்ச்சனையைச்செய்து வரும்பொழுது, அதைக்கண்ட ஒருவன் அதின் உண்மையை அறியாதவனாகி, அதை அவ்வூர்ப் பிராமணர்களுக்குத் தெரிவித்தான். அவர்கள் அதைச்சபையாருக்குத்தெரிவிக்க, சபையார் எச்சதத்தனை அழைத்து, பிராமணர்கள் ஓமாகுதியின் பொருட்டுப் பால்கறக்கும்பசுக்களைஎல்லாம் உம்முடையபுத்திரனாகிய விசாரசருமன் அன்புடனே மேய்ப்பவன்போலக்கொண்டுபோய்ப் பாலைக்கறந்து விருதாவாக மணலிலேசொரிந்து விளையாடுகின்றான் என்றார்கள். எச்சதத்தன் அதைக்கேட்டுப்பயந்து, சிறுபிள்ளையாகிய விசாரசருமன்செய்கின்ற இந்தச்செய்கையை இதற்குமுன் நான் சிறிதாயினும் அறிந்திலேன், அக்குற்றத்தை நீங்கள் பொறுத்துக்கொள்ளவேண்டும் என்றுகுறையிரந்து வணங்கி இனி அவன் அப்படிச்செய்வானாயின் அக்குற்றம் என்மேலதாகும் என்றுசொல்லி, அச்சபையாரிடத்திலே அனுமதிபெற்றுக்கொண்டு வீட்டுக்குப்போய்விட்டான்.

மற்றநாட் காலையில் அந்தச் சமாசாரத்தைச் சோதித்தறியவிரும்பி, விசாரசருமர் பசுமேய்க்கப்போனபின்பு, அவர் அறியாதபடி அவர்பின்னேசென்றான். விசாரசருமர் பசுக்களை ஓட்டி மண்ணியாற்றின் மணற்றிட்டியிலேகொண்டு போனதைக்கண்டு, எச்சதத்தன் அருகில் இருந்த ஒரு குராமரத்தில் ஏறி, அங்கேநிகழ்வதை அறியும்படி ஒளித்திருந்தான், விசாரசருமர் ஸ்நானம்பண்ணி முன்போல மணலினாலேகோயிலும் சிவலிங்கமும் செய்து, பத்திரபுஷ்பங்கள் பறித்துக்கொண்டு வந்து வைத்து, பின்புபாற்குடங்களைக் கொண்டு வந்து தாபித்து அருச்சனைக்கு வேண்டிய பிறவற்றையும் அமைத்து, மிகுந்த அன்பினோடு பூசைக்கு ஆரம்பித்து, சிவலிங்கத்துக்குப் பத்திரபுஷ்பங்களைச்சாத்தி, பாற்குடங்களை எடுத்து அபிஷேகம்பண்ணினார். குராமரத்தில் ஏறியிருந்த எச்சதத்தன் அதைக்கண்டு மிகுந்தகோபங் கொண்டு, சீக்கிரமாக இறங்கிப்போய்த் தன்கையிலிருக்கின்ற தண்டினால் அவ்விசாரசருமருடையமுதுகிலே அடித்துக் கொடுஞ்சொற்களைச் சொல்ல அவருடையமனம் பூசையிலேயே முழுவதும்பதிந்துகிடந்தபடியால் அது அவருக்குப் புலப்படவில்லை. பின்னும் எச்சதத்தன் கோபங்கொண்டு பலமுறையடிக்க, விசாரசருமர் அவ்வடியாலாகிய வருத்தந்தோன்றப் பெறாதவராகி, அபிஷேகத் திருத்தொண்டினின்றுந் தவறாதிருந்தார்.

அவருடைய உள்ளன்பை அறியாத எச்சதத்தன் மிகக்கோபித்து திருமஞ்சனப் பாற்குடத்தைக் காலினால் இடறிச் சிந்தினான் உடனே விசாரசருமர் அதைக்கண்டு, அதுசெய்தவன் பிதாவும் பிராமணனும் குருவுமாகிய எச்சதத்தனென்பதை அறிந்தும் அவன்செய்தது அதிபாதகமாகிய சிவாபராதமாதலால் அவன்காலைத் துணிக்கக்கருதித் தமக்குமுன்கிடந்த ஒருகோலை எடுக்க அதுமழுவாயிற்று அதினாலே அவன்கால்களைவெட்டினார். சிவபூசைக்குவந்த அவ்விடரை நீக்கினவராகிய விசாரசருமர்முன்போல அருச்சனைசெய்ய பரமசிவன் உமாதேவியோடும் இடபாரூடராய்த் தோன்றியருளினார். விசாரசருமர் அதுகண்டு மனங்களித்து விழுந்து நமஸ்கரித்தார். பரமசிவன் அவரைத் தம்முடைய திருக்கரங்களினால் எடுத்து, நீ நம்பொருட்டு உன்னைப்பெற்ற பிதாவை வெட்டினாய் இனி உனக்கு நாமேபிதா என்று அருளிச்செய்து அவரை அணைத்து அவருடைய சரீரத்தைத் தடவி உச்சிமோந்தருளினார்சிவனுடைய திருக்கரத்தினாலே தீண்டப்பட்ட அவ்விசாரசருமருடைய திருமேனி சிவமயமாகித் திவ்வியப்பிரகாசத்தோடு விளங்கிற்று. பரமசிவன் அவரைநோக்கி நாம் நம்முடைய தொண்டர்களுக்கெல்லாம் உன்னைத் தலைவனாக்கி, நாம்ஏற்றுக் கொண்டஅமுதும் பரிவட்டமும்புஷ்பமும் உனக்கே கிடைக்கும்படி சண்டேசுரபதத்தைத்தந்தோம் என்று திருவாய்மலர்ந்து, தம்முடைய சடையிலே தரித்திருக்கின்ற கொன்றைமாலையையெடுத்து அவருக்குச் சூட்டியருளினார். அவ்விசாரசருமர் சமஸ்தரும் ஆரவாரிக்கவும் எவ்விடத்தும் புஷ்பமழைபொழியவும் சிவகணங்கள் பாடியா

டிக் களிகூரவும் வேதங்கள் கோஷிக்கவும் நானு பேதவாத்தியங்கள் முழங்கவும் சற்சமயமாகிய சைவசமயம் நிலைபெறும்படி பரமசிவனைக்கும் பிட்டு அவராலேதரப்பட்ட சண்டேசுரபதத்தை அடைந்தார். எச்சதத்தர் சிவத்துரோகம்செய்தும் சண்டேசுரநாயனாராலே தண்டிக்கப்பட்டு அக்குற்றம்நீங்கிச் சுற்றத்துடன் சிவலோகத்தை அடைந்தார்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

நான்காவது

# திருநின்றசருக்கம்.

## திருநாவுக்கரசுசுவாமிகள்புராணம்.

போற்றுதிருவாமூரில்வேளாண்டொன்மைப்பொருவில்கொறுக்கையரதிபர்புகழனார்பான்
மாற்றருமன்பினிற்றிலதவதியாமாதவத்துதித்தபின்புமருணீக்கியாருந்
தோற்றியமண்சமயமுறுதுயரநீங்கத்துணைவரருடரவந்தசூலைநோயாற்
பாற்றருநீளிடரெய்திப்பாடலிபுத்திரத்திற்பாழியொழித்தரனதிகைப்பதியில்வந்தார்.

வந்துதமக்கையரருளானீறுசாத்திவண்டமிழானோய்தீர்ந்துவாக்கின்மன்னாய்
வெந்தபொடிவிடம்வேழம்வேலைநீந்திவியன்சூலங்கொடியிடபம்விளங்கச்சாத்தி
யந்தமிலப்பூதிமகனரவுமாற்றியருட்காசுபெற்றுமறையடைப்புநீக்கிப்
புந்திமகிழ்ந்தையாற்றிற்கயிலைகண்டுபூம்புகலூரரன்பாதம்பொருந்தினாரோ.

திருமுனைப்பாடி நாட்டிலே திருவாமூரிலே வேளாளர்குலத்திலே கொறுக்கையர்குடியிலே புகழனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர்மனைவியார்பெயர் மாதினியார். அம்மாதினியார்வயிற்றிலே திலகவதியார்என்கின்ற புத்திரியார் பிறந்தார். அவர்பிறந்து சிலவருஷம்சென்றபின், சைவசமயம் அபிவிர்த்தியாகும்படிமருணீக்கியார்என்கின்ற புத்திரர் அவதரித்தார். அவருக்குத்தந்தையார் உரியபருவத்திலே வித்தியாரம்பம் செய்வித்தார் மருணீக்கியார், தந்தையாருக்குப் பெருமகிழ்ச்சியுண்டாகும் படி பலகலைகளையும் கிரமமாகக் கற்றுவல்லராயினார் திலகவதியார்க்குப் பன்னிரண்டுவயசு ஆனபொழுது அப்புகழனார் மரபிற்கு ஒத்தமரபினை உடையவரும் சிவபத்தியிலே சிறந்தவரும், இராஜா விடத்திலே சேனுபதியுத்தியோகம் செய்பவரும், ஆகிய கலிப்பகையார்என்பவர்,அப்புகழனாரிடத்திலேசிலமுதியோர்களை அனுப்பி திலகவதியாருக்கும் தமக்கும்மணம்பேசுவித்தார். புகழனார் அதற்கு இசைந்தமை கண்டு அம்முதியோர்கள் மீண்டு சென்று கலிப்பகை யாருக்குத் தெரிவித்தார்கள் கலிப்பகையார் தாம் விவாகம் செய்தற்குமுன் தம்முடைய அரசனது ஆஞ்ஞையினலே சேனைகளோடும் சில நாளிலே அவன் பகைஞராகிய வடதேசத்தரசரிருக்கு மிடத்தைச்சேர்ந்து அவர்களோடு நெடுநாள் யுத்தம் செய்தார். அங்கே அப்படி நிகழுங்காலத்திலே இங்கே புகழனார் தேகவியோகம் அடைந்தார். அப்பொழுது அவர் மனைவியாராகிய மாதினியார் சககமனம் செய்தார். அவர்கள் பிள்ளைகளாகிய திலகவதியாரும் மரு

ணிக்கியாரும், சுற்றத்தார்களோடு மிக மனக்க வலையுற்று சுற்றத்தாருள் அறிவால் அமைந்தபெரியோர்கள் ஒருவாறுதேற்ற, தேறி தந்தைதாயர்களுக்குச் செய்யவேண்டிய அந்தியகர்மங்களை முடித்தார்கள்! இங்கே இப்படிநிகழ,அங்கேகலிப்பகையார் யுத்தகளத்திலே தம்முடைய பூதவுடம்பைவிட்டுப் புகழுடம்பைப் பெற்றுக்கொண்டார். அந்தச் சமாசாரம் திலகவதியாருடைய சுரோத்திரேந்திரியத்துக்குப் புலப்பட அவர் என்னுடைய பிதா மாதாக்கள் என்னை அவருக்குமணஞ்செய்துகொடுக்க உடன்பட் டிருந்தமையால் இவ்வுயிர் அவருக்கே உரியது ஆதலால், இவ்வுயிரை அவருயிரோடு இசைவிப்பேன் என்று சாவத்துணிந்தார். அதுகண்ட மருணிக்கியார்வந்து அத்திலகவதியாருடைய இரண்டு பாதங்களிலும் விழுந்து அழுது, அடியேன் எங்கள் பிதாமாதாக்கள் இறந்தபின்னும் உம்மையே அவர்களாகப் பாவித்துப் பூசிக்கலாம் என்றன்றோ உயிர்வைத்துக்கொண் டிருக்கின்றேன், அடியேனைத் தனியே கைவிட்டிறப்பீராயில், அடியேன் உமக்கு முன்னமே இறந்துவிடுவேன் என்றார். திலகவதியார் அதைக்கேட்டு, தம்பியார் உயிரோடு இருக்க வேண்டும் என்னும் ஆசையால் தமது கருத்தைத்தடுத்து உயிர்தாங்கி, வேறொருவரையும் விவாகஞ்செய்து கொள்ளாமல் சீவகாருண்ணியம் உள்ளவராகி வீட்டிலே தவஞ் செய்துகொண்டு இருந்தார்.

மருணிக்கியார் யாக்கை நிலையாமையையுஞ்செல்வ நிலையாமையையும் நினைந்து தருமஞ்செய்ய விரும்பி, அன்புடனே திரவியங்களைச் செலவழித்து, அறச்சாலைகளையும் தண்ணீர்ப்பந்தர்களையும் அமைத்தார், சோலைகளைவைப்பித்தார், குளங்களைத் தோண்டுவித்தார் விருந்தினரை உபசரித்தார், புலவர்களுக்குக் கனகமாரி பொழிந்தார், பிரபஞ்சவாழ்வினது அநித்தியத்துவத்தை அறிந்து இல்வாழ்க்கையிலே புகாமல் எல்லாவற்றையும் துறந்தார். சமஸ்த சமயங்களுள்ளும் சற்சமயம் இது என்று அறியுமறிவு அவருக்குத் தலைப்படவில்லை, அவர் பாடலிபுத்திரம் என்னும் நகரத்திற்சென்று சமணர்களுடையபள்ளியையடைந்து அங்குள்ள சமணர்களுடைய போதனாசக்தியினாலே அவர்கள் அனுசரிக்கின்ற ஆருகதசமயமே முத்தியை அடைதற்குத் தகுந்த நெறியென்று துணிந்து; அந்தச்சமயத்திலே பிரவேசித்தார். பிரவேசித்த அம்மருணிக்கியார் அந்தச்சமண சமயநூல்கள் எல்லாவற்றையும் கற்று அவைகளிலே மகாபாண்டித்தியம் உடையவராயினார், அதுகண்ட சமணர்கள் அவருக்குத் தருமசேனர் என்று பெயரிட்டு அவரைத் தங்கள் மதாசாரியராகக்கொண்டு வழிபட்டார்கள். அவர் தமது வித்தியா சாமர்த்தியத்தினாலே பௌத்தர்களை வாதிலே வென்று புகழ்பெற்று ஆருகதசமயாசாரியர்களுக்குள்ளே சிரேஷ்டராய் இருந்தார் அதுநிற்க

திருவாமூரிலே இருந்த திலகவதியார் சிவனிடத்திலே பத்திமிகுந்து சிவபுண்ணியங்கள் செய்ய விரும்பி. கெடிலநதிக்கு வடகரையில்இருக்கின்ற திருவதிகை வீரட்டானம் என்னும் திருப்பதியிற்சென்று பரமசிவனை வணங்கி, சிவசின்னங்களைத்தரித்து தினந்தோறும் சூரியோதயத்துக்கு முன் கோயிலின் உள்ளும் புறமும் திருவலகிடுதல் கோமயத்தினாலே மெழுகுதல் நந்தனவனங்களிற்சென்று புஷ்பங்களைப் பறித்துக்கொண்டு வந்து மாலை தொடுத்துச் சுவாமிக்குச் சாத்தக்கொடுத்தல் முதலாகிய சிவபுண்ணியங்களைச் செய்துவந்தார், செய்துவரும்நாளிலே தம்முடைய தம்பியாராகிய மருணிக்கியார் கபடமார்க்கமாகிய ஆருகதத்திலே பிரவேசித்தமையை நினைந்து துக்கசாகரத்தில் அமிழ்ந்தி வீரட்டானேசுரரை வணங்கி சர்வாபீஷ்டவரதரே தேவரீர் அடியேனை ஆட்கொள்பவர் என்பது சத்தியமாயில்தவமென்றுசொல்லிப் பாயை இடுக்கித் தலைமயிரைப்பறித்தெறிந்து விட்டு நின்றுகொண்டே உண்கின்ற சமணர்களுடைய கபடமார்க்கமாகிய படுகுழியிலே விழுந்த என்னுடையதம்பியை அதினின்றும் தூக்கிக் காப்பாற்றியருள வேண்டும் என்று பலமுறைவிண்ணப்பஞ் செய்தார் பரமசிவன் திலகவதியாருக்குச்சொப்பனத்திலே தோன்றி தபோதனையே நீ உன்மனக்கவலையை ஒழி உன்னுடையதம்பி துறவியாகி நம்மை அடையும் பொருட்டுப் பூர்வசன்மத்திலே தவஞ்செய்திருக்கின்றான் அந்தத் தவத்தின் அற்பக்குற்றத்தினாலே அந்நியமதத்திலே பிரவேசித்தான் இனி அவனைச் சூலைநோயினால் வருத்தி ஆட்கொள்வோம் என்றுசொல்லி மறைந்தருளினார்.

பரமசிவன்சொல்லியருளியபடியே அவருடைய திருவருளினாலே, தருமசேனருடைய வயிற்றிலே கொடியசூலைநோய் உண்டாகிக் குடலைக்குடைதலுற்றது. அதனால் அவர்வருந்தி நடுக்கமுற்

று சமண்பாழியறையில் விழுந்தார். தமக்குக்கை வந்த சமணசமய மந்திரோச்சாரணத்தால் தடுக்கவும், அச்சூலைநோய் தடைப்படாமல்மேற்கொண்டது, மேற்கொள்ளவே, சர்ப்பவிஷந் தலைக்கொண்டாற்போல மயங்கி மூர்ச்சை அடைந்தார். அதுகண்டசமணர் பலர்வந்துகூடி இந்தச் சூலைநோய்போலக் கொடியநோய்முன்னொருபோதும் கண்டறியோம் இதற்குயாது செய்வோம் என்று துக்கமுற்று பின் கமண்டலத்தில் இருக்கின்ற ஜலத்தை அபிமந்திரித்துக் குடிப்பித்தார்கள் அதனாலே தணியாமையால், மயிற்பீலிகொண்டு காலளவுந் தடவினார்கள் அதினாலுந் தணியாமல் சூலைநோய் முன்னினும் அதிகப்பட தருமசேனர் அதைச்சகிக்கலாற்றாதவராய்த்துன்பப்பட்டார் சமணர்கள் அதுகண்டு ஐயோ! இதற்குநாம் யாதுசெய்வோம் என்று மனங்கலங்கி, இந்நோயை நீக்குதற்கு நாம்வல்லமல்லேம் என்றுசொல்லிக்கொண்டு, அவரைக்கைவிட்டுப்போயினார்கள். பின் தருமசேனர் தம்முடைய சகோதரியாராகிய திலகவதியாரைநினைந்து, அவரோதமக்கு உதவிசெய்யவல்லர் எனத்துணிந்து. தம்முடைய சமாசாரத்தை அவருக்கு உணர்த்தும்பொருட்டு தம்முடைய பாகுகனை அவரிடத்துக்கு அனுப்பினார் அப்பாகுகன் திருவதிகையிற்சென்று அத்திலகவதியாரை ஒரு நந்தனவனத்துக்குச் சமீபத்திலேகண்டுவணங்கி, நான் உம்முடைய தம்பியார்ஏவலினால் இவ்விடத்துக்குவந்தேன் என்றுசொல்ல திலகவதியார், தம்பியாருக்கு யாதாயினும் தீங்கு உண்டா என்றார். அதற்கு அவன் ஆம் அவர் கொடிய சூலைநோயினால் மிகவருந்துகின்றார் சமணர்கள் எல்லாரும் அந்நோயைத்தீர்த்தற்கு வன்மை இன்மையால், அவரைக்கைவிட்டிட்டார்கள் அவர் அதுகண்டு. என்னைநோக்கி அந்தச் சமாசாரத்தைச் சகோதரியாராகிய உமக்குத் தெரிவித்து தாம் உய்யும் நெறியைக் கேட்டுக்கொண்டு இரவிலே தம்மிடத்துக்கு வரும்பொருட்டு என்னை. ஏவினார் என்றான் திலகவதியார், பதிதராகிய சமணர்களுடைய பள்ளிக்கு நான்வரேன், இதைத்தம்பிக்குச் சொல்லு என்றார். அதுகேட்டபாகுகன் மீண்டு தருமசேனரிடத்திற்சென்று, அதைத்தெரிவிக்க; தருமசேனர் இனி இதற்கு யாதுசெய்வேன் என்று சோகித்தார்.

அப்பொழுது சிவனுடைய திருவருள் கூடுதலால் திருநாவுக்கரசுசுவாமிகள் இந்தத் துர்ச்சமயமாகிய ஆருகதமார்க்கப் பிரவேசத்தால் என்னை வருத்தும் இந்நோய்நீங்கும்படி சற்சமயமாகிய சைவசமயத்தை அனுசரிக்கின்ற திலகவதியாருடைய திருவடிகளை அடைவேன் என்றுகருதினார் அக்கருத்துப்பிடித்தெழுப்ப எழுந்து சமணர்களுடைய ஸ்தானத்தைக்கடந்து உடுத்தபாயையும் உறியில் உற்ற கமண்டலத்தையும் மயிற்பீலியையும் நீக்கி வஸ்திரந்தரித்து, தமக்குப் பற்றுக்கோடாகச் கைதந்து வருகின்றவர்களைப் பற்றிக்கொண்டு, ஒருவருங்காணாதபடி இரவிலே ஆருகதமார்க்கப் பிரவேசத்தால் தமக்குக்கிடைத்தவைகளில் சூலைநோய் ஒன்றுமாத்திரம் உடன்றொடர திருவதிகையிற்சென்று திலகவதியாருடைய திருமடத்தை அடைந்து அவருடைய திருவடிகளை நமஸ்கரித்து எங்கள்குலத்தார்செய்த தவப்பயனெல்லாம் திரண்டு ஒருவடிவெடுத்தாற்போலும் அம்மே அடியேன் கொடியசூலைநோயைச் சகிக்கலாற்றாமையால், உம்மையே கதியென்று அடைந்தேன் இனிநான் உய்ந்து கடைத்தேறும்வழியை அருளிச்செய்யும் என்றுசொல்லி, பாதத்திலேவிழுந்து அயர்ந்தார் திலகவதியார் தம்பியாரைநோக்கி தமக்குச் சொப்பனத்திலே பரமசிவன் அருளிச்செய்தபடி முடித்ததைநினைந்து, மனங்கசிந்துருகி அவரை அஞ்சலிசெய்துகொண்டு, அறியாமையினாலே பரசமயப்படுகுழியில்விழுந்து கொடுந்துயரத்தை அனுபவிக்கின்ற தம்பியாரே எழுந்திரும் என்றார். தம்பியார் சூலைநோயுடனே நடுக்கமுற்று எழுந்து, அஞ்சலிசெய்தார். திலகவதியார் இதுபரமசிவனுடையதிருவருளே தம்முடையதிருவடிகளையடைந்த மெய்யன்பர்களுக்கு இன்னருள்புரியும் அக்கடவுளையே வணங்கி அவருக்கே திருத்தொண்டுசெய்யும் என உபதேசித்தார். உடனே மருணீக்கியார் அவ்வுபதேசத்தை ஏற்றுக்கொண்டு, வணங்கிநிற்க திலகவதியார் திருவருளைநினைந்து அவருக்கு விபூதியைப் பஞ்சாக்ஷரத்தை ஓதிக்கொடுத்தார். மருணீக்கியார் மிகுந்த ஆசையோடுவணங்கி, அவ்விபூதியைவாங்கி, சரீரமுழுதிலும் அணிந்துகொண்டார்.

திலகவதியார் திருப்பள்ளியெழுச்சியிலே திருவலகும் திருமெழுக்குத் தோண்டியும் எடுத்துக்கொண்டு. கோயிலுக்குத்தம்பியாரை அழைத்துக்கொண்டுபோனார் மருணீக்கியார் வீரட்டானேசுரரைப் பிரதக்ஷிணஞ்செய்து சந்நிதானத்திலே விழுந்து நமஸ்கரித்து எழுந்துநின்று, அவரு

டைய திருவருளினாலே தமிழ்ச்செய்யுள்பாடும் சக்தி உண்டாகப்பெற்று, தம்முடைய சூலைநோய் நீங்கும்பொருட்டும் பிற்காலத்திலே அன்போடு ஓதுகின்ற யாவருடையதுன்பமும் நீங்கும்பொருட்டும், பரமசிவன்மேல் "கூற்றாயினவாறுவிலக்ககிலீர்" என்னும் வாக்கியத்தை முதலிலுடைய திருப்பதிகத்தைப்பாடி யருளினார்.

திருவதிகைவீரட்டானம் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

கூற்றாயினவாறுவிலக்ககிலீர்கொடுமைபலசெய்தனநானறியேன்
ஏற்றாயடிக்கேயிரவும்பகலும்பிரியாதுவணங்குவனெப்பொழுதுந்
தோற்றாதென்வயிற்றினகம்படியேகுடரோடுதொடக்கிமுடக்கியிட
வாற்றேனடியேனதிகைக்கெடிலவீரட்டானத்துறையம்மானே.

போர்த்தாயங்கோரானையினீருரிதோல்புறங்காடரங்காநடமாடவல்லா
யார்த்தானரக்கன்றனைமால்வரைக்கீழடர்த்திட்டருள்செய்தவதுகருதாய்
வேர்த்தும்புரண்டும்விழுந்தும்மெழுந்தாலென்வேதனையானவிலக்கிவிடா
யார்த்தார்புனல்சூழதிகைக்கெடிலவீரட்டானத்துறையம்மானே.

திருச்சிற்றம்பலம்.

உடனே சூலைநோய் நீங்கிற்று. அப்பொழுது மருணீக்கியார் தமக்கு உயிரையும் தந்து முத்திநெறியையும் தந்த பரமசிவனுடைய திருவருளாகிய கடலில் அமிழ்ந்தி, திருமேனிமுழுதிலும் உரோமாஞ்சிதங்கொள்ள, இரண்டுகண்ணில் நின்றும் ஆனந்தபாஷ்பஞ்சொரிய, நிலத்திலேவிழுந்து புரண்டு சமணசமயப்படுகுழியிலே விழுந்து எழுமாறு அறியாது மயங்கிய பாவியேன் பரமசிவனுடைய திருவடியை அடைதலாகிய இந்தப் பேரின்பவாழ்வைப் பெறும்படி செய்த சூலைநோய்க்கு என்னபிரதியுபகாரம் செய்வேன் என்றார். இப்படிநிகழும்பொழுது வீரட்டானேசுரருடைய திருவருளினால், நீ அற்புத சின்மய மதுரமாகிய தேவாரப்பதிகத்தைப் பாடினபடியால், உனக்கு நாவுக்கரசு என்னும்பெயரே சத்தலோகங்களினும் வழங்குக என்று சமஸ்தருக்கும் ஒரு வியப்புத்தோன்றும்படி ஒரு அசரீரிவாக்கு ஆகாயத்திலே தோன்றிற்று அதைக்கேட்ட திருநாவுக்கரசுசுவாமிகள் பரமசிவன் இத்தனை நெடுங்காலமாகத் தம்மை நிந்தித்த சிறியேனுக்கு இந்தப்பெருவாழ்வைத்தந்தருளினாரே என்று களிகூர்ந்து, அத்தன்மையனாகிய இராவணனுக்கு அருளிய கருணையின் மெய்த்தன்மையை அறிந்து துதிப்பதையே மேற்கொண்டுவணங்கினார். திருநாவுக்கரசுசுவாமிகள் சமணசமயம் பொய்மார்க்கம் என்பது யாவருக்கும் புலப்படும்படி சைவசமயத்திலேபிரவேசித்து அருள்பெற்றபடியால் உலகம்உய்ந்தது என்றுசொல்லி, திருவதிகையிலுள்ள சமஸ்தசனங்களும் களிப்புற்றார்கள் திருநாவுக்கரசுசுவாமிகள் மனம் வாக்குக் காயம் என்னும் திரிகரணங்களாலும் திருத்தொண்டுசெய்யவேண்டும் என்னும் ஆசைமிகுதலால், சிவசின்னங்களைத்தரித்துக்கொண்டு, தியானமறுவுணர்வும் தடையின்றியெழுகின்ற ஸ்துதிரூபமாகிய வாசகமும் உழைவாரப்பணிவிடையும் உடையராயினார். திலகவதியார் தம்முடையவேண்டுகோளின்படி பரமசிவன் தம்முடைய தம்பியாரை ஆட்கொண்ட பெருங்கருணைத்திறத்தைநினைந்து மகிழ்ந்துவணங்கினார்.

இந்தச்சமாசாரத்தைப் பாடலிபுரத்தில் இருக்கின்ற சமணர்கள்கேள்வியுற்று பொறாமைகொண்டு மாறுபட்ட பலசமயங்களையும் வாதில்வென்று எங்கள்சமயத்தை ஸ்தாபித்ததருமசேனர் தமக்குவந்த சூலைநோய் இங்கே ஒருவராலும் நீங்காமையால் உய்யும் நெறியைநாடித் திருவதிகையிற்சென்று முன்போலச் சைவத்திலே பிரவேசித்து அந்நோய்நீங்கி உய்ந்துவிட்டார். இனி எங்கள்சமயம் அழிந்துபோயிற்று என்று துக்கித்து, தலையும் மயிலியுந்தாழ ஓரிடத்திலே ஒருங்குகூடினார்கள். கூடியசமணர்கள், தருமசேனருக்கு வந்த சூலைநோய் எங்கள் ஒருவராலும் நீங்காமல் சைவமதப்பிரவேசத்தால் நீங்கிவிட்ட உண்மையை எங்கள் அரசன் அறிந்தானாகில், எங்கள்மேற் கோபங்கொண்டு, தானும் சைவனாகி, எங்கள் விருத்தியையும் தவிர்ப்பான், இனி இதற்கு யாதுசெய்

வோம் என்று சொல்லித்தங்களுக்குள்ளே ஆலோசித்து, ஒரு சம்பிரதாரணை செய்துகொண்டு, பல்லவராஜனுடைய நகரத்திற் சென்று அரண்மனையினுள்ளேபுகுந்து,அவ்வரசனை நோக்கி, எங்களெல்லாருக்குந் தலைவராய் இருந்த தருமசேனர், தம்முடைய சகோதரியாராகிய திலகவதியார் சைவசமயத்தில் நிற்கிறபடியால், தாமும் அவர்போலாகவிரும்பி, தமக்குச் சூலைநோய் வந்ததாகக் காட்டி; அது நம்மாலே தீர்ந்திலது என்று அவரிடத்திற்சென்று முன்போலச் சைவசமயத்திலே பிரவேசித்து, நம்முடைய கடவுளை நிந்தைசெய்தனர் என்றுசொன்னார்கள். உடனேபல்லவராஜன் கோபங் கொண்டு, இதற்கு யாதுசெய்யலாம் என்றான். அதுகேட்டசமணர்கள், உத்தமமாகிய தங்கள் சமய மகிமையைக்கெடுத்து உம்முடைய ஆஞ்ஞையையும் கடந்த அந்தத்தருமசேனரைநீர் அழைப்பித்துத் தண்டிக்கவேண்டும் என்றார்கள். அப்பொழுது அரசன் மந்திரிமாரைநோக்கி,இம்முனிவர்களாற் சுட்டப்பட்ட தீயோனைப் பிடித்துக்கொண்டு வாருங்கள் என்று ஆஞ்ஞாபித்தான்.

உடனே மந்திரிமார்சேனைகளோடும் புறப்பட்டு, திருவதிகையை அடைந்து, திருநாவுக்கரசு சுவாமிகளிடத்திற் சென்று, எங்கள் அரசன் இன்றைக்கு உம்மை அழைத்துக்கொண்டு வரும்படி எங்களை அனுப்பினான். வாரும் என்றார்கள் அது கேட்ட திருநாவுக்கரசுசுவாமிகள் பரமசிவன்மேலே "நாமார்க்குங்குடியல்லோம்" என்னும்வாக்கியத்தை முதலிலுடைய திருத்தாண்டகத்தைப் பாடியருளினார்.

மறுமாற்றத்திருத்தாண்டகத்தேவாரம்.

திருச்சிற்றம்பலம்.

நாமார்க்குங்குடியல்லோநமனையஞ்சோநரகத்திலிடர்ப்படோநடலையில்லோம்
ஏமாப்போம்பிணியறியோம்பணிவோமல்லோமின்பமேயெந்நாளுந்துன்பமில்லைத்
தாமார்க்குங்குடியல்லாத்தன்மையானசங்கரனற்சங்கவெண்குழையோர்காதிற்
கோமாற்கேநாமென்றுமீளாவாளாய்க்கொய்ம்மலர்ச்சேவடியிணையேகுறுகினோமே.

நாவாரநம்பனையேபாடப்பெற்றோநாணற்றார்நள்ளாமேவிள்ளப்பெற்றோம்
ஆவாவென்றெமையாள்வானமரர்நாதனயனொடுமாற்கறிவரியவனலாய்நீண்ட
தேவாதிதேவன்சிவனென்சிந்தைசேர்ந்திருந்தான்றென்றிசைக்கோன்றானேவந்து
கோவாடிக்குற்றேவல்செய்கென்றாலுங்குணமாகக்கொள்ளோமெண்குணத்துள்ளோமே.

திருச்சிற்றம்பலம்.

நாம் நீங்கள் அழைத்தபடியே வரக்கடவேமல்லேம் என்றார். அதுகேட்ட மந்திரிமார்கள் அவரை வணங்கிப்பிரார்த்தித்து அழைக்க, அவர் அடியேனுக்கு வரும் அபாயங்களுக்கெல்லாம் பரமசிவன் இருக்கிறார் என்று போதற்கு உடன்பட்டார். அவர்கள் அழைத்துக்கொண்டுபோய், அரசன் சமுகத்திற்சென்றுஅறிவித்தார்கள். அரசன்அதைக்கேட்டு, பக்கத்திலிருந்த சமணர்களை நோக்கி, இனி அவனுக்கு யாதுசெய்வோம் என்று கேட்க, சமணர்கள் நீற்றறையில்விடவேண்டும் என்றார்கள். அரசன் சமீபத்தில் நின்ற பணிவிடைக்காரர்களைநோக்கி, அவனை இவர்கள் சொல்லியபடியே செய்யுங்கள் என்று ஆஞ்ஞாபிக்க, அவர்கள் அந்நாயனாரைக்கூட்டினையுடைய நீற்றறையினுள்ளே விட்டுக்கதவைப்பூட்டினார்கள். திருநாவுக்கரசுசுவாமிகள் பரமசிவனுடையதிருவடிநிழலைத்தலைக்கொண்டு சிவனடியார்களுக்கு இவ்வுலகத்திலே துன்பம் வருவதுண்டோ என்று அக்கடவுளைத்தியானித்துத் தொழுதுகொண்டு அந்தநீற்றறையினுள்ளே இருந்தார்.

தனிக்குறுந்தொகைத்தேவாரம்.

திருச்சிற்றம்பலம்.

மாசில்வீணையுமாலைமதியமும், வீசுதென்றலும்வீங்கிளவேனலு
மூசுவண்டறைபொய்கையும்போன்றதே, யீசனெந்தையிணையடிநீழலே.

வெறகிற்றீயினன்பாலிற்படுநெய்போன், மறையநின்றுளன்மாமணிச்சோதியான்
உறவுகோனட்டுணர்வுகயிற்றினான், முறுகவாங்கிக்கடையமுன்னிற்குமே. திருச்சிற்றம்பலம்.

அந்நாயனார் பரமசிவனுடையதிருவடிநீழலாகப் பாவித்த அந்நீற்றறை வீணுகானமும் சந்திரனும் தென்றலும் இளவேனிலும் பொய்கையும் போலக்குளிர்ந்தது. ஏழுநாட்சென்றபின் பல்லவராஜன் சமணர்களை அழைத்து நீற்றறையைத் திறந்துபாருங்கள் என்று சொல்ல அவர்கள் நீற்றறையைத்திறந்து நாயனார் யாதொரு ஊனமும் இன்றிக் களிப்புற்றிருத்தலைக்கண்டு ஆச்சரிய மடைந்து அரசனிடத்திற்சென்று இவன் முன்னே நம்முடைய சமயத்தில் இருந்துசெய்த மந்திர சாதகத்தினுலே வேவாமற் பிழைத்துக் கொண்டான் இனி இவனுக்கு நஞ்சு ஊட்டுவதே தகும் என்றார்கள். அரசன் அப்படியே செய்யுங்கள் என்றுசொல்ல அவர்கள் நாயனாருக்கு நஞ்சுகலந்த பாற்சோற்றை உண்ணக் கொடுத்தார்கள் நாயனார் அவர்களுடைய வஞ்சனையை அறிந்து நஞ்சை அமுதாகக்கொண்ட கடவுளுடைய அடியார்களுக்கு நஞ்சும் அமுதாம் என்று நஞ்சுகலந்த அந்தப்பாற்சோற்றை உண்டு இருந்தார் சமணர்கள் அதைக்கண்டு இவனுக்கு நஞ்சும் அமுதமாயிற்று இவ்விடத்திலே இவன் பிழைப்பானுயில் நமக்கெல்லாம் நாசமுண்டாகும் என்று பயந்து அரசனிடத்திற் சென்று நாம் நஞ்சைச் சோற்றிலேகலந்து உண்பித்தும் நம்முடைய சமயநூல்களிலே கற்றுக்கொண்ட மந்திர வலியினுலேபிழைத்துவிட்டான். அவன் இறவாதிருப்பானுகில் எங்கள் உயிரும் உம்முடைய அரசாட்சியும் நீங்குவது திடம் என்றார்கள். அரசன் அதைக்கேட்டு இனி அவனைக்கொல்லுதற்கு உபாயம்யாது என்று கேட்க சமணர்கள் உம்முடைய யானையை அவனுக்கு எதிரேவிடுவதே உபாயம் என்றார்கள் அரசனும் அப்படிச்செய்யும்பொருட்டு ஆஞ்ஞாபிக்க, துஷ்டர்களாகிய சைனர்கள் நாயனாருக்கு எதிரே யானையைக்கொண்டுவந்து விட்டார்கள். நாயனார் சிறிதும்பயமின்றி, பரமசிவனுடைய திருவடிகளைச் சிந்தித்து அவ்வானையை நோக்கி "சுண்ண வெண்சந்தனச்சாந்து" என்னும் வாக்கியத்தை முதலிலுடைய திருப்பதிகத்தை எடுத்து ஒவ்வொரு செய்யுளின் இறுதியிலும் "கெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நா, மஞ்சுவதியாதொன்றுமில்லை யஞ்சவருவதுமில்லை" என்பதை அமைத்துப்பாடினார்.

திருக்கெடிலவீரட்டானத்தேவாரம் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

சுண்ணவெண்சந்தனச்சாந்துஞ்சுடர்த்திங்கட்சூளாமணியும்
வண்ணவுரிவையுடையும்வளரும்பவளநிறமு
மண்ணலரண்முரணேறுமகலம்வளாயவரவுந்
திண்ணென்கெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நா
மஞ்சுவதியாதொன்றுமில்லை யஞ்சவருவதுமில்லை.

நரம்பெழுகைகள்பிடித்துநங்கைநடுங்கமலையை
யுரங்களெல்லாங்கொண்டெடுத்தானென்பதுமொன்றுமலற
வரங்கள்கொடுத்தருள்செய்வான்வளர்பொழில்வீரட்டஞ்சூழ்ந்து
நிரம்புகெடிலப்புனலுமுடையாரொருவர்தமர்நா
மஞ்சுவதியாதொன்றுமில்லை யஞ்சவருவதுமில்லை.

திருச்சிற்றம்பலம்.

யானையானது அந்நாயனாரை வலஞ்செய்து எதிராக நிலத்திலே தாழ்ந்து இறைஞ்சி எழுந்து அப்புறம்போக அதன்மேலிருக்கின்ற பாகர்கள் அதனை அங்குசத்தினுலே குத்தித்திருப்பி அவரைக் கொல்லவேண்டும் என்கின்ற குறிப்பைக்காட்டினார்கள். அது அப்படிச்செய்யாமல் துதிக்கையினால் அவர்களை எடுத்துவீசிக்கொன்றுவிட்டு வெவ்வேறிடங்களிலுள்ள சமணர்களைத் தேடித்தேடி ஓடி அவர்களைத் தள்ளிமிதித்துக் கிழித்தெறிந்து கொன்று அந்நகரத்தில் உள்ளவர்கள் எல்லாரும் கலங்கும்படி அரசனுக்கு ஆகுலத்தைவிளைவித்தது. அவ்யானைக்குத்தப்பிய சமணர்கள் எல்லாரும் மானமழிந்து மயங்கி மனம்வருந்தி அரசனையடைந்து தருமசேனன் எங்கள் சமயநூல்களிலே கற்றுக்கொண்ட மந்திரத்தின்பலத்தினுலே நாங்கள்விட்ட யானையைக்கொண்டே எங்கள்வலிமை

யைச்சிதைத்தான் என்றுசொல்லிப் புலம்பினார்கள் அரசன்கோபங்கொண்டு இனி அவனுக்குயாது செய்யவேண்டும் என்றுகேட்க சமணர்கள் அவனைக் கல்லோடுசேர்த்துக் கயிற்றினாலேகட்டிக் கடலிலே தள்ளவேண்டும் என்றார்கள் அரசன்கொலைத்தொழில்செய்வோரைநோக்கி தருமசேனனைக்காவலோடுகொண்டுபோய் ஒருகல்லோடுசேர்த்துக் கயிற்றினாலேகட்டி ஒருபடகில் ஏற்றி சமுத்திரத்திலேவிழும்படி தள்ளிவிடுங்கள் என்று ஆஞ்ஞாபித்தான். கொலைத்தொழில் செய்வோர் அதைக்கேட்டு, சமணர்களும் உடன்செல்ல, அச்சம்சிறிதுமில்லாத திருநாவுக்கரசுசுவாமிகளைக்கொண்டுபோய், அரசன்சொல்லியபடியே கடலிலே தள்ளிவிட்டுத்திரும்பினார்கள்.

சமுத்திரத்திலே தள்ளிவிடப்பட்ட திருநாவுக்கரசுசுவாமிகள் அடியேனுக்கு யாதுநிகழினும் நிகழுக அடியேன் சுவாமியை ஸ்தோத்திரம்பண்ணுவேன் என்றுநினைந்து, "சொற்றுணைவேதியன்" என்பதை முதலிலுடைய நமச்சிவாயப்பதிகத்தைப்பாடியருளினர்.

நமச்சிவாயத்திருப்பதிகம் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

சொற்றுணைவேதியன்சோதிவானவன், பொற்றுணைதிருந்தடிபொருந்தக்கைதொழக்
கற்றுணைப்பூட்டியோர்கடலிற்பாய்ச்சினும், நற்றுணையாவதுநமச்சிவாயவே.

மாப்பிணைதழுவியமாதோர்பாகத்தன், பூப்பிணைதிருந்தடிபொருந்தக்கைதொழ
நாப்பிணைதழுவியநமச்சிவாயப்பத், தேத்தவல்லார்தமக்கிடுக்கணில்லையே.

திருச்சிற்றம்பலம்.

பின் சமுத்திரத்திலே கல்லானது நாயனார்மேற்பக்கத்திலிருக்கத் தெப்பமாய்மிதந்தது. கட்டியகயிறோ அறுந்துபோயிற்று, வருணபகவான் கல்லே சிவிகையாக அந்நாயனாரைத்தாங்கிக்கொண்டு திருப்பாதிரிப்புலியூர் என்னும் சிவஸ்தலத்திலே சேர்த்தான். நாயனார் அந்தத்திருப்பதியினின்றும் அரகரவென்னுமோசையுடன் தம்மை எதிர்கொண்ட சிவனடியார்களோடு ஆலயத்திற்சென்று, சுவாமியைவணங்கித் திருப்பதிகங்கள்பாடிக்கொண்டு, அங்கே சிலநாள் இருந்தார்.

திருப்பாதிரிப்புலியூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஈன்றாளுமாயெனக்கெந்தையுமாயுடன்றோன்றினராய்
மூன்றாயுலகம்படைத்துகந்தான்மனத்துள்ளிருக்க
வேன்றாரிமையவர்க்கன்பன்றிருப்பாதிரிப்புலியூர்த்
தோன்றாத்துணையாயிருந்தனன்றன்னடியோங்களுக்கே.

திருந்தாவமணர்தந்தீநெறிப்பட்டுத்திகைத்துமுத்தி
தருந்தாளிணைக்கேசரணம்புகுந்தேன்வரையெடுத்த
பொருந்தாவரக்கனுடல்நெரித்தாய்பாதிரிப்புலியூ
ரிருந்தாயடியேனினிப்பிறவாமைவந்தேன்றுகொளே.

திருச்சிற்றம்பலம்.

பின்திருவதிகை வீரட்டானேசுரரைத் தரிசிக்கவேண்டும் என்கின்ற ஆசையினால் அவ்விடத்தினின்றும் புறப்பட்டு, திருமாணிக்குழியையும் திருத்திணைநகரையும் வணங்கிக்கொண்டு, திருக்கெடிலநதியைக்கடந்துசென்றார். அந்நாயனார் சமணர்கள்செய்த இடர்கள் அனைத்தையும் ஜயித்துவருதலைக்கேள்வியுற்ற திருவதிகைவாசிகள் சமஸ்தரும் அவ்வூரைமிக அலங்கரித்து, மங்கலவாத்தியங்கள்முழங்க அவரை எதிர்கொண்டு நமஸ்கரித்தார்கள் விபூதியை உத்தூளனம்செய்த திருமேனியையும் தாழ்வடத்தையும் சிவனுடைய திருவடிகளைமறவாத சித்தையையும் ஆனந்தபாஷ்பம்பொழிகின்ற கண்களையும் திருப்பதிகங்கள்தோன்றுகின்ற திருவாயையுமுடையநாயனார், தம்மை எதிர்கொண்ட சனங்களோடு ஆலயத்திற்சென்று சுவாமியைவணங்கித் திருத்தாண்டகம்பாடியருளினார்.

திருவீரட்டானம் - ஏழைத்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

வெறிவிரவுகூவிளநற்றொங்கலானைவீரட்டத்தானைவெள்ளேற்றினானைப்
பொறியரவினானைப்புள்ளூர்தியானைப்பொன்னிறத்தினானைப்புகழ்தக்கானை
யறிதற்கரியசீரம்மான்றன்னையதியரையமங்கையமர்ந்தான்றன்னை
எறிகெடிலத்தானையிறைவன்றன்னையேழையேனான்பண்டிகழ்ந்தவாறே.

தொல்லைவான்சூழ்வினைகள்சூழப்போந்து தூறறியேனாறறியேன்சுடராய்நின்று
வல்லையேயிடர்தீர்த்திங்கடிமைக்கொண்டவானவர்க்குந்தானவர்க்கும்பெருமான்றன்னைக்
கொல்லைவாய்க்குருந்தொசித்துக்குழலூதுங்கோவலனுநான்முகனுங்கூடியெங்கும்
எல்லைகாண்பரியானையெம்மான்றன்னையேழையேனான்பண்டிகழ்ந்தவாறே.

திருச்சிற்றம்பலம்.

நாயனார் வீரட்டானேசுரர்மேல் திருப்பதிகங்களைப்பாடிப் பணிசெய்துகொண்டிருக்கும் நாளிலே, சமணர்களுடைய துர்ப்போதனைக்கு இசைந்து தீங்குசெய்துகொண்டிருந்த பல்லவராஜன் அத்திருவதிகையிலேவந்து நாயனாரை வணங்கி சைவசமயத்திலேபிரவேசித்தான் சமணசமயம்பொய்யென்றும் சைவசமயமேமெய்யென்றும் அறிந்துகொண்ட காடவனென்பவனும் பாடலிபுரத்திலிருந்த சமணருடைய பள்ளிகளையும் பாழிகளையும் இடித்து, அவைகளின் கற்களைத்திருவதிகையிலே கொண்டுவந்து, பரமசிவனுக்குக் குணதரவீச்சரம் என்னும் கோயிலைக்கட்டினான். அந்நாட்களிலே திருநாவுக்கரசுசுவாமிகள் சிவஸ்தலங்கள் பலவற்றிற்குஞ்சென்று சுவாமிதரிசனஞ்செய்து திருப்பதிகம்பாடவிரும்பி, அவ்விடத்தினின்றும் நீங்கி; திருவெண்ணெய்நல்லூர் திருவாமாத்தூர் திருக்கோவலூர்முதலிய திருப்பதிகளை வணங்கிப் பதிகம்பாடிக்கொண்டு, பெண்ணாகடத்திற்சென்று திருத்தூங்கானைமாடமென்னும் ஆலயத்திற்பிரவேசித்து, சுவாமியைவணங்கி, சுவாமீ, அடியேன் இழிவினையுடைய சமணசமயத்தொடக்குண்டு வருந்திய இத்தேகத்துடனே உயிர்வாழ்தற்குத் தரியேன் தரிக்கும்பொருட்டுத்தேவரீருடைய இலச்சினையாகிய சூலத்தையும் இடபத்தையும், என்மேற்பொறித்தருளவேண்டும் என்னும்கருத்தால் ஒருதிருப்பதிகம் பாடியருளினார்.

திருத்தூங்கானைமாடம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பொன்னார்திருவடிக்கொன்றுண்டுவிண்ணப்பம்போற்றிசெய்யு
மென்னாவிகாப்பதற்கிச்சையுண்டேயிருங்கூற்றகல
மின்னாருமூவிலைச்சூலமென்மேற்பொறிமேவுகொண்டற்
றுன்னார்கடந்தையுட்டூங்கானைமாடச்சுடர்க்கொழுந்தே.

கடவுந்திகிரிகடவாதொழியக்கயிலையுற்றான்
படவுந்திருவிரலொன்றுவைத்தாய்பனிமால்வரைபோ
லிடபம்பொறித்தென்னையேன்றுகொள்ளாயிருஞ்சோலைதிங்கள்
தடவுங்கடந்தையுட்டூங்கானைமாடத்தெந்தத்துவனே.

திருச்சிற்றம்பலம்.

உடனே பரமசிவனுடைய திருவருளினால் ஒரு சிவபூதம் மற்றொருவருக்கும் தெரியாதபடி அவ்வாகீசருடைய தோளிலே சூலக்குறியையும் இடபக்குறியையும் பொறித்தது. நாயனார் தம்முடையதோளிலே பொறிக்கப்பட்ட இலச்சினைகளைக்கண்டு மனமகிழ்ந்து, திருவருளைநினைந்து கண்ணீர்சொரியவிழுந்து நமஸ்கரித்து எழுந்தார் அவர் அந்தஸ்தலத்தில் இருக்கின்றநாளிலே திருவரத்துறைக்கும் திருமுதுகுன்றுக்கும்போய் சுவாமிதரிசனம்செய்து பதிகம்பாடி, நிவாவென்னும்நதிக்கரையின்வழியாகநடந்து சிதம்பரத்திலே சென்று, கனகசபையிலே ஆனந்தத்தாண்டவஞ் செய்

தருளுகின்ற சபாநாயகரைத்தரிசித்து விழுந்து நமஸ்கரித்து எழுந்து இரண்டுகைகளும் சிரசின் மேலேறிக்குவிய இரண்டுகண்ணில் நின்றும் ஆநந்தபாஷ்பஞ்சொரிய அக்கினியிற்பட்ட வெண்ணெய்போலமனங்கசிந்துருக,என்றுவந்தாய்என்னுந்திருக்குறிப்போடு திருத்தஞ்செய்கின்ற சுவாமியுடைய திருநயனத்தினின்றும்பொழிகின்றதிருவருளாலாகிய ஆநந்தமேலீட்டினாலே திருப்பதிகங்கள்பாடினார், அவர் சுவாமிதரிசனம்பண்ணி உழைவாரப்பணிசெய்துகொண்டு சிலநாள் அங்கே இருந்தார்.

கோயிற்றிருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

பத்தனாய்ப்பாடமாட்டேன்பரமனேபரமயோகி
யெத்தினாற்பத்திசெய்கேனென்னைநீயிகழவேண்டா
முத்தனேமுதல்வாதில்லையம்பலத்தாடுகின்ற
வத்தாவுன்னாடல்காண்பானடியனேன்வந்தவாறே.

மண்ணுண்டமாலவனும்மலர்மிசைமன்னினானும்
விண்ணுண்டதிருவுருவம்விரும்பினார்காணமாட்டார்
திண்ணுண்டதிருவேமிக்கதில்லைச்சிற்றம்பலத்தே
பண்ணுண்டபாடலோடும்பரமநீயாடுமாறே.

திருச்சிற்றம்பலம்.

இத்திருப்பதிகத்தைப்பாடி மாணிக்கங்களின் சோதிநிறைந்த முன்றிலினிடத்தும் உயர்ந்தகொடிகளாடுகின்ற அழகியதேர்கள்நிறைந்த வீதியினிடத்தும் தன்னாற்கூடுமான திருப்பணிகளைச்செய்கின்றவராகி திருப்பதிகங்களையும்பாடுந்தொழிலையுடையவராகிய திருநாவுக்கரசுசுவாமிகள்மிகுந்த மகிழ்ச்சிகொண்டு அன்னம்பாலிக்குமென்னு முதலையுடைய திருக்குறுந்தொகை பாடியருளினார்.

கோயிற்றிருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்.

அன்னம்பாலிக்குந்தில்லைச்சிற்றம்பலம், பொன்னம்பாலிக்குமென்னுமிப்பூமிசை
யென்னம்பாலிக்குமாறுகொண்டின்புற, வின்னம்பாலிக்குமோவிப்பிறவியே.

மதுரவாய்மொழிமங்கையோர்பங்கினன், சதுரன்சிற்றம்பலவன்திருமலை
யதிரவார்த்தெடுத்தான்முடிபத்திற, மிதிகொள்சேவடிசென்றணைந்துய்ம்மினே.

திருச்சிற்றம்பலம்.

பின்பு அங்ஙனம்பொருந்திய பணிவிடைகளைச்செய்துவாழுநாளில் திருவேட்களத்துக்குச்சென்று விடைக்கொடியையுடைய பரமசிவத்தைப் பாடிவணங்கி நீலோற்பலம்போன்ற கண்டத்தையுடையகடவுள் வாழுகின்ற திருக்கழிப்பாலையென்னுந் திருப்பதியையடைந்து சுவாமிதரிசனஞ்செய்துவணங்கி வனபவளவாய்திறந்து வானவர்க்குந்தானவனே யென்கின்றாளென்றெடுத்துத் திருப்பதிகம்பாடியருளினார்.

திருக்கழிப்பாலை - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

வனபவளவாய்திறந்துவானவர்க்குந்தானவனேயென்கின்றாளாற்
சினபவளத்திரடோள்மேற்சேர்ந்திலங்குவெண்ணீற்றனென்கின்றாளா
லனபவளமேகலையோடப்பாலைக்கப்பாலானென்கின்றாளாற்
கனபவளஞ்சிந்துங்கழிப்பாலைச்சேர்வானைக்கண்டாள்கொலோ.

அடர்ப்பரியவிராவணனையருவரைக்கீழடர்த்தவனேயென்கின்றாளாற்
சுடர்ப்பெரியதிருமேனிச்சுண்ணவெண்ணீற்றவனேயென்கின்றாளான்
மடற்பெரியவாலின்கீழறநால்வர்க்கன்றுரைத்தானெனன்கின்றாளாற்
கடற்கருவிசூழ்ந்தகழிப்பாலைச்சேர்வானைக்கண்டாள்கொலோ. திருச்சிற்றம்பலம்.

பின் திருக்கழிப்பாலையென்னுந் திருப்பதியை விட்டு மீண்டு வழிக்கொண்டுவரும்போது நினைப்பவர்களதுமனத்தைக்கோயிலாகக்கொண்டருளும்அம்பலத்தின்கண்ணெழுந்தருளியதிருத்தனை நினைத்தனையாம்பொழுது மறந்துய்வனோ வெனப்பாடிக்கொண்டு சிதம்பரத்தையடைந்தார்.

கோயிற்றிருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பனைக்கைமும்மதவேழமுரித்தவ, னினைப்பவர்மனங்கோயிலாக்கொண்டவ
னனைத்தும்வேடமாமம்பலக்கூத்தனைத், தினைத்தனைப்பொழுதும்மறந்துய்வனோ.

ஈங்குமால்வரையேந்தலுற்றான்சிரம், வீங்குவிம்முறவூன்றியதாளினான்
தேங்குநீர்வயல்சூழ்தில்லைக்கூத்தனைப், பாங்கிலாத்தொண்டனேன்மறந்துய்வனோ.

திருச்சிற்றம்பலம்.

பின்பு அடியவருக்கெளியவனும் தன்னுள்ளத்தைவிட்டு நீங்காதவனுமாகிய சபாபதியை அரியானையென்றெடுத்து திருத்தாண்டகச்செந்தமிழ்பாடி அவரைப்பணிந்து அங்குசிலநாளிருந்தார்.

கோயிற்பெரிய - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

அரியானையந்தணர்தஞ்சிந்தையானையருமறையினகத்தானையணுவையார்க்குந்
தெரியாததத்துவனைத்தேனைப்பாலைத்திகழொளியைத்தேவர்கடங்கோனைமற்றைக்
கரியானைநான்முகனைக்கனலைக்காற்றைக்கனைகடலைக்குலவரையைக்கலந்துநின்ற
பெரியானைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே.

காரொளியதிருமேனிச்செங்கண்மாலுங்கடிக்கமலத்திருந்தயனுங்காணாவண்ணஞ்
சீரொளியதழற்பிழம்பாய்நின்றதொல்லைத்திகழொளியைச்சிந்தைதனைமயக்கந்தீர்க்கும்
ஏரொளியையிருநிலனும்விசும்பும்விண்ணுமேழுலகுங்கடந்தண்டத்தப்பானின்ற
பேரொளியைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே.

திருச்சிற்றம்பலம்.

அதன்பின் செஞ்சடைக்கற்றைமுற்றத் திளநிலாவெறிக்குமென்னுஞ் சிறந்தவளமைபொருந்திய தமிழ்மாலையை யாவருக்கும் அதிசயமுண்டாகும்படிபாடி அன்புடனே மனமுருகக் கண்களினின்றும் ஆநந்தநீர்பொழிய ஒழியாத திருப்பணிகளைச்செய்து இருக்குநாளில்.

கோயிற்றிருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

செஞ்சடைக்கற்றைமுற்றத்திளநிலாவெறிக்குஞ்சென்னி
நஞ்சடைக்கண்ணனாரைக்காணலாநறவநாறு
மஞ்சடைச்சோலைத்தில்லைமல்குசிற்றம்பலத்தே
துஞ்சடையிருள்கிழியத்துளங்கெரியாடுமாறே.

மதியிலாவரக்கனோடிமாமலையெடுக்கநோக்கி
நெதியன்றோணெரியவூன்றிநீடிரும்பொழில்கள்சூழ்ந்த
மதியந்தோய்தில்லைதன்னுண்மல்குசிற்றம்பலத்தே
பதிசயம்போலநின்றேயனலெரியாடுமாறே.

திருச்சிற்றம்பலம்.

ஒருநாள் திருநாவுக்கரசுசுவாமிகள்,சீர்காழியிலே பரமசிவனது திருவருளினால்உமாதேவிஞானப்பாலைஊட்டஉண்டுவேதார்த்தங்களைத்தமிழிலே தேவாரமாகப் பாடியருளுகின்ற திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளுடைய மகிமையை அடியார்கள் சொல்ல, கேள்வியுற்று, அவருடைய திருவடிகளை வணங்கல்வேண்டும் என்னும் ஆசைமிகுதியினால் சபாநாயகரைத் தொழுது அனுமதிபெற்றுக்கொண்டு புறப்பட்டு திருவீதியிலே அங்கப்பிரதக்ஷிணஞ்செய்து அத்திருப்பதியின் எல்லையைக்கடந்து, திருநாரையூரைப் பணிந்துபாடி சீர்காழிக்குச் சமீபித்தார். திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் சீர்காழிக்குத் திருநாவுக்கரசுசுவாமிகள் வருதலைக்கேள்வியுற்று, அத்தியந்த ஆசையோடு அடியார்கள் பக்கத்திலேசூழ அவரை எதிர்கொண்டார். திருநாவுக்கரசு சுவாமிகள் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுடைய திருவடிகளிலே விழுந்து நமஸ்கரிக்க, அவர் தம்முடைய திருக்கரங்களினால் இவருடைய திருக்கரங்களைப்பிடித்து எடுத்து தாமும் அஞ்சலிசெய்து, அப்பரோ என்றார் அதற்குத் திருநாவுக்கரசுசுவாமிகள் அடியேன் என்றார். அவ்விருவரும் தாங்கள் ஒருவரை ஒருவர் காணப்பெற்றதனால் மிக மனமகிழ்ந்து, ஆலயத்திற்சென்றுசுவாமியை வலங்கொண்டு, நமஸ்கரித்து எழுந்தார்கள், திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அப்பமூர்த்தியை நோக்கி அப்பரோ உம்முடைய சுவாமியைப்பாடும் என்று சொல்ல, இவர் பதிகம்பாடி திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுடைய திருமடத்திற்சென்று அவரோடு அளவளாவிப் பலநாள் இருந்தார்.

திருக்கழுமலம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பார்கொண்டுமூடிக்கடல்கொண்டஞான்றுநின்பாதமெல்லா
நாலைந்துபுள்ளினமேந்தினவென்பர்நளிர்மதியங்
கால்கொண்டவண்கைச்சடைவிரித்தாடுங்கழுமலவர்க்
காளன்றிமற்றுமுண்டோவந்தணாழியகலிடமே.

கரையார்கடல்சூழிலங்கையர்கோன்றன்முடிசிதறத்
தலையாமலரடியூன்றலுமுள்ளம்விதிர்விதிர்த்துத்
தலையாய்க்கிடந்துயர்ந்தான்றன்கழுமலங்காண்பதற்கே
மலையாப்பரிசிவைநாடோறுநந்தமையாள்வனவே.

திருச்சிற்றம்பலம்.

ஒருநாள்இவர்சோழமண்டலத்திலுள்ள சிவஸ்தலங்கள் எல்லாவற்றையும் வணங்கவேண்டும் என்று தம்முடைய திருவுள்ளத்தே தோன்றிய ஆசையைத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்குத் தெரிவித்து அவரோடும் திருக்கோலக்காவிற்குச் சென்று சுவாமிதரிசனம் பண்ணினார். திருஞானசம்பந்தசுவாமிகள் அவ்விடத்தினின்றும்மீண்டருளினார், அப்பமூர்த்தி கருப்பறியலூர் புன்கூர் நீடூர் குறுக்கைநின்றையூர் நனிபள்ளிமுதலிய ஸ்தலங்களை வணங்கிக்கொண்டு காவேரியாற்றின் இருகரைவழியாகவும் சென்றுசெம்பொன்பள்ளி மயிலாடுதுறை துருத்திவேள்விக்குடி எதிர்கொள்பாடி திருவாவடுதுறை இத்தலங்களையடைந்து யானுய்ந்தேனென்று அளவற்ற திருத்தாண்டகமருளிச்செய்துபின்னுந் திருக்குறுந் தொகையும் நேரிசையும் சந்தவிருத்தங்களும் ஆகிய வெவ்வேறுபதிகங்கள்பாடி மிகுந்த அன்பினோடு பூமியிலுள்ளார்பரவ அவ்விடத்துப் பலநாட்டங்கி கைத்தொண்டு செய்து இருந்தார்.

திருவாவடுதுறைத்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

நம்பனைநால்வேதங்கரைகண்டானைஞானப்பெருங்கடலைநன்மைதன்னைக்
கம்பனைக்கல்லாலிருந்தான்றன்னைக்கற்பகமாயடியார்கட்கருள்செய்வானைச்
செம்பொன்னைப்பவளத்தைத்திரளுமுத்தைத்திங்களைஞாயிற்றைத்தீயைநீரை
யம்பொன்னையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே.

தரித்தானைத்தண்கடனஞ்சுண்டான்றன்னைத்தக்கன்றன்பெருவேள்விதகர்த்தான்றன்னைப்
பிரித்தானைப்பிறைதவழ்செஞ்சடையினானைப்பெருவலியால்மலையெடுத்தவரக்கன்றன்னை
நெரித்தானைநேரிழையாள்பாகத்தானைநீசனேனுடலுறுநோயானதீர
வரித்தானையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே.

திருச்சிற்றம்பலம்.

பின் திருவிடைமருதூர் திருநாகேச்சரம் பழையாறை என்கின்ற ஸ்தலங்களைப் பணிந்துபாடி திருச்சத்திமுற்றத்தை அடைந்தார். அங்கே "கோவாய்முடுகியடுதிறற்கூற்றங்குமைப்பதன்முன், பூவாரடிச்சுவடென்மேற்பொறித்துவை" என்றுபதிகம்பாடவும், பரமசிவன்; நல்லூருக்குவா என்று அருளிச்செய்தார்.

திருச்சத்திமுற்றம்-திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கோவாய்முடுகியடுதிறற்கூற்றங்குமைப்பதன்முன்
பூவாரடிச்சுவடென்மேற்பொறித்துவைபோகவிடின்
மூவாமுழுப்பழிமூடுங்கண்டாய்முழங்குந்தழற்கைத்
தேவாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே.

பொறித்தேரரக்கன்பொருப்பெடுப்புற்றவன்பொன்முடிதோ
ளிறத்தாளொருவிரலூன்றிட்டலறவிரங்கியொள்வாள்
குறித்தேகொடுத்தாய்கொடியேன்செய்குற்றக்கொடுவினைநோய்
செறுத்தாய்திருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே,

திருச்சிற்றம்பலம்.

அப்பமூர்த்தி திருநல்லூரிலேசென்று சுவாமியைவணங்கி எழுந்தார், எழும்பொழுது, சுவாமி,உன்னுடையநினைப்பை முடிக்கின்றோம்என்று சொல்லி, தம்முடைய திருவடிகளை அவர் சிரசின் மேலேசூட்டினார். அப்பமூர்த்தி " நனைந்தனைய திருவடியென்றலைமேல்வைத்தார் நல்லூரெம்பெருமானார்நல்லவாறே" என்னுந் திருத்தாண்டகம் பாடியருளினார். இன்னும் திருப்பதிகங்கள் பாடிக்கொண்டு, சிலநாள் அங்கிருந்தார் இருக்கும் நாட்களிலே, கருகாவூர் திருவாரூர் திருப்பாலைத்துறைமுதலாகிய ஸ்தலங்களுக்குப்போய். சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு திருநல்லூருக்குத் திரும்பிவிடுவார்.

திருநல்லூர்த்திருத்தாண்டகம்,

திருச்சிற்றம்பலம்.

நினைந்துருகுமடியாரைநையவைத்தார்நில்லாமேதீவினைகணீங்கவைத்தார்
சினந்திருகுகளிற்றுரிவைப்போர்வைவைத்தார்செழுமதியின்றளிர்வைத்தார்சிறந்துவானோ
ரினந்துருவிமணிமகுடத்தேறத்துற்றவினமலர்கள்போதவிழ்ந்துமதுவாய்ப்பில்கி
நனைந்தனையதிருவடியென்றலைமேல்வைத்தார்நல்லூரெம்பெருமானார்நல்லவாறே.

குலங்கிளரும்வருதிரைகளேழும்வைத்தார்குருமணிசேர்மலைவைத்தார்மலையைக்கையா
லுலங்கிளரவெடுத்தவன்றோண்முடியுநோவவொருவிரலாலுறவைத்தாரிறைவாவென்று
புலம்புதலுமருளொடுபோர்வாளும்வைத்தார்புகழவைத்தார்புரிந்தாளாக்கொள்ளவைத்தார்
நலங்கிளருந்திருவடியென்றலைமேல்வைத்தார்நல்லூரெம்பெருமானார்நல்லவாறே.

திருச்சிற்றம்பலம்.

சிலநாட் சென்றபின், அப்பமூர்த்தி திருநல்லூரினின்றும் நீங்கி, திருப்பழனத்தை வணங்கிக்கொண்டு, திங்களூரின்வழியாகச்சென்றார். செல்லும்பொழுது, அவ்வூரிலே அப்பூதிநாயனார் என்

பவர் தம்முடைய புத்திரர்களுக்குத் திருநாவுக் கரசு என்னும்பெயரைத் தரித்தும், தம்முடைய அன்னசத்திரம் கிணறுகுளம் தண்ணீர்ப்பந்தல் முதலியவற்றிலும் தனித்தனியே இது திருநாவுக்கரசுசுவாமிகளுடையது என்று தீட்டியும், இருத்தலைக் கேள்வியுற்று, அவருடைய வீட்டுக்குச் சென்றார். அப்பூதிநாயனார். அப்பமூர்த்தியைத் தம்முடைய மனைவியார் புத்திரர் முதலாயினாரோடும் அவரை வணங்கி, அங்கே திருவமுது செய்யும்படி பிரார்த்தித்து, அதற்கு இவர் உடன்பட்டது கண்டு, அமுதுசமைப்பித்து, திருநாவுக்கரசு என்னும் பெயர்பெற்ற தம்முடைய புத்திரரைநோக்கி தோட்டத்திற்சென்று வாழைக்குருத்து அரிந்து கொண்டுவா என்றுசொல்லி யனுப்பினார். அவர் விரைந்து வாழைக் குருத்து அரியப் புகுந்த பொழுது, ஒருபாம்பு அவரைத்தீண்டிற்று. அதை அவர்பேணாமல், அப்பமூர்த்தி திருவமுதுசெய்யும்படி குருத்தை அரிந்துகொண்டு, விரைவிலே திரும்பிவந்து. விஷந் தலைக்கொள்கையால் மயக்கமடைந்து, வாழைக்குருத்தைத் தம்முடைய தாயார்கையிலே கொடுத்துவிட்டு தம்மைச் சர்ப்பந்தீண்டினதைச் சொல்லிக்கொண்டு, கீழேவிழுந்து இறந்தார். அதுகண்டு. அப்பூதிநாயனாரும்,அவர்மனைவியாரும் ஐயோ இனி நாயனார் அமுது செய்யாரோ என்று துக்கித்து, சவத்தை மறைத்துவைத்து, சிறிதும் தடுமாற்றம் இன்றி அப்பமூர்த்தியிடத்திற்சென்று, சுவாமீ எழுந்துவந்து அமுதுசெய்தருளவேண்டும் என்று பிரார்த்தித்தார்கள். அப்பமூர்த்தி; அங்குநிகழ்ந்த உண்மையைத் திருவருளினால் அறிந்துகொண்டு அவர்களுடைய அன்பைநினைந்து அருள்சுரந்து, சவத்தைச் சிவாலயத்தின்முன் கொணர்வித்து, "ஒன்றுகொலாம்" என்கின்றபதிகத்தைப்பாடியருளினார்.

விஷந்தீர்த்ததிருப்பதிகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

ஒன்றுகொலாமவர்சிந்தையுயர்வரை, யொன்றுகொலாமுயரும்மதிசூடுவ
ரொன்றுகொலாமிடுவெண்டலைகையது, வொன்றுகொலாமவரூர்வதுதானே.

பத்துக்கொலாமவர்பாம்பின்கண்பாம்பின்பல், பத்துக்கொலாமெயிறுந்நெரிந்துக்கன
பத்துக்கொலாமவர்காயப்பட்டான்றலை, பத்துக்கொலாமடியார்செய்கைதானே.

திருச்சிற்றம்பலம்.

உடனே அப்புத்திரர் உணர்வுபெற்று, எழுந்தார். அப்பூதிநாயனார், தம்முடைய புத்திரர் பிழைத்ததைக்கண்டும், அதைக்குறித்துச் சந்தோஷியாமல், அப்பமூர்த்தி அமுதுசெய்யாதிருந்தமையைக்குறித்துத் துக்கித்து வருந்தினார். அவ்வருத்தத்தை நீக்கும்பொருட்டு, அப்பமூர்த்தி அவருடைய வீட்டிற்சென்று அமுதுசெய்து அங்கேஇருந்தார். சிலநாட்சென்றபின் திங்களூரினின்றும் நீங்கி, திருப்பழனத்திற்குப்போய், சுவாமிதரிசனஞ்செய்து அப்பூதிநாயனாரைச் சிறப்பித்துத் திருப்பதிகம்பாடியருளினார்.

திருப்பழனம் - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

சொன்மாலைபயில்கின்றகுயிலினங்காள்சொல்லீரே
பன்மாலைவரிவண்டுபண்மிழற்றும்பழனத்தான்
முன்மாலைநகுதிங்கள்முகிழ்விளங்குமுடிச்சென்னிப்
பொன்மாலைமார்பனென்புதுநலமுண்டிகழ்வானே.

வஞ்சித்தென்வளைகவர்ந்தான்வாரானேயாயிடினும்
பஞ்சிக்காற்சிறகன்னம்பரந்தார்க்கும்பழனத்தா
னஞ்சிப்போய்க்கலிமெலியவழலோம்புமப்பூதி
குஞ்சிப்பூவாய்நின்றசேவடியாய்க்கோடியையே.

திருச்சிற்றம்பலம்.

அங்கே இருக்கும்நாளிலே, திருச்சோற்றுத்துறை முதலாகிய ஸ்தலங்களுக்கும்போய் வருவார் வெகுநாட்சென்றபின், திருநல்லூருக்குச்சென்று சிலநாள் அங்கேவசித்து, பின் திருவாரூருக்குப் போகக்கருதி, அதனைநீங்கி, பழையாறை வலஞ்சுழி திருக்குடமூக்கு கும்பகோணம் நாலூர் திருச்சேறைகுடவாயில் நறையூர் திருவாஞ்சியம்பெருவேளூர் என்கின்ற ஸ்தலங்களை வணங்கிக்கொண்டு, திருவாரூரை அடைந்தபோது, திருநாவுக்கரசுசுவாமிகள் திருவாரூரில்வந்ததைக் கேள்வியுற்ற அவ்வூரிலுள்ள அடியார்கள் வீதிகளையும் மாடமாளிகைகளையும் அலங்கரித்து சமணர்களுடைய மாயையைக்கடந்து கடலில்கல்லே மிதப்பாக வந்தவர் வந்தாரென்னுங்களிப்பால் அளவற்ற தொண்டர்கள் மதிற்புறத்திற்சென் றெதிர்கொண்டு திருநாவுக்கரசுசுவாமிகளை வணங்கி திருப்பதியினுள் அழைத்துவந்தபோது திருப்பதிகம் பாடியருளினர்.

திருவாரூர்த்திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

குலம்பலம்பாவருகுண்டர்முன்னேநமக்குண்டுகொலோ
வலம்பலம்பாவருதண்புனலாரூரவிர்சடையான்
சிலம்பலம்பாவருசேவடியான்திருமூலட்டானம்
புலம்பலம்பாவருதொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே.

குற்றமுடையவமணர்திறமதுகையகன்றிட்
டுற்றகருமஞ்செய் துய்யப்போந்தேனுக்குமுண்டுகொலோ
மற்பொலிதோளானிராவணன்றன்வலிவாட்டுவித்த
பொற்கழலானடித்தொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே.

திருச்சிற்றம்பலம்.

அதன்பின்பு தன்னைச்சூழ்ந்துவருகின்ற திருத்தொண்டர்களோடு தோரணவாயிலை யடைந்து தேவாசிரியன்முன்வந்து வணங்கி, ஆலயத்துட்புகுந்து புற்றிடங்கொண்டகடவுளைத் தரிசித்து வணங்கி தேகம்புளகாங்கிதமாகக்கண்களில் ஆநந்தபாஷ்பம்பொழிய திருமூலட்டானரைத் துதித்துத் திருத்தாண்டகம்பாடியருளினர்.

திருவாரூர்ப்போற்றித்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

கற்றவர்களுண்ணுங்கனியேபோற்றிகழலடைந்தார்செல்லுங்கதியேபோற்றி
யற்றவர்கட்காரமுதமானாய்போற்றியல்லலறுத்தடியேனையாண்டாய்போற்றி
மற்றொருவரொப்பிலாமைந்தாபோற்றிவானவர்கள்போற்றுமருந்தேபோற்றி
செற்றவர்தம்புரமெரித்தசிவனேபோற்றிதிருமூலட்டானனேபோற்றிபோற்றி.

பிரமன்றன்சிரமரிந்தபெரியோய்போற்றிபெண்ணுருவோடாணுருவாய்நின்றாய்போற்றி
கரதான்குமுக்கண்ணுமுடையாய்போற்றிகாதலிப்பார்க்காற்றவெளியாய்போற்றி
யருமந்ததேவர்க்கரசேபோற்றியன்றரக்கனைஞ்ஞான்குதோளுந்தாளுஞ்
சிரநெரித்தசேவடிகள்போற்றிபோற்றிதிருமூலட்டானனேபோற்றிபோற்றி.

திருச்சிற்றம்பலம்.

பின்பு தூண்டுதலில்லா விளக்கையொத்தசோதிஸ்வரூபனாகிய கடவுண்முன்னின்று "காண்டலே கருத்தாயின" வென்னுந் திருப்பதிகத்தைப்பாடி மனமுருகி ஆலயத்தை வலம்வந்துவணங்கி அன்புபொருந்திய மநத்தோடு திருவாயிலின்புறத்துவந்தார்.

திருவாரூர்ப் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

காண்டலேகருத்தாய்நினைந்திருந்தேன்மநம்புகுந்தாய்கழலடி
பூண்டுகொண்டொழிந்தேன்புறம்போயினாலறையோ
வீண்டுமாடங்கணீண்டமாளிகைமேலெழுகொடிவானிளமதி
தீண்டிவந்துலவுந்திருவாரூரம்மானே.

நாடினார்கமலம்மலரயனோடிரணியனாலங்கீண்டவ
னாடிக்காணமாட்டாததழலாயநம்பரனைப்
பாடுவார்பணிவார்பல்லாண்டிசைகூறுபத்தர்கள்சித்தத்துள்புக்குத்
தேடிக்கண்டுகொண்டேன்திருவாரூரம்மானே.

திருச்சிற்றம்பலம்.

பின்பு சிவந்தமாணிக்கமணிகளின் ஒளிசூழ்ந்த திருவாயிலின்முன்வந்து "கொய்புலாமலர்ச்சோலைக்குயில்கூவமயிலாலு மாரூரரைக், கையினற்றொழாதேமுன் கனியிருக்கக்காய்கவர்ந்த கள்வனேனென்று" திருப்பதிகமருள்செய்து அங்கிருந்தனர்.

திருவாரூர்ப்பழமொழிப்பத்து - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மெய்யெலாம்வெண்ணீறுசண்ணித்தமேனியான்றாடொழாதே
யுய்யலாமென்றெண்ணியுறிதூக்கியுழிதந்தேனுள்ளம்விட்டுக்
கொய்புலாமலர்ச்சோலைக்குயில்கூவமயிலாலுமாரூரரைக்
கையினற்றொழாதொழிந்துகனியிருக்கக்காய்கவர்ந்தகள்வனேனே.

மறுத்தானோர்வல்லரக்கனீரைந்துமுடியினொடுதோளுந்தாளு
மிறுத்தானையெழின்முளரித்தவிசின்மிசையிருந்தான்றன்றலையிலொன்றை
யறுத்தானையாரூரிலம்மானையாலாலமுண்டுகண்டங்
கறுத்தானைக்கருதாதேகரும்பிருக்கவிரும்புகடித்தெய்த்தவாறே.

திருச்சிற்றம்பலம்.

பின்பு மழைபோலும் மார்பின்கண் பெருகாநின்ற கண்ணீரும் தமதுமதுரவாயினல் பாடுகின்ற இனியதமிழ்மாலைகளும் கடவுளினது திருவடியிலேபற்றியமநமும் உழவாரப்படையுந்தாமுமாகி திருவீதிப்பணிசெய்து வணங்கி புற்றிடங்கொண்டாரைக் காலங்கடோறும் தரிசித்து பாடிளம்பூதத்தினனெனும் பதிகமுதலான பலபதிகங்களைப்பாடி அன்பினலுருகிச் செல்வாராயினர்.

திருவாரூர்ப் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

பாடிளம்பூதத்தினனும்பவளச்செவ்வாய்வண்ணத்தானுங்
கோடிளமென்முலையாளைக்கூடியகோலத்தினனு
மோடிளவெண்பிறையானுமொளிதிகழ்சூலத்தினனு
மாடிளம்பாம்பசைத்தானுமாரூரமர்ந்தவம்மானே.

பையஞ்சுடர்விடுநாகப்பள்ளிகொள்வானுள்ளத்தானுங்
கையஞ்சுநான்குடையானைக்கால்விரலாலடர்த்தானும்
பொய்யஞ்சிவாய்மைகள்பேசிப்புகழ்புரிந்தார்க்கருள்செய்யு
மையஞ்சினப்புறத்தானுமாரூரமர்ந்தவம்மானே.

திருச்சிற்றம்பலம்.

பின்பு ஒருபதிகத்திலே நமிநந்தியடிகள்நீரினால் விளக்கேற்றினமையைச் சிறப்பித்துப்பாடினார். அந்தத்திருப்பதியில் இருக்கின்ற அரனெறியென்னும் ஆலயத்தையும் வணங்கிப் பதிகம்பாடினார். அங்கிருக்கும் நாட்களிலே, திருவலிவலம் கீழ்வேளூர் கன்றாப்பூர் என்னும் ஸ்தலங்களுக்கும்போய் பதிகம்பாடிக்கொண்டு, அவ்விடத்திற்குத் திரும்பிவிட்டார். திருவாதிரைநட்சத்திரத்திலே வீதிவிடங்கப்பெருமானுடைய திருவிழாவை அடியார்களுடன்சேவித்து, மகிழ்ந்துஇருந்தார். அந்நாட்களிலே திருப்புகலூருக்குப் போம்படி கருதி, திருவாரூரினின்றும் நீங்கி, பலஸ்தலங்களையும்பணிந்துசென்றார். அந்நாளிலே திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருப்புகலூருக்கு வந்து சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு முருகநாயனாருடைய திருமடத்தில் இருந்தார். ஒருநாள் அப்பமூர்த்தி திருவாரூரினின்றும் திருப்புகலூரைநோக்கி வருகின்றார் என்று கேள்வியுற்று, அடியார் கூட்டத்தோடும்சென்று, அவரை எதிர்கொண்டார். அப்பமூர்த்தி திருஞானசம்பந்தமூர்த்தியைவணங்க, திருஞானசம்பந்தமூர்த்தியும் அப்பமூர்த்தியைவணங்கி, அப்பரே நீர்வரும் நாளிலே திருவாரூரிலே நடக்கின்ற பெருமையைச் சொல்லும் என்றார். அப்பமூர்த்தி திருவாதிரைச்சிறப்பைத் திருப்பதிகத்தினால் சொல்லியருளினார்.

திருவாரூர்த்திருவாதிரைத்திருப்பதிகம்-பண்-குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

முத்துவிதானமணிப்போற்கவரிமுறையாலே, பத்தர்களோடுபாவையர்சூழப்பலிப்பின்னே
வித்தகக்கோலவெண்டலைமாலைவிரதிக, ளத்தனாரூராதிரைநாளாலதுவண்ணம்.

பாரூர்பவ்வத்தானைப்பத்தர்பணிந்தேத்தச், சீரூர்பாடலாடலறாதசெய்மாப்பார்ந்
தோரூரொழியாதுலகமெங்கும்பணிந்தேத்து, மாரூரன்றனாதிரைநாளாலதுவண்ணம்.

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தமூர்த்தி அதைக்கேட்டு, நான்திருவாரூருக்குப்போய்ச் சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு இவ்விடத்திற்குவருவேன் என்று சொல்லித் திருவாரூருக்குப்போக அப்பமூர்த்தி திருப்புகலூருக்குவந்து சுவாமிதரிசனம் செய்து பதிகம்பாடிக்கொண்டு இருந்தார். செங்காட்டங்குடி திருநள்ளாறு சாத்தமங்கை திருமருகல் என்கின்ற ஸ்தலங்களுக்கும்போய், தரிசனஞ்செய்துகொண்டு திருப்புகலூருக்குத்திரும்பினார். சிலநாட்சென்றபின், திருஞானசம்பந்தமூர்த்தி திருவாரூரினின்றும் நீங்கி, திருப்புகலூருக்குவந்தார். அப்பமூர்த்தி அவரை எதிர்கொண்டு அழைத்துவந்து, முருகநாயனாருடைய திருமடத்தில் அவரோடும் இருந்தார்-இருக்கும்நாளிலே சிறுத்தொண்டநாயனாரும், திருநீலநக்கநாயனாரும் அவர்களிடத்திற்குவந்து அவர்களோடு இருந்தார்கள். சிலநாளாயினபின், திருஞானசம்பந்தமூர்த்தியும் அப்பமூர்த்தியும் திருப்புகலூரினின்றும் நீங்கி, திருநீலநக்கநாயனாரும் சிறுத்தொண்டநாயனாரும் முருகநாயனாரும் மற்றை அடியார்களும் அனுமதி பெற்றுக்கொண்டுபோய்விட திருவம்பர் என்னும் ஸ்தலத்தை அடைந்து வணங்கிதிருக்கடவூரிற் சென்று வீரட்டானேசுரரைப்பணிந்து குங்குலியக்கலயநாயனாரால் அவருடைய திருமடத்திலே அமுதுசெய்விக்கப்பட்டு திருக்கடவூர்மயானத்தையும்வணங்கி, திருவாக்கூர் முதலியதிருப்பதிகளைத்தரிசித்து திருவீழிமிழலையை அடைந்தார் அதுசமாச்சாரம் அத்தலத்திலுள்ள அடியார்கள் அறிந்துஎதிர்கொண்டுபோய்வணங்க அவர்களும்அவர்களைவணங்கி, ஆலயத்துட்சென்றுகோயிலைவலம்வந்து வணங்கி, திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றார், என திருத்தாண்டகமொழிந்து சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு அங்கேயிருந்தார்கள்.

திருவீழிமிழலைத்-திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

போரானையீருரிவைப்போர்வையானைப்புலியதளேயுடையாடைப்போற்றினானைப்
பாரானைமதியானைப்பகலானானைப்பல்லுயிராய்நெடுவெளியாய்ப்பரந்துநின்ற
நீரானைக்காற்றானைத்தீயானானைநினையாதார்புரமெரியநினைந்ததெய்வத்
தேரானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே.

வசமயமே சத்சமயம் என்பதை அவர்களுக்கு ஐயந்திரிபற உணர்த்தியருள அவர்கள் அவருடைய கருணைநோக்கம் பெற்றமையால், அதனை இனிதுணர்ந்து அவரைவணங்கி சைவர்கள் ஆயினர்கள். பிள்ளையார் அவ்விடத்தை நீங்கி திருக்கடவூரிலே சென்று சுவாமிதரிசனஞ்செய்து கொண்டு அங்கே இருந்தார்.

சிலநாளாயினபின் திருநாவுக்கரசுசுவாமிகள்பூந்துருத்தியில் இருத்தலைக் கேள்வியுற்று அவரைக் காணவிரும்பி புறப்பட்டுச்சென்று பூந்துருத்திக் குச்சமீபித்தார், அதைத்திருநாவுக்கரசுசுவாமிகள் கேட்டு மனமகிழ்ந்து அவரை எதிர்கொண்டுவணங்கும்படிசென்று, அவர்வரும் எல்லையை அடைந்து திருச்சின்னத்தின் ஓசையைக்கேட்டு அவரைத்தரிசிக்கும்படிசூழ்ந்தசனங்களுடைய நெருக்கத்தினாலே தம்மை ஒருவரும் காணாதபடி உட்புகுந்து அவர் ஏறிவரும் முத்துச் சிவிகையைத் தாங்குகின்றவர்களோடு தாமும் ஒருவராய்த் தாங்கிக்கொண்டு வந்தார் பிள்ளையார் பூந்துருத்திக்கு மிகச்சமீபித்தவுடனே அப்பர் எங்குற்றார் என்று வினவ அதைக்கேட்ட அப்பமூர்த்தி, அடியேன் தேவரீரைத் தாங்கிவரும் பெருவாழ்வைப்பெற்று இங்குற்றேன் என்றார். உடனே பிள்ளையார் சிவிகையினின்றும் இறங்கி, மனப்பதைப்போடும் அப்பமூர்த்தியைவணங்க, அப்பமூர்த்தியும் தம்மை அவர் வணங்குதற்கு முன் தாம் அவரைவணங்க அதுகண்ட அடியார்கள் எல்லாரும் வணங்கி ஆனந்தகோஷஞ் செய்தார்கள். பிள்ளையார் அப்பமூர்த்தியோடும் பூந்துருத்தியிற்சென்று சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு இருந்தார். பிள்ளையார் தாம் பாண்டிநாட்டிற்சென்று சமணர்களை வாதில்வென்றதையும் பாண்டியனுடைய கூனைநிமிர்த்ததையும், அந்நாடெங்கும் விபூதியை வளர்த்ததையும், மங்கையர்க்கரசியார் குலச்சிறையார் என்கின்ற இருவருடைய பெருமையையும், அப்பமூர்த்திக்குச்சொல்லியருளினர், அப்பமூர்த்தி தாம் தொண்டைநாட்டுக்குச்சென்று அங்குள்ள சிவஸ்தலங்களை வணங்கியதைப் பிள்ளையாருக்குச் சொல்லியருளினர் அப்பமூர்த்தி விடைபெற்றுக்கொண்டு பாண்டிநாட்டுக்குப்புறப்பட பிள்ளையார் நெய்த்தானம் திருவையாறு திருப்பழனம் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு சீர்காழியை அடைந்து சுவாமிதரிசனஞ்செய்து பதிகம்பாடிக்கொண்டு இருந்தார்.

திருக்கழுமலம்-திருஇயமகம். திருச்சிற்றம்பலம்.

உற்றுமைசேர்வதுமெய்யினையேயுணர்வதுநின்னருள்மெய்யினையே
கற்றவர்காய்வதுகாமனையே கனல்விழிகாய்வதுகாமனையே
யற்றமறைப்பதுமுன்பணியேயமரர்கள்செய்வதுமுன்பணியே
பெற்றுமுகந்ததுகந்தனையே பிரமபுரத்தையுகந்தனையே.

"உணர்வதுநின்னருள் மெய்யினையே"

இதன்கருத்து. நின் அருளாகிய சத்தியத்தையே யானுணர்ந்துகொண்டிருப்பது.

"கற்றவர்காய்வது காமனையே"

இ-து. கற்றுணர்ந்தவர்களால் விடப்பட்டது. பசுத்துவம் பொருந்திய க்ஷேத்திரமாகிய தேகாதி பிரபஞ்சமே.

"அற்றமறைப்பது முன்பணியே"

இ-து உனது திருவாணத்தைமறைப்பது முன்தொங்கலாகியபாம்புகளே-மற்றவைவெளிப்படை.

பருமதில்மதுரைமனவையெதிரேபதிகமதெழுதிலையவையெதிரே
வருநதியிடைமிசைவருகரனே வசையொடுமலர்கெடவருகரனே
கருதலின்இசைமுரறருமருளே கழுமலமமரிறைதருமருளே
மருவியதமிழ்விரகன்மொழியே வல்லவர்தம்மிடர்திடர்மொழியே. திருச்சிற்றம்பலம்.

"பதிகமதெழுதிலையவை"

இ-து. திருப்பதிகம் எழுதப்பட்ட ஏடுகளவை- வருநதியிடைமிசை - வருகின்றவைகையாற்றினிடத்திலே, எதிர்வருகரனே - எதிரிட்டுப்போம்படி துணைசெய்த ஸ்ரீஅத்தங்களையுடையவனே, வசை

யொடும்-சமணருடையவசைச்சொல்லும், அலர்-பரிபவச்சொல்லும், கெட-கெடும்பொருட்டாக, அருகு-அரனே, சமண்குலத்தைக் கெடுக்கப்பட்டவனே, கருதலில் - கேட்போர்கள்கருத்தைஅழிக்கத்தக்க, இசைமுரல் - இசைக்குரியோருமாம், தருமர்உள்-தருமசீலருமாகிய பிராமணர்கள், வாழ்கின்ற-உள-எனத்பாலது- விகாரவகையால்-உள்-எனநின்றது.

"கழுமலமமரிறைதரும் அருளே. மருவியதமிழ்விரகன்."

இ-ள். திருக்கழுமலத்தி லெழுந்தருளியிருக்கின்ற தம்பிரானுர் பிரசாதித்தருளியதிருவருளை யிடைவிடாமற்பொருந்திய தமிழ்விரகனுகிய யான் - மற்றவை வெளிப்படை.

நெடுநாட்சென்றபின், பிள்ளையார் தொண்டைமண்டலத்துக்கு யாத்திரைசெய்யத் திருவுளங்கொண்டு, தோணியப்பரைவணங்கி விடைபெற்றுக்கொண்டு, அடியார்களோடு புறப்பட்டு தம்மோடு உடன்வருதற்குத்துணிந்த தந்தையாராகிய சிவபாதவிருதயரைநோக்கி அப்பரே நீர் இங்கேதானே யாகஞ்செய்து, சிவதரிசனம்பண்ணிக்கொண்டு, இரும் என்று சொல்லிச்சென்று சிதம்பரம் தினைநகர் மாணிகுழி பாதிரிப்புலியூர் வடுகூர் வக்கரை இரும்பைமாகாளம் திருவதிகை ஆமாத்தூர் கோவலூர் அறையணி நல்லூர் திருவண்ணமலை என்னும் தலங்களைவணங்கித் திருப்பதிகம் பாடிக்கொண்டு தொண்டைநாட்டை அடைந்தார்.

திருமாணிக்குழி-திருவிராகம்-பண்-சாதாரி. திருச்சிற்றம்பலம்.

பொன்னியல்பொருப்பரையன்மங்கையொருபங்கர்புனறங்குசடைமேல்
வன்னியொடுமத்தமலர்வைத்தவிறல்வித்தகர்மகிழ்ந்துறைவிடங்
கன்னியிளவாளைகுதிகொள்ளவிளைவள்ளைபடரள்ளல்வயல்வாய்
மன்னியிளமேதிகள்படிந்துமனைசேருதவிமாணிகுழியே.

உந்திவருதண்கெடிலமோடுபுனல்சூழுதவிமாணிகுழிமே
லந்திமதிசூடியவெம்மானையடிசேருமணிகாழிநகரான்
சந்தநிறைதண்டமிழ்தெரிந்துணருஞானசம்பந்தனதுசொன்
முந்தியிசைசெய்துமொழிவார்களுடையார்கணெடுவானநிலனே. திருச்சிற்றம்பலம்.

திருப்பாதிரிப்புலியூர்-பண்-செவ்வழி. திருச்சிற்றம்பலம்.

முன்னநின்றம்முடக்கால்முயற்கருள்செய்துநீள், புன்னைநின்றுகமழ்பாதிரிப்புலியூருளான்
றன்னைநின்றுவணங்குந்தனைத்தவமில்லிகள், பின்னைநின்றபிணியாக்கையைப்பெறுவார்களே.

அந்தணல்லாரகன்காழியுள்ளணிஞானசம், பந்தனல்லார்பயில்பாதிரிப்புலியூர்தனுட்
சந்தமாலைத்தமிழ்பத்திவைதரித்தார்கண்மேல், வந்துதீயவ்வடையாமையால்வினைமாயுமே.

திருச்சிற்றம்பலம்.

திருவடுகூர்-பண்-குறிஞ்சி. திருச்சிற்றம்பலம்.

சுடுகூரெரிமாலையணிவர்சுடர்வேலர், கொடுகூர்மழுவாளொன்றுடையார்விடையூர்வர்
கடுகூர்பசிகாமங்கவலைபிணியில்லார், வடுகூர்புனல்சூழ்ந்தவடுகூரடிகளே.

படிநோன்பவையாவர்பழியில்புகழான, கடிநாணிகழ்சோலைகமழும்வடுகூரைப்
படியானமுந்தைமொழியார்சம்பந்த, னடிஞானம்வல்லாரடிசேர்வார்களே.

திருச்சிற்றம்பலம்.

திருவக்கரை-பண்-பஞ்சமம். திருச்சிற்றம்பலம்.

கறையணிமாமிடற்றான்கரிகாடரங்காவுடையான், பிறையணிகொன்றையினுனொருபாகமும்பெண்ணமர்ந்தான், மறையவன்றன்றலையிற்பலிகொள்பவன்வக்கரையி, லுறைபவனெங்கள்பிரானொலியார்கழலுள்குதுமே.

தண்புனலும்மரவுஞ்சடைமேலுடையான் பிறைதோய், வண்பொழில்சூழ்ந்தழகாரிறைவன்னுறைவக்கரையைச், சண்பையர்தந்தலைவன்றமிழ்ஞானசம்பந்தன்சொன்ன, பண்புனைபாடல்வல்லாரவர்தம்வினைபற்றறுமே. திருச்சிற்றம்பலம்.

திருஇரும்பைமாகாளம்-பண்-செவ்வழி திருச்சிற்றம்பலம்.

மண்டுகெங்கைசடையிற்கரந்தும் மதிசூடிமான், கொண்டகையாற்புரமூன்றெரித்த குழகன்னிட, மெண்டிசையும்புகழ்போய் விளங்குமிருப்பை யதனுள், வண்டுகீதம்முரல்பொழில்சுலாநின்றமா காளமே.

எந்தைபெம்மானிடம்மெழில்கொள்சோலையி ருப்பையதனுள், மந்தமாரும்பொழில்சூழ்ந்தழ காயமாகாளத்தி, லந்தமில்லாவனலாடுவானை யணி ஞாநசம், பந்தன்சொன்னதமிழ்பாடவல்லார் ப ழிபோகுமே. திருச்சிற்றம்பலம்.

திரு அதிகைவீரட்டானம்-பண்-தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

குண்டைக்குறட்பூதங்குழுமவனலேந்திக், கெண்டைபிறழ்தெண்ணீர்கெடிலவடபக்கம்
வண்டுமருள்பாடவளர்பொன்விரிகொன்றை, விண்டதொடையலனுடும்வீரட்டானத்தே.

நாழல்கமழ்காழிஞாநசம்பந்தன், வேழம்பொருதெண்ணீரதிகைவீரட்டானத்துச்
சூழுங்கழலானைச்சொன்னதமிழ்மாலை, வாழுந்துணையாகநினைவார்வினையிலரே.

திருச்சிற்றம்பலம்.

திருஆமாத்தூர்-பண்-சீகாமரம். திருச்சிற்றம்பலம்.

குன்றவார்சிலைநாணராவரிவாளிகூரெரிகாற்றி ல்மும்மதில், வென்றவாறெங்ஙனேவிடையேறும் வேதியனே, தென்றலார்மணிமாடமாளிகைச் சூ ளிகைக்கெதிர் நீண்டபெண்ணைமே, லன்றில்வந்த ணையுமாமாத்தூரம்மானே.

வாடல்வெண்டலைமாலையார்த்துமயங்கிருள் ளெரியேந்திமாநட, மாடல்மேயதென்னென்று மாத்தூரம்மானைக், கோடல்நாக மரும்பும்பைம் பொழிற்கொச்சையாரிறைஞாநசம்பந்தன், பா டல்பத்தும்வல்லார்பரலோகஞ்சேர்வாரே.

திருச்சிற்றம்பலம்.

திருக்கோவல்வீரட்டம்-திருவிராகம்-பண்-நட்டராகம். திருச்சிற்றம்பலம்.

படைகொள்கூற்றம்வந்துமெய்ப் பாசம்விட் டபோதின்கண்,ணிடைகொள்வாரெமக்கில்லையெ ழுகபோதுநெஞ்சமே, குடைகொள்வேந்தன்மூ தாதை குழகன்கோவலூரதனுள், விடையதேறு ங்கொடியினன் வீரட்டானஞ்சேர்துமே.

கழியோடுலவுகானல்சூழ்காழிஞானசம்பந்தன் பழிகடீரச்சொன்னசொற்பாவநாசமாதலா, லழி விலீர்கொண்டேத்துமின்னந் தண்கோவலூரத னுள், விழிகொள்பூதப்படையினன் வீரட்டான ஞ்சேர்துமே. திருச்சிற்றம்பலம்.

திருஅறையணிநல்லூர்-பண்-காந்தாரம். திருச்சிற்றம்பலம்.

பீடினாற்பெரியார்களும்பேதைமைகெடத்தீதி லா, வீடினாலுயர்ந்தார்களும்வீடினாரிளவெண்மதி, சூடினார்மறைபாடினார் சுடலைநீறணிந்தாரழ, லாடினாரறையணிநல்லூ ரங்கையாற்றொழுவார்களே.

கழியுலாங்கடற்கானல்சூழ் கழுமலமமர்தொல் பதிப், பழியிலாமறைஞாநசம் பந்தனல்லதோர் பண்பினார், மொழியினாரறையணிநல்லூர் முக்க ண்மூர்த்திதன்றடொழக்,கெழுவினாரவர்தம்மொ டுங்கேடில்வாழ்பதிபெறுவரே. திருச்சிற்றம்பலம்.

திருவண்ணாமலை-பண்-நட்டபாஷை. திருச்சிற்றம்பலம்.

உண்ணாமுலையுமையாளொடுமுடனாகியவொருவன், பெண்ணாகியபெருமான்மலைதிருமாமணிதிகழ
மண்ணார்ந்தனவருவித்திரண்மழலைம்முழவதிரு, மண்ணாமலைதொழுவார்வினைவழுவாவணமறுமே.

வெம்புந்தியகதிரோனொளிவிலகும்விரிசார, லம்புந்திமூவெயிலெய்தவனண்ணாமலையதனைக்
கொம்புந்துவகுயிலாலுவகுளிர்காழியுள்ஞாந, சம்பந்தனதமிழ்வல்லவரடிபேணுதறவமே.

திருச்சிற்றம்பலம்.

திருவண்ணாமலை-பண்-தக்கேசி. திருச்சிற்றம்பலம்.

பூவார்மலர்கொண்டடியார்தொழுவார் புகழ்வார்வானோர்கள்,மூவார்புரங்களெரித்தவன்றுமூவர்க்கருள்செய்தார், தூமாமழைநின்றதிரவெருவித்தொறுவினிரையோடும்,ஆமாம்பிணைவந்தணையுஞ்சாரலண்ணாமலையாரே.

அல்லாடரவமியங்குஞ்சார லண்ணாமலையாரை நல்லார்பரவப்படுவான்காழிஞானசம்பந்தன் சொல்லான்மலிந்தபாடலானபத்தும்மிவைகற்று வல்லாரெல்லாம்வானோர்வணங்க மன்னிவாழ்வாரே. திருச்சிற்றம்பலம்.

அங்கே திருவோத்தூரிற் சென்று சுவாமிதரிசனம் செய்துகொண்டு இருந்தார். இருக்கும்நாளிலே அந்தஸ்தலத்திலே உள்ள சிவனடியார் ஒருவர்வந்து பிள்ளையாரை வணங்கிநின்று, பரசமயங்களைப்பற்றிச் சைவஸ்தாபனம் செய்யும் சுவாமீமெய்க்கடவுளாகிய பரமசிவனுக்கு அடியேனாகியநான் ஆக்கும்பனைகளெல்லாம் மிக உயர்வாக வளர்ந்தும் ஆண்பனைகளாகி காயாவாயின அதுகண்டசமணர்கள், நீர் ஆக்கும் ஆண்பனைகள் எல்லாவற்றையும் காய்க்கப்பண்ணுதல் கூடுமோஎன்று நகைசெய்து இகழ்ந்து சொன்னார்கள் தேவரீர் அருள்செய்யவேண்டும் என்று விண்ணப்பஞ்செய்தார். பிள்ளையார் அதுகேட்டெரிந்தருளி, எழுந்துவிரைந்து கோயிலிற்சென்று சுவாமியை வணங்கி திருப்பதிகம்பாடி அப்பதிகத்தின்திருக்கடைக்காப்பிலே. "குரும்பையாண்பனையீன்குலையோத்தூர்" என்று பாடியருளினர்.

திருவோத்தூர்-ஆண்பனை பெண்பனையானதிருப்பதிகம்-பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

பூத்தொத்தாயினகொண்டுநின்பொன்னடி, யேத்தாதாரில்லையெண்ணுங்கா
லோத்தூர்மேயவொளிமழுவாளங்கை, கூத்தீரும்மகுணங்களே.

குரும்பையாண்பனையீன்குலையோத்தூ, ரரும்புகொன்றையடிகளைப்
பெரும்புகலியுண்ஞானசம்பந்தன்சொல், விரும்புவார்வினைவீடே. திருச்சிற்றம்பலம்.

அதனால் ஆண்பனைகள் எல்லாம் குரும்பைக்குலைகளை யுடையனவாய்ப் பெண்பனைகளாயின அதனைக்கண்டவர்கள் எல்லாரும் ஆச்சரியங்கொண்டார்கள் பிள்ளையார் ஆண்பனைகள் காய்த்துப் பழுக்கும்படி அன்பருக்கு அருள்செய்து, சுவாமிதரிசனம் செய்துகொண்டு அங்கே இருந்தார். சமணர்கள் பரசமயகோளரியாராகிய பிள்ளையாருடைய செய்கையைக்கண்டு, அந்நாட்டைவிட்டு ஓடினார்கள் அவர்களிற்சிலர் பரமசிவனேமெய்க்கடவுள் என்று துணிந்து, சைவராகிஉய்ந்தார்கள் பிள்ளையாருடைய திருவாக்கிலேபிறத்தலால், அப்பனைகள் எல்லாம் தங்கள் காலத்தைக்கழித்து ஒழியாப்பிறவியை ஒழித்து, சிவத்தை அடைந்தன. பிள்ளையார் சிலநாளாயினபின், அப்பதியை நீங்கி, மாகறல் குரங்கணிமுட்டம் கச்சியேகம்பம் கச்சிநெறிக்காரைக்காடு அனேகதங்காவதம் கச்சிமேற்றளி மாற்பேறு வல்லம் இலம்பயங்கோட்டூர் திருவிற்கோலம் திருவூறல் முதலாகிய ஸ்தலங்களை வணங்கிக்கொண்டு பதிகம்பாடி பழையனூர் திருவாலங்காட்டுக்குச்சமீபத்திலேபோனார்.

திருமாகறல்-திருவிராகம்-பண்-சாதாரி. திருச்சிற்றம்பலம்.

விங்குவிளைகழனிமிகுகடைசியர்கள்பாடல்விளையாடலரவம், மங்குலொடுநீள்கொடிகள்மாடமலிநீடுபொழின்மாகறலுளான்,கொங்குவிரிகொன்றையொடுகங்கைவளர்திங்களணி செஞ்சடையினான், செங்கண்விடையண்ணலடிசேர்பவர்கடவினைகடருமுடனே.

கடைகொணெடுமாடமிகவோங்குகமழ்வீதிமலிகாழியவர்கோன், அடையும்வகையாற்பரவியரனையடிகூடுசம்பந்தனுரையான்,மடைகொள்புனலோடுவயல் கூடுபொழின்மாகறலுளான்அடியையே, யுடையதமிழ்பத்துமுணர்வாரவர்கடொல்வினைகளொல்குமுடனே. திருச்சிற்றம்பலம்.

குரங்கணின்முட்டம்-பண்-தக்கராகம். திருச்சிற்றம்பலம்.

விழுநீர்மழுவாட்படையண்ணல்விளங்குங், கழுநீர்குவளைம்மலரக்கயல்பாயுங்
கொழுநீர்வயல்சூழ்ந்தகுரங்கணின்முட்டந், தொழுநீர்மையர்தீதுறுதுன்பமிலரே.

கல்லார்மதிற்காழியுள்ஞானசம்பந்தன், கொல்லார்மழுவேந்திகுரங்கணின்முட்டஞ்
சொல்லார்தமிழ்மாலைசெவிக்கினிதாக, எல்லார்க்குமெளிதாம்பிறவாவகைவீடே.
திருச்சிற்றம்பலம்.

திருஏகம்பம்-பண்-இந்தளம். திருச்சிற்றம்பலம்.

மறையானைமாசிலாப்புன்சடைமல்குவெண், பிறையானைப்பெண்ணொடாணாகியபெம்மானை
யிறையானையேர்கொள்கச்சித்திருவேகம்பத், துறைவானையல்லதுள்காதெனதுள்ளமே.

அந்தண்பூங்கச்சியேகம்பனையம்மானைக், கந்தம்பூங்காழியூரன்கவிக்கோவையாற்
சந்தமேபாடவல்லதமிழ்ஞானசம், பந்தன்சொற்பாடியாடக்கெடும்பாவமே. திருச்சிற்றம்பலம்.

திருவேகம்பம்-பண்-திருஇயமகம். திருச்சிற்றம்பலம்.

பாயுமால்விடைமேலொருபாகனேபாவைதன்னுருமேலொருபாகனே
தூயவானவர்வேதத்துவனியேசோதிமாலெரிவேதத்துவனியே
யாயுநன்பொருணுண்பொருளாதியேயாலநீழலரும்பொருளாதியே
காயவன்மதன்பட்டதுகம்பமேகண்ணுதற்பரமற்கிடங்கம்பமே.

"பாயுமால்விடைமேலொருபாகனே" இதன் கருத்து. வானளவுந்தத்தப்பட்ட பெரியரிஷபத்தின்மேலேறிச் செலுத்துகைக்கு ஒப்பில்லாத பாகனுயுள்ளவனே. "பாவைதன்உருமேல் ஒருபாகனே" இ-து. பரமேசுவரியினுடைய திருமேனியினை - உனது திருவடிவின் ஒருபாதியிலேவைத்தவனே. "தூயவானவர்வேதத்துவனியே" இ-து. நின்மலரானவானவரது-துதியாகிய வேதங்களினுடைய நாதசொரூபமாயிருக்கின்றவனே. "சோதிமால்எறிவுஎது அத்துவனியே" இ-து. பிரகாசத்தை யுடைத்தாய் மிகுதிப்பட்டு அச்சத்தியினுடைய பிரகாசம் எப்படியிருக்கும் - அப்படித்தான வழியாயுள்ளவனே. "ஆயுநன்பொருள் நுண்பொருளாதியே" இ-து மனபோதத்தாலுணரப்பட்ட அத்தங்களுக்கெல்லாங் கிட்டுதற்கரிதாகிய சூனியமாயுள்ள மூலவத்துவாயிருப்பவனே. "ஆலநீழலரும்பொருளாதியே" இ-து. கீழ்ச்சொன்னபொருளை - வடவிருக்ஷத்தின்கீழ் எழுந்தருளியிருந்து ஆத்மபோதத்தால் உணர்தற்கரிய பொருளென வுணர்த்தியப்பொருளைத் தெருட்சிபடஆயாநின்றனையே. "காயவன்மதன் பட்டதுகம்பமே" இ-து. உனது நெற்றிவிழியாலே தகனஞ்செய்ய - யாவராலுஞ் செயித்தற்கரிய காமன்பட்டவாறு - அங்கமொடாதநடுக்கமே. "கண்ணுதற்பரமற்கிடங்கம்பமே" இ-து. இவ்வாறு காமன் வடிவு அழிய நுதற்கண்விழித்த கருணையாளனாகிய சிவனுக்கிடமேதென்னில் - திருவேகம்பமென்னுந் திருப்பதியே என்க.

கந்தமார்பொழில்சூழ்தருகம்பமேகாதல்செய்பவர்தீர்த்திடுகம்பமே
புந்திசெய்துவிரும்பிப்புகலியேபூசுரன்றன்விரும்பிப்புகலியே
யந்தமில்பொருளாயினகொண்டுமேயண்ணனின்பொருளாயினகொண்டுமே
பந்தனின்னியல்பாடியபத்துமேபாடவல்லவராயினபத்துமே. திருச்சிற்றம்பலம்.

"கந்தம்ஆர்பொழில்சூழ்தருகம்பமே" இ-து. மணம்பொருந்திய சோலைசூழ்ந்த திருவேகம்பத்தை. "காதல்செய்பவர்தீர்த்திடுகம்பமே" இ-து. இடைவிடாமற்காதலித்து நினைப்பவரது சென்மநடுக்கத்தை யொழிக்கப்பட்டவனே. "புந்திசெய்துவிரும்பிப்புகலியே பூசுரன்றன்விரும்பிப்புகலியே" இ-து. இத்தன்மை காதலித்தாரது சென்மநடுக்கத்தை யொழிப்பையென்பதை யானுமுணர்ந்து கனகமாடங்கள்சூழப்பட்ட புகலியென்கின்ற பதியின்கண் வாழ்கின்ற இந்தமறையோனாகிய யான்-அத்தன்மை கருணையாளனாகிய தன்னை-யானுங்காதலித்துரைத்த தமிழ்மாலையை. "அந்தமில்பொருளாயினகொண்டுமே" இ-து. முடிவில்லாத அத்தங்களில் எனக்குத்தோன்றின மதியாதியைக்கொண்டு. "அண்ணனின்பொருளாயின கொண்டுமே" "பந்தனின்னியல் பாடியபத்துமே" இ-து. கத்தாவாகிய நினது சிவானந்தரது அறிவினுள்ளே தோன்றப்பட்ட சிவானந்தம் ஏகமாகிய விசேடத்தையுடைய நின்னை இரண்டறத் தழுவப்பட்ட ஞானசம்பந்தனானவன் இனியதமிழாகப்பாடிய இம்மாலைபத்துமே. "பாடல்வல்லவராயினபத்துமே" இ-து. இம்மாலையைக்கொண்டு நின்னைப்பாடுவார்க்கு ஆகுவதேதென்னில்அழகாகிய பத்தி ஞானவைராக்கியங்கள் என்க.

திருவிருக்குக்குறள்-பண்-கொல்லி. திருச்சிற்றம்பலம்.

கருவார்கச்சித், திருவேகம்பத், தொருவாவென்ன, மருவாவினையே.
கொச்சைவேந்தன், கச்சிக்கம்பன், மெச்சுஞ்சொல்லை, நச்சும்புகழே. திருச்சிற்றம்பலம்.

திருநெறிக்காரைக்காடு-பண்-பஞ்சமம். திருச்சிற்றம்பலம்.

வாரணவும்முலைமங்கைபங்கினராயங்கையிற், போரணவும்மழுவொன்றங்கேந்தி வெண்பொடியணிவார், காரணவுமணிமாடங்கடைநவின்றகலிக்கச்சி, நீரணவுமலர்ப்பொய்கைநெறிக்காரைக்காட்டாரே.

கண்ணாருங்கலிக்கச்சி நெறிக்காரைக்காட்டுறையும், பெண்ணாருந்திருமேனிப்பெருமானதடிவாழ்த்தித், தண்ணாரும்பொழிற்காழித் தமிழ்ஞாநசம்பந்தன், பண்ணாருந்தமிழ்வல்லார்பரலோகத்திருப்பாரே. திருச்சிற்றம்பலம்.

திருமாற்பேறு-பண்-பழந்தக்கராகம். திருச்சிற்றம்பலம்.

ஊறியார்தருநஞ்சினையுண்டுமை, நீறுசேர்திருமேனியர்
சேறுசேர்வயற்றென்றிருமாற்பேற்றின், மாறிலாமணிகண்டரே.
மன்னிமாலொடுசோமன்பணிசெயு, மன்னுமாற்பேற்றடிகளை
மன்னுகாழியுள்ஞாநசம்பந்தன்சொற், பன்னவேவினைபாறுமே. திருச்சிற்றம்பலம்.

திருவல்லம்-பண்-வியாளக்குறிஞ்சி. திருச்சிற்றம்பலம்.

எரித்தவன்முப்புரமெரியின்மூழ்கத், தரித்தவன்கங்கையைத்தாழ்சடைமேல்
விரித்தவன்வேதங்கள்வேறுவேறு, தெரித்தவனுறைவிடந்திருவல்லமே.
கற்றவர்திருவல்லங்கண்டுசென்று, நற்றமிழ்ஞாநசம்பந்தன்சொன்ன
குற்றமில்செந்தமிழ்கூறவல்லார், பற்றுவரீசன்பொற்பாதங்களே. திருச்சிற்றம்பலம்.

திருஇலம்பயங்கோட்டூர்-பண்-குறிஞ்சி. திருச்சிற்றம்பலம்.

மலையினார்பருப்பதந்துருத்திமாற்பேறுமாசிலாச்சீர்மறைக்காடுநெய்த்தானம்
நிலையினானெனதுரைதனதுரையாகநீறணிந்தேறுகந்தேறியநிமலன்
கலையினார்மடப்பிணைதுணையொடுந்துயிலக்கானலம்பெடைபுல்கிக்கணமயிலாலு
மலையினார்பைம்பொழிலிலம்பயங்கோட்டூரிருக்கையாப்பேணியெனெழில்கொள்வதியல்பே.
கந்தனைமலிகனைகடலொலியோதங்கானலங்கழிவளர்கழுமலமென்னு
நந்தியாருறைபதிநான்மறைநாவனற்றமிழ்க்கின்றுணைஞாநசம்பந்த
னெந்தையார்வளநகரிலம்பயங்கோட்டூரிசையொடுகூடியபத்தும்வல்லார்போய்
வெந்துயர்கெடுகிடவிண்ணவரோடும்வீடுபேறின்மையில்வீடெளிதாமே. திருச்சிற்றம்பலம்.

திருவிற்கோலம்-பண்-காந்தாரபஞ்சமம். திருச்சிற்றம்பலம்.

உருவினாருமையொடுமொன்றிநின்றதோர், திருவினான்வளர்சடைத்திங்கள்கங்கையான்
வெருவிவானவர்தொழவெகுண்டுநோக்கிய, செருவினானுறைதருந்திருவிற்கோலமே.
கோடல்வெண்பிறையனைக்கூகமேவிய, சேடனசெழுமதிற்றிருவிற்கோலத்தை
நாடவல்லலந்தமிழ்ஞானசம்பந்தன், பாடல்வல்லார்களுக்கில்லைபாவமே. திருச்சிற்றம்பலம்.

திருஊறல்-பண்-வியாளக்குறிஞ்சி. திருச்சிற்றம்பலம்.

மாறிலவுணரரணம்மவைமாயவோர்வெங்கணையானன்று, நீறெழவெய்தவெங்கணிமலனிடம்வினவிற், றேறலிரும்பொழிலுந்திகழ்செங்கயல்பாய் வயலுஞ்சூழ்ந்த, வூறலமர்ந்தபிரானொலியார்கழலுள்குதுமே.

கோடலிரும்புறவிற்கொடிமாடக்கொச்சையர்மனமெச்ச, வோடுபுனல்சடைமேல்கரந்தான்றிருவூறல், நாடலரும்புகழான்மிகுஞானசம்பந்தன் சொன்னநல்ல, பாடல்கள்பத்தும்வல்லார் பரலோகத்திருப்பாரே. திருச்சிற்றம்பலம்.

அதுகாரைக்காலம்மையார் திருத்தலையாலேந டந்த திருப்பதி ஆதலால் அதைமிதிக்கஅஞ்சி, அ தற்குச்சமீபத்திலேஉள்ள ஒரூரிலே அன்றிரவுபள் ளிகொண்டார். திருவாலங்காட்டில் வீற்றிருக்குங் கடவுள் அவருக்குச் சொப்பனத்திலே தோன்றி, நம்மைப்பாடுதற்கு மறந்தனையோ என்றுஅருளி ச்செய்ய பிள்ளையார்உடனே விழித்துஎழுந்து தி ருவருளைத்துதித்து திருப்பதிகம்பாடியருளினர்.

பழையனூர் திருஆலங்காடு-பண்-தக்கராகம். திருச்சிற்றம்பலம்.

துஞ்சவருவாருந்தொழுவிப்பாரும் வழுவிப் போய், நெஞ்சம்புகுந்தென்னை நினைவிப்பாரும் முனைநட்பாய், வஞ்சப்படுத்தொருத்தி வாணாள் கொள்ளும்வகைகேட், டஞ்சும்பழையனூ ராலங் காட்டெம்மடிகளே. போழம்பலபேசிப் போதுசாத்தித்திரிவாரும் வேழம்வருமளவும்வெயிலேதுற்றித்திரிவாருங் கேழல்வினைபோகக்கேட்பிப்பாருங்கேடிலா வாழ்வர்பழையனூராலங்காட்டெம்மடிகளே.

சாந்தங்கமழ்மறுகிற்சண்பைஞானசம்பந்த
னுந்தன்பழையனூராலங்காட்டெம்மடிகளை
வேந்தனருளாலேவிரித்தபாடலிவைவல்லார்
சேர்ந்தவிடமெல்லாந்தீர்த்தமாகச்சேர்வாரே. திருச்சிற்றம்பலம்.

மற்றநாள் உதயத்திலே திருக்கூட்டம் தம்மை அணைந்தபொழுது இரவிலே நிகழ்ந்ததை அவர் களுக்குச் சொல்லியருளினர். பின்பு பாசூர் வெ ண்பாக்கம் காரிகரை முதலிய ஸ்தலங்களைவணங் கிக்கொண்டு, திருக்காளத்திமலைக்குச் சமீபித்து அதன்மேல் கண்ணப்பநாயனருடைய திருத்தொ ண்டைச்சிறப்பித்துத் திருப்பதிகம்பாடிக்கொண் டுசென்று மலைமேல்ஏறி சந்நிதானத்தை அடைந் து சுவாமியைவணங்கினர்.

திருப்பாசூர்-பண்-காந்தாரம். திருச்சிற்றம்பலம்.

சிந்தையிடையார்தலையின்மிசையார்செஞ்சொலார், வந்துமாலைவைகும்போழ்தென்மனத்துளார்
மைந்தர்மணாளரென்னமகிழ்வாரூர்போலும், பைந்தண்மாதவிச்சோலைசூழ்ந்த[பா]சூரே.

ஞானமுணர்வான்காழிஞானசம்பந்தன், தேனும்வண்டுமின்னிசைபாடுந்திருப்பாசூர்க்
கானமுறைவார்கழல்சேர்பாடலிவைவல்லா, ரூனமிலராயும்பர்வானத்திருப்[பா]ரே.

திருச்சிற்றம்பலம்.

திருக்காளத்தி-திருவிராகம்-பண்-சாதாரி.

திருச்சிற்றம்பலம்.

வானவர்கடானவர்கள் வாதைபடவந்ததொரு மாகடல்விடந், தானமுதுசெய்தருள் புரிந்தசிவ ன்மேவுமலைதன்னைவினவி, லேனமின்மானினொடு கிள்ளைதினைகொள்ளவெழிலார்கவணினாற், கானவ ர்தமாமகளிர்கனகமணியில்குகாளத்திமலையே. காடதிடமாகநடமா[டு]சிவன்மேவு காளத்திமலை யை, மாடமொடுமாளி[கை]கணீடுவளர்கொச்சைவ யமன்னுதலைவன், னாடுபல[வு]நீடுபுகழ்ஞானசம்பந்த னுணர்நல்லதமிழின், பாட[லொ]லொடுபாடுமிசை வல் லவர்கணல்லர்பரலோகமே[ய்]த.

திருச்சிற்றம்பலம்.

பின் அவ்வணக்கத்தாற் பெற்றபயனைக் காண் பார்போல அன்புருவமாகிய கண்ணப்பநாயனா ரைக்கண்டு ஆனந்த அருவிசொரியவிழுந்து நம ஸ்கரித்தார். பின் மலையினின்று இறங்கி ஒருதிரும டத்தில் வீற்றிருந்தருளினர் காலந்தோறும் காள த்தியப்பரைவணங்கிக்கொண்டு அங்கே இருக்கும் நாளிலே வடதிசையினும்மேற்றிசையினும் தமிழ் மொழிவழக்கு இன்மையால் உத்தர கைலாசம் திருக்கேதாரம் கோகர்ணம் திருப்பருப்பதம்இந் திரநீலப்பருப்பதம் முதலிய ஸ்தலங்களை அங்கிரு ந்தேவணங்கித்திருப்பதிகம்பாடி சிலதினங்கழித் தபின் திருக்காளத்தியை நீங்கி வேற்காடுவலிதாய ம் முதலிய ஸ்தலங்களை வணங்கிக்கொண்டு திரு வொற்றியூரை அடைந்துசுவாமிதரிசனஞ்செய்து கொண்டு இருந்தார்.

ஸ்ரீகயிலாயம்-பண்-தக்கேசி. திருச்சிற்றம்பலம்.

பொடிகொளுருவர்புலியினதளர் புரிநூல்திகழ்மார்விற்,கடிகொள்கொன்றைகலந்தநீரார்கறைசேர்கண்டத்த, ரிடியகுரலாலிரியுமடங்கலொடங்குழுனைச்சாரற், கடியவிடைமேற்கொடியென்றுடையார்கயிலைமலையாரே.

போரார்கடலிற்புனல்சூழ்காழிப் புகழார்சம்பந்தன், காரார்மேகங்குடிகொள்சாரற்கயிலைமலையார்மேற், றேராதுரைத்தசெஞ்சொன்மாலை செப்புமடியார்மேல், வாராபிணிகள்வானோருலகின்மருவுமனத்தாரே. திருச்சிற்றம்பலம்.

திருக்கேதாரம்-பண்-செவ்வழி. திருச்சிற்றம்பலம்.

தொண்டரஞ்சுகளிறுமடக்கிச்சுரும்பார்மலரிண்டைகட்டிவ்வழிபாடுசெய்யும்மிடமென்பரால்,வண்டுபாடம்மயிலாலமான்கன்றுதுள்ளவ்வரிக்கெண்டைபாயச்சுனைநீலமொட்டலருங் கேதாரமே.

வாய்ந்தசெந்நெல்விளைகழனிமல்கும் வயற்காழியா, னேய்ந்தநீர்க்கோட்டிமையோ ருறைகின்றகேதாரத்தை, யாய்ந்துசொன்னவ்வருந்தமிழ்கள்பத்தும்மிசைவல்லவர், வேந்தராகியுலகாண்டு வீடுகதிபெறுவரே. திருச்சிற்றம்பலம்.

திருக்கோகரணம்-திருவிராகம்-பண்-சாதாரி. திருச்சிற்றம்பலம்.

என்றுமரியானயலவர்க்கியலிசைப்பொருள்களாகியெனதுள்
நன்றுமெளியானொளிசிறந்தபொன்முடிக்கடவுணண்ணுமிடமா
மொன்றியமனத்தடியர்கூடியிமையோர்பரவுநீடரவமார்
குன்றுகணெருங்கிவிரிதண்டலைமிடைந்துவளர்கோகரணமே.

கோடலரவீனும்விரிசாரன்முனெருங்கிவளர்கோகரணமே
யீடமினிதாகவுறைவானடிகள்பேணியணிகாழிநகரா
னுடியதமிழ்க்கிளவியின்னிசைசெய்ஞானசம்பந்தன்மொழிகள்
பாடவலபத்தரவரொத்திசையுமாள்வர்பரலோகமெளிதே. திருச்சிற்றம்பலம்.

திருஇந்திரநீலப்பருப்பதம்-பண்-இந்தளம்- திருச்சிற்றம்பலம்.

குலவுபாரிடம்போற்றவீற்றிருந்த, விலகுமாமழுவேந்துமங்கையர்
நிலவுமிந்திரநீலபர்ப்பதத், துலவினனடியுள்கநல்குமே.

கந்தமார்பொழில்சூழ்ந்தகாழியா, னிந்திரன்றொழுநீலபர்ப்பதத்
தந்தமில்லியையேத்துஞானசம், பந்தன்பாடல்கொண்டோதிவாழ்மினே.

திருச்சிற்றம்பலம்.

திருப்பருப்பதம்-வியாளக்குறிஞ்சி. திருச்சிற்றம்பலம்.

சுடுமணியுமிழ்நாகஞ்சூழ்தரவரைக்கசைத்தா, னிடுமணியெழிலானையேறலனெருதேறி
விடமணிமிடறுடையான்மேவியநெடுங்கோட்டுப், படுமணிவிடுசுடரார்பருப்பதம்பரவுதுமே.

வெண்செநெல்விளைகழனிவிழவொலிகழுமலத்தான், பண்செலப்பலபாடலிசைமுரல்பருப்பதத்தை
நன்சொலினாற்பரவுஞானசம்பந்தனல்ல, வொண்சொலினிவைமாலையுருவெணத்தவமாமே.

திருச்சிற்றம்பலம்.

திருவனேகதங்காபதம்-பண்-இந்தளம். திருச்சிற்றம்பலம்.

நீடல்மேவுதிமிர்புன்சடைமேலோர்நிலாமுளை, சூடல்மேவுமறையின்முறையாலோர்சுலாவழலாடன்மேவுமவர்மேயவனேகதங்காபதம், பாடல்மேவுமனத்தார்வினைபற்றறுப்பார்களே.

தொல்லையூழிப்பெயர்தோன்றியதோணிபுரத்துறை,நல்லகேள்வித்தமிழ்ஞானசம்பந்தனல்லார்கண்முனல்லல்தீரவுரைசெய்தவனேகதங்காபதஞ், சொல்லநல்லவடையும்மடையாசுடுதுன்பமே.

திருச்சிற்றம்பலம்.

திருக்காளத்தி-பண்-கொல்லி. திருச்சிற்றம்பலம்.

சந்தமாரகிலொடுசாதிதேக்கும்மர, முந்துமாமுகலியின்கரையினிலுமையொடு
மந்தமார்பொழில்வளர்மல்குகாளத்தி, யெந்தையாரிணையடியென்மனத்துள்ளவே.

அட்டமாசித்திகளணைதருகாளத்தி, வட்டவார்சடையனைவயலணிகாழியான்
சிட்டநான்மறைவல்லஞானசம்பந்தன்சொ, லிட்டமாப்பாடுவார்க்கில்லையாம்பாவமே.

திருச்சிற்றம்பலம்.

திருவேற்காடு-பண்-பழந்தக்கராகம். திருச்சிற்றம்பலம்.

ஒள்ளிதுள்ளக்கதிக்காமிவனொளி, வெள்ளியானுறைவேற்காடு
வுள்ளியாருயர்ந்தாரிவ்வுலகினிற், றெள்ளியாரவர்தேவரே.

விண்டமாம்பொழில்சூழ்தருவேற்காடு, கண்டுநம்பன்கழல்பேணிச்
சண்பைஞானசம்பந்தன்செந்தமிழ், கொண்டுபாடக்குணமாமே.

திருச்சிற்றம்பலம்.

திருவலிதாயம்-பண்-நட்டபாடை. திருச்சிற்றம்பலம்.

பத்தரோடுபலரும்பொலியம்மலரங்கைப்புனல்தூவி, யொத்தசொல்லியுலகத்தவர்தாந்தொழுதேத்தவுயர்சென்னி, மத்தம்வைத்தபெருமான்பிரியா துறைகின்றவலிதாயஞ், சித்தம்வைத்தவடியாரவர்மேலடையாமற்றிடர்நோயே.

வண்டுவைகும்மணமல்கிய சோலைவளரும் வலிதாயத், தண்டவாணனடியுள்குதலாலருமாலைத்தமிழாகக், கண்டல்வைகுகடற்காழியுள்ஞானசம்பந்தன்றமிழ்பத்துங், கொண்டுவைகியிசைபாடவல்லார்குளிர்வானத்துயர்வாரே. திருச்சிற்றம்பலம்.

திருவொற்றியூர்-பண்-பஞ்சமம். திருச்சிற்றம்பலம்.

விடையவன்விண்ணுமண்ணுந்தொழநின்றவன் வெண்மழுவாட், படையவன்பாய்புலித் தோலுடைகோவணம்பல்கரந்தைச், சடையவன்சாமவேதன்சசிதங்கியசங்கவெண்டோ, டுடையவன்னுனமில்லியுறையும்மிடமொற்றியூரே.

ஒண்பிறைமல்குசென்னி யிறைவன்னுறையொற்றியூரைச், சண்பையர்தந்தலைவன்றமிழ்ஞானசம்பந்தன்சொன்ன, பண்புனைபாடல்பத்தும்பரவிப்பணிந்தேத்தவல்லார், விண்புனைமேலுலகம்விருப்பெய்துவர்வீடெளிதே. திருச்சிற்றம்பலம்.

அதுநிற்கதிருமயிலாப்பூரிலே வைசியர்குலத்திலே சிவபத்தி அடியார்பத்திகளிற்சிறந்தவரும். பரசமயங்களைப்பாற்றல் வேண்டும் என்னும் சிந்தையுள்ளவரும், பெருஞ்செல்வரும் ஆகியசிவநேசர் என்பவர் ஒருவர் உளர். அவர் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் ஞானப்பால் உண்டமையையும், உலகம் உய்யும்பொருட்டுத் திருப்பதிகங்களிலே ஆருகதத்தையும் பௌத்தத்தையும் இழித்துறைத்தலையும் சிவனடியார்கள் சொல்லகேள்வியுற்று மனமிகமகிழ்ந்து, அவருடைய திருவடிகளிலே பேரன்புடையராகி, அகோராத்திரம் அவருடைய திருவருட் டிறங்களையே பேசல்கேட்டல் ஆகிய தொழிலினராயினர். அவர்மகா ஐசுவரியமும் கீர்த்தியும் உடையராயினும் பிள்ளைப்பேறு இன்மையால் மிகக்கவலையுற்று, சிவபூசை அடியார்பூசைகள்செய்து, ஒருபெண்பிள்ளையைப் பெற்றார். அப்பெண் செந்தாமரை ஆசனியாகிய இலக்குமிபோல மகாசௌந்தரியம் உடையளாதலால், அவளுக்குப்பூம்பாவை என்னும்பெயர்கொடுக்கப்பட்டது, அவளுக்குப் பெதும்பைப் பருவம்வந்தபின், தந்தையார் அவளுடைய குணுதிசயங்களைக்கண்டு வியப்புற்று மனமகிழ்ந்து இவளை விவாகம்செய்பவரே என்னுடைய அளவிறந்த திரவியங்களுக்கு உரியவர் என்றார் அந்நாட்களிலே திருஞானசம்பந்தப்பிள்ளையார் பாண்டிநாட்டிற்சென்று செய்தருளிய திருவருட்டிறங்கள் எல்லாவற்றையும் அறிந்தவர்கள்வந்து சிவநேசருக்குச் சொன்னார்கள் சிவநேசர் அதைக்கேட்டு மனமகிழ்ந்து அவர்கள் எல்லாருக்கும் அளவிறந்த திரவியங்களைக்கொடுத்து, பிள்ளையாரைத் திக்குநோக்கி,நமஸ்கரித்து எழுந்துநின்று தம்முடையசுற்றத்தார்கள் சமஸ்தரும்கேட்க, அடியேன் என்னுடைய புத்திரியாகிய பூம்பாவையையும்திரவியங்களையும் என்னையும் திருஞானசம்பந்தமூர்த்தி

சுவாமிகளுக்குக் கொடுத்துவிட்டேன் என்றுசொல்லி, அத்தியந்தஆனந்தம் அடைந்தார். ஒருநாள் பூம்பாவை சேடியரோடு கன்னிமாடத்துக்குப் பக்கத்தில் இருக்கின்ற பூஞ்சோலையிற் சென்று பூக்கொய்யும்பொழுது ஒருபாம்பு மாதவிப்பந்தரிலே மறைந்துவந்து அவளுடைய விரலிலே காளி காளாத்திரி யமன் யமதூதி என்னும் நாலு தந்தங்களும் எலும்பிலே தாவக்கடித்து, நஞ்சை உகுத்து மேலேபடத்தைவிரித்து நின்றாடி அடங்கிற்று பூம்பாவைமயங்கிவிழ சேடியர்கள் அச்சுற்று அவளைத்தாங்கி கன்னிமாடத்தினுள்ளே கொண்டுபோனார்கள் சிவநேசர் சுற்றத்தாரோடு மனங்கலங்கி அழுதார். விஷவைத்தியர்கள் அனேகர், தனித்தனியே மந்திரதியானபாவகங்கள்செய்தும் எண்ணிறந்த ஔஷதங்களைப் பிரயோகித்தும் விஷம்நீங்காமல் ஏழுவேகமும் முறையேபொங்கித் தலைக்கொண்டது ஆவிதங்குதற்கு உரிய குறிகள் இல்லாமையால் விஷவைத்தியர்கள்கைவிட, சுற்றத்தார்கள் அவள்மேல்விழுந்து அலறி அழுதார்கள் சிவநேசர் ஒருவாறுதெளிந்து, இந்தவிஷத்தை நீக்கினவர்களுக்கு என்னுடைய அளவிறந்த திரவியங்களைக்கொடுப்பேன் என்று பறை அறைவித்தார் மூன்றுநாள் அளவும் அரசரிடத்துள்ளோர் முதலாகியமந்திரவாதிகள் சமஸ்தரும்வந்து தங்கள் செய்கையினாலே தீராமையால் திரும்பிவிட்டார்கள் சிவநேசர் அதுகண்டுமயங்கி பின்பு இவளைப் பிள்ளையாருக்கு என்றுசொல்லியதனால் நான் துன்புறவேண்டுவது இல்லை என்று துன்பம் நீங்கி பிள்ளையார்வருமளவும் இவ்வுடலைத்தகனஞ்செய்து எலும்பையும் சாம்பலையும் சேமித்துவைப்பேன் என்றுதுணிந்து அப்படியேதகனம்செய்து எலும்பையும் சாம்பலையும் ஓர்குடத்தில் இட்டு கன்னிமாடத்திலே வஸ்திரஞ்சாத்தி ஆபரணங்கள் அணிந்து பஞ்சணைமேல் வைத்தார். தினந்தோறும் தவறாமல் மஞ்சனம் மாலைசந்தனம் அன்னம் விளக்கு முதலியவைகளை அமைத்தார் அதனை அறிந்த யாவரும் வியப்புற்றார்கள்.

இப்படிநிகழும்நாளிலே, பிள்ளையார் திருக்கூட்டத்தோடு திருவொற்றியூரில்வந்து சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு இருக்கின்றார் என்றுஅவ்வூரவர்கள் பலர்வந்து சிவநேசருக்குச்சொன்னார்கள்அவர் அவர்கள் எல்லாருக்கும் வஸ்திரங்களையும் பொன்களையும்கொடுத்து, பெருங்களிப்புடையராகி திருவொற்றியூர்வரைக்கும் நடைப்பந்தல் இட்டு வஸ்திரங்களால் விதானித்து கமுகுகளும் வாழைகளும்நாட்டி தோரணங்கள் நிரைத்துகொடிகள்கட்டி, மாலைகள்தூக்கி அலங்கரிப்பித்தார். பின்பு திருவொற்றியூரிற்சென்று திருஞானசம்பந்தப்பிள்ளையாருடைய திருவடிகளை வணங்குவேன் என்று எழுந்து அம்மயிலாப்பூரில் இருக்கின்ற சிவனடியார்களும் உடன்செல்லச்சென்று, திருவொற்றியூருக்குச் சமீபித்தார். அப்பொழுது, பிள்ளையாரும் திருவொற்றியூரை அகன்று, மயிலாப்பூரைநோக்கி அடியார் கூட்டத்தோடெழுந்தருளிவந்தார். சிவநேசரும் சிவனடியார்களும் அடியார் திருக்கூட்டத்தைத் தூரத்திலேகண்டு சிவகுமாரராகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் எழுந்தருளி வருகின்றார் என்று அளவில்லாத மகிழ்ச்சிகொண்டு, விழுந்து நமஸ்கரித்தார்கள். பிள்ளையார் அவர்களை எதிர்தொழுது. சிவநேசருடைய செய்கையை அடியார்கள் சொல்லக்கேட்டு, மயிலாப்பூரை அடைந்தார் சிவநேசரிடத்து நிகழ்ந்ததைத் திருவுளத்தடைத்து, அவருடையகருத்தைமுற்றுவித்தற்கும் சமணரும் பௌத்தரும்ஆகியபுறச்சமயிகளுடைய இழிப்புரைகளை ஒழித்தற்கும் திருவுளங்கொண்டு, கபாலீச்சரம் என்னும் ஆலயத்திற் பிரவேசித்து பரமசிவனை நமஸ்கரித்து, ஸ்தோத்திரஞ் செய்துகொண்டு, கோயிலுக்குப் புறத்திலே வந்து. சிவநேசரைநோக்கி உம்முடைய மகளினது எலும்பைநிறைத்தகுடத்தைக்கோயிற்புறமதிற்றிருவாயிலே கொண்டுவாரும் என்று அருளிச்செய்தார். சிவநேசர் பெருங்களிப்புடையராகி, விழுந்துநமஸ்கரித்து எழுந்து, தம்முடைய வீட்டை அடைந்து, கன்னிமாடத்திலேபுகுந்து வெந்தசாம்பரும் எலும்பும் நிறைத்தகுடத்தை எடுத்து மூடுகின்ற இரத்தினச் சிவிகையினுள்ளே வைத்து சேடியர்கள் சூழ்ந்துசெல்லும்படி எடுப்பித்துக்கொண்டு வந்து கோபுரத்துக்கு எதிரே சிவிகையைநீக்கி அக்குடத்தைஎடுத்து சுவாமிக்கு அபிமுகத்திலேவைத்து நமஸ்காரம்பண்ணினார் மயிலாப்பூரில் இருக்கின்றவர்களும் மற்றை ஊர்களில் உள்ளவர்களும் சமணர்முதலாகிய புறச்சமயிகளும் பார்க்கும்பொருட்டுப் பக்கத்திலே வந்து சூழ்ந்தார்கள் தேவர்கள் முதலியோர் ஆகாயத்திலேவந்து நெருங்கினார்கள் பசுகரணமின்றிச் சிவகரணமுடைய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் சர்வான்மாக்களுக்கும் உறுதியப்பித்தற்பொருட்டு, அடியார் திருக்கூட்

டம்பக்கத்திலே தம்மைச்சூழ்ந்துவரும்படி கோபுரவாயிலின் நேரேவந்து, பூம்பாவையினது அத்தியிருக்கின்ற மட்குடத்தைக்கண்டு, சுத்தசாட்குண்ணியசொரூபியாகிய பரமசிவனுடைய திருவருளின்பெருமையைச்சிந்தித்து, இப்பூமியிலே இறந்தவர்களுடையஎலும்பைப்பின்னும்நன்னெறிப்படுத்த அந்நன்மை அவ்வெலும்போடு தொடர்ச்சியாகும்என்று, அருணோக்கினாலே பூம்பாவாய் என்றுவிளித்து,பூமியிலே மானுடப்பிறப்பு எடுத்தவர்கள் பெறும்பயன் அன்புடனே பரமசிவனுடைய அடியார்களை அமுது செய்வித்தலும் சைவாகமவிதிப்படி செய்யப்படுகின்ற அவருடைய திருவிழாவைத் தரிசித்துஆனந்தம் அடைதலுமே என்பது சத்தியமாயில் நீஇவ்வுலகர்முன் வருவாய் என்று"மட்டிட்டபுன்னை"என்னும்திருப்பதிகத்தைஎடுத்தருளினார்.

திருமயிலைபூம்பாவைதிருப்பதிகம்-பண்-சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்.

மட்டிட்டபுன்னையங்கானன்மடமயிலைக், கட்டிட்டங்கொண்டான்கபாலீச்சரமமர்ந்தா
னொட்டிட்டபண்பினுருத்திரபல்கணத்தார்க், கட்டிட்டல்காணாதேபோதியோபூம்பாவாய்.

கானமர்சோலைக்கபாலீச்சரமமர்ந்தான், றேனமர்பூம்பாவைபாட்டாகச்செந்தமிழான்
ஞானசம்பந்தனலம்புகழ்ந்தபத்தும்வல்லார், வானசம்பந்தத்தவரோடும்வாழ்வாரே.

திருச்சிற்றம்பலம்.

அதிலே அருளிச்செய்யப்பட்ட "போதியோ" என்னுந்திருவாக்காகிய அமிர்தம் அவ்வங்கத்திலேபொருந்த அதுகுடத்தினுள்ளே சரீரமாய்ப் பரிணமித்தது. பூம்பாவை முதற்பாட்டிலே வடிவுபெற்று வேறெட்டுப்பாட்டிலே பன்னிரண்டுவயசடைந்து குடத்தினுள் அடங்கியிருந்தனள் பின்பு பிள்ளையார் சமணர்களும் பௌத்தர்களும் இச்செய்கையை ஏற்றதன்று என்று எடுத்துச்சொல்வார்கள் என்னுங்கருத்தினால், பத்தாந்திருப்பாட்டை அருளிச்செய்தார், அப்பொழுது பூம்பாவை தன்கைவெளியேதோன்ற, குடம் உடைந்து எழுந்தாள் அங்ஙனம் எழுந்துநின்றபூம்பாவையைக்கண்டவர்கள் எல்லாரும் அற்புதம் எய்தினார்கள். சிவனடியார்கள் எல்லாரும் ஹரஹர என்று சொல்லும் ஓசைமிக்கோங்கிற்று தேவர்களும் முனிவர்களும் திருவருட்சிறப்பைநோக்கி புஷ்பமாரிபொழிந்தார்கள். பூமியில் உள்ளவர்கள் இது எங்கள் பரமசிவனுடைய பெருங்கருணையே என்று கைகள் சிரசின்மேல் ஏறிக்குவிய ஆனந்தபராயணராய் வீழ்ந்தார்கள் அவ்வற்புதத்தைக்கண்ட சமணர்முதலிய புறச்சமயிகள் எல்லாரும் ஏங்கித் தள்ளாடிவிழுந்தார்கள். எண்ணில்லாதவயசுள்ள பிரமதேவர் தம்மாலே படைக்கப்பட்ட திலோத்தமையினிடத்தே அவளினது அழகின்வெள்ளத்தை நான்குமுகத்தினாலேகண்டார் பதினாறுவயசுள்ள திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளோ அவளினும்பார்க்க மிகுந்தசௌந்தரியத்தையுடைய தம்மாலேபடைக்கப்பட்ட பூம்பாவையினிடத்தே பரமசிவனது பெருங்கருணை வெள்ளத்தை ஆயிரமுகத்தினாலே கண்டார். பூம்பாவையைக்கண்ட தந்தையாராகிய சிவநேசர் பிள்ளையாருடைய திருவடிகளிலே விழுந்து நமஸ்கரித்தார். பூம்பாவை பரமசிவனைவணங்கி பின்பு பிள்ளையாரைநமஸ்கரித்து எழுந்துநின்றாள். பிள்ளையார் சிவநேசரைநோக்கி இனி உம்முடைய புத்திரியை வீட்டிற்குக்கொண்டுபோம் என்று திருவாய்மலர்ந்தருளினார். சிவநேசர் பிள்ளையாருடைய திருவடிகளை வணங்கித் துதித்து சுவாமீ அடியேன் அருமையாகப்பெற்ற இப்புத்திரியைத் தேவரீர் திருமணஞ்செய்தருளல்வேண்டும் என்றுபிரார்த்திக்க பிள்ளையார் அவரைநோக்கி, நீர்பெற்றபெண் விஷத்தினால் இறந்தபின் நாம் சர்வான்மாக்களும் உய்யும்படி அவர்களுக்குப்பரமசிவனது திருவருண்மகிமை விளங்கும்பொருட்டு உற்ப விப்பித்தமையால், இவ்வார்த்தைதகாது என்றுமறுத்தருளினார் அதுகேட்டுச் சிவநேசரும் அவர்பந்துக்களும் மயங்கி, பிள்ளையாருடைய திருவடிகளிலே விழுந்து அழ பிள்ளையார் அவர்களுடையபெருந்துயரம் தணியும்பொருட்டு வேதாகமத்துணிவை அவர்களுக்கு எடுத்துப் போதித்தருளினார் அதுகேட்ட சிவநேசரும் பந்துக்களும் கவலைநீங்கினார்கள். பிள்ளையார் கோயிலினுள்ளே எழுந்தருளினார். சிவநேசர், பூம்பாவையை வேறொருவருக்கும் விவாகம்செய்து கொடுப்பதில்லை என்று கொண்டுபோய் கன்னிமாடத்தில்வைத்தார். அவள் சிவத்தை

அடைந்தனள். கோயிலினுள்ளே எழுந்தருளிய பிள்ளையார் சுவாமியைவணங்கி திருவருளைத்துதித்து திருப்பதிகம்பாடிக்கொண்டு புறம்போந்து வீற்றிருந்தருளினர்.

சிலநாளாயினபின், பிள்ளையார் அம்மயிலாப்பூரை அகன்று அங்குள்ள திருத்தொண்டர்கள் விடைகொள்ள, சிவநேசருக்குவருத்தம்நீங்கும்படி மதுரமொழி அருளி விடைகொடுத்துச் சென்று, வான்மியூர் இடைச்சுரம் திருக்கழுக்குன்று அச்சிறுபாக்கம் அரசிலி புறவார்பனங்காட்டூர் முதலாகியஸ்தலங்களைவணங்கிக்கொண்டு, சிதம்பரத்தை அடைந்து காலந்தோறும் சபாநாயகரைத் தரிசனம்செய்து கொண்டு இருந்தார்.

திருவான்மியூர்-பண்-இந்தளம். திருச்சிற்றம்பலம்.

கரையுலாங்கடலிற்பொலிசங்கம்வெளிப்பிவன், றிரையுலாங்கழிமீனுகளுந்திருவான்மியூ
ருரையுலாம்பொருளாயுலகாளுடையீர்சொலீர், வரையுலாமடமாதுடனுகியமாண்பதே.

மாதோர்கூறுடைநற்றவனைத்திருவான்மியூ, ராதியெம்பெருமானருள்செய்யவினவுரை
போதியென்றெழுகாழியுள்ஞானசம்பந்தன்சொல், நீதியானினைவார்நெடுவானுலகாள்வரே.

திருச்சிற்றம்பலம்.

திருஇடைச்சுரம்-பண்-குறிஞ்சி. திருச்சிற்றம்பலம்.

வரிவளரவிரொளியரவரைதாழவார்சடைமுடிமிசைவளர்மதிசூடிக்
கரிவளர்தருகழற்கால்வலனேந்திக்கனலெரியாடுவர்காடரங்காக
விரிவளர்தருபொழிலிளமயிலாலவெண்ணிறத்தருவிகடிண்ணெனவீழு
மெரிவளரினமணிபுனமணிச்சாரலிடைச்சுரமேவியவிவர்வணமென்னே.

மடைச்சுரமறிவனவாளையுங்கயலுமருவியவயறனில்வரும்புனற்காழிச்
சடைச்சுரத்துறைவதோர்பிறையுடையண்ணல்சரிதைகள்பரவிநின்றுருகுசம்பந்தன்
புடைச்சுரத்தருவரைப்பூக்கமழ்சாரற்புணர்மடநடையவர்புடையிடையார்ந்த
விடைச்சுரமேத்தியவிசையொடுபாடலிவைசொலவல்லவர்பிணியிலர்தாமே. திருச்சிற்றம்பலம்.

திருக்கழுக்குன்றம்-பண்-குறிஞ்சி. திருச்சிற்றம்பலம்.

தோடுடையானொருகாதிற்றூயகுழைதாழ, வேடுடையான்றலைகலனுகவிரந்துண்ணு
நாடுடையானள்ளிருளேமநடமாடுங், காடுடையான்காதல்செய்கோயில்கழுக்குன்றே.

கண்ணுதலான்காதல்செய்கோயில்கழுக்குன்றை, நண்ணியசீர்ஞானசம்பந்தன்றமிழ்மாலை
பண்ணியல்பாற்பாடியபத்துமிவைவல்லார், புண்ணியராய்விண்ணவரோடும்புகுவாரே.

திருச்சிற்றம்பலம்.

திருஅச்சிறுபாக்கம்-பண்-குறிஞ்சி. திருச்சிற்றம்பலம்.

பொன்றிரண்டன்னபுரிசடைபுரளப்பொருகடற்பவளமோடழனிறம்புரையக்
குன்றிரண்டன்னதோளுடையகலங்குலாயவெண்ணூலொடுகொழும்பொடியணிவர்
மின்றிரண்டன்னநுண்ணிடையரிவைமெல்லியலாளையோர்பாகமாப்பேணி
யன்றிரண்டுருவமாயவெம்மடிகளச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே.

மைச்செறிகுவளைதவளைவாய்நிறையமதுமலர்ப்பொய்கையிற்புதுமலர்கிழியப்
பச்சுறவெறிவயல்வெறிகமழ்காழிப்பதியவரதிபதிகவுணியர்பெருமான்
கைச்சிறுமறியவன்கழலலாற்பேணுக்கருத்துடைஞானசம்பந்தனறமிழ்கொண்
டச்சிறுபாக்கத்தடிகளையேத்துமன்புடையடியவருவினையிலரே திருச்சிற்றம்பலம்.

திருஅரசிலி-பண்-பியந்தைக்காந்தாரம். திருச்சிற்றம்பலம்.

பாடல்வண்டறைபான்மதிபாய்புனற்கங்கை, கோடல்கூவிளமாலைமத்தமுஞ்செஞ்சடைகுலாவி [யே
வாடல்வெண்டலைமாலைமருவிடவல்லியந்தோன்மே, லாடன்மாசுணமசைத்தவடிகளுக்கிடமரசிலி

அல்லிநீள்வயல்சூழ்ந்தவளைசிலியடிகளைக்காழி, நல்லஞானசம்பந்தனற்றமிழ்பத்திவைநாளுஞ்
சொல்லவல்லவர்தம்மைச்சூழ்ந்தமரர்தொழுதேத்த, வல்லர்வானுலகேத்தவைகலுமகிழ்ந்திருப்பாரே.

திருச்சிற்றம்பலம்.

பின்பு சிவபாதவிருதயரும் சீர்காழியில்உள்ள மற்றப் பிராமணர்களும் அடியார்களும் பிள்ளையார் சிதம்பரத்தில்வந்து இருக்கின்றார் என்று கேள்வியுற்று வந்துசேர்ந்தார்கள் பிள்ளையார் அவர்களோடு சபாநாயகரைவணங்கி அருள்பெற்று சிதம்பரத்தை அகன்று, சீர்காழியை அடைந்து காலந்தோறும் தோணியப்பரைவணங்கிக்கொண்டு இருந்தார். இருக்கும்நாளிலே முருகநாயனர் திருநீலநக்கநாயனர் முதலாகிய திருத்தொண்டர்கள் சுற்றத்தார்களோடு சீர்காழியில்வந்து பிள்ளையாரைச் சேவித்துக்கொண்டு இருந்தார்கள்.

திருவேணுபுரம்-பண்-நட்டபாடை. திருச்சிற்றம்பலம்.

வண்டார்குழலரிவையொடுபிரியாவகைபாகம், பெண்டான்மிகவானன்பிறைச்சென்னிப்பெருமானூர்
தண்டாமரைமலராளுறைதவளந்நெடும்மாடம், விண்டாங்குவபோலும்மிகுவேணுபுரமதுவே.

வேதத்தொலியானமிகுவேணுபுரந்தன்னைப், பாதத்தினின்மனம்வைத்தெழுபந்தன்னுரைபாட
லேதத்தினையில்லாவிவைபத்தும்மிசைவல்லார், கேதத்தினையில்லார்சிவகெதியைப்பெறுவாரே.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீகாழி-திருவிராகம்-பண்-நட்டராகம். திருச்சிற்றம்பலம்.

நம்பொருணமக்கஎன்றுநச்சியிச்சைசெய்துநீ, ரம்பலம்மடைந்துசாலவல்லலுய்ப்பதன்முன
மும்பர்நாதனுத்தமன்னொளிமிகுத்தசெஞ்சடை, நம்பன்மேவுநன்நகர்நலங்கொள்காழிசேர்மினே.

தக்கனார்தலையரிந்தசங்கரன்றனக்கரை, யக்கினோடரவசைத்தவந்திவண்ணன்காழியை
யொக்கஞானசம்பந்தனுரைத்தபாடல்வல்லவர், மிக்கவின்பமெய்திவீற்றிருந்துவாழ்தன்மெய்ம்மையே.

திருச்சிற்றம்பலம்.

பின்பு சிவபாதவிருதயரும் அவர்பந்துக்களும் ஒருங்குகூடி, திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகள் திருமணஞ்செய்தருளுதற்கு இதுவேபருவமென்று எண்ணி, பிள்ளையாரைஅணைந்து, சுவாமீ, தேவரீர் வைதிகச்சடங்கைப் பிறருக்குக்காட்டும்பொருட்டு, ஓர் கன்னியைவிவாகம்செய்தருளல்வேண்டும்என்றுவிண்ணப்பஞ் செய்தார்கள். பிள்ளையார் அதுகூடாது என்று மறுத்தருளபிராமணர்கள் பின்னும் கைதொழுதுதேவரீர் இப்பூமியின்கண்ணே வேதநெறியை ஸ்தாபிக்கப்புகுந்தீர், ஆதலால், அவ்வேதவிதிப்படி திருமணஞ்செய்தருளுதற்குத்திருவுளஞ்செய்தல்வேண்டும் என்றார்கள் பிள்ளையார் வேதநெறி நிலைப்படும்பொருட்டு, அதற்கு உடன்பட்டருளினர். அதுகண்ட தந்தையாரும் மற்றப்பிராமணர்களும், இது பரமசிவனுடைய திருவருள் என்று உருகிமனமகிழ்ந்து திருநல்லூரில் இருக்கின்றபிராமணருள் நம்பாண்டார்நம்பி என்பவருடைய புத்திரியே திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு மனைவியாதற்கு யோக்கியதை உடையவள் என்று எண்ணினார்கள். தந்தையாராகிய சிவபாதவிருதயர் பிராமணர்களோடும் திருத்தொண்டர்களோடும் விவாகம்பேசுதற்குத் திருநல்லூரைச்சமீபித்து, அங்குநின்று சுற்றத்தாரோடுவந்து தம்மை எதிர்கொண்டுவணங்கிய நம்பாண்டார்நம்பியோடுஅவர்வீட்டைஅடைந்தார்.

நம்பாண்டார்நம்பி சிவபாதவிருதயரையும் மற்றையோரையும் சற்காரம்செய்து-நீங்கள்இங்கே எழுந்தருளிவந்தது என் என்றுவினவ அவர்கள் நம்பாண்டார் நம்பியைநோக்கிநாங்கள் திருஞானசம்பந்தப்பிள்ளையாருக்கு உம்முடையபுத்திரியை விவாகம்பேசவந்தோம் என்று சொல்ல, நம்பாண்டார்நம்பிபெருங்களிப்புடையராகி சிவபாதவிருதயரைநோக்கி சுவாமீதேவரீருடையபெருந்தவத்தினால் திருவவதாரம்செய்தவரும் உலகமாதாவாகிய உமாதேவியுடைய திருமுலைப்பாலை உண்டவரும் ஆகிய திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்குஅடியேன் யானும் என்குலமும் உய்யும் பொருட்டு என்குலக்கொழுந்தை விவாகம்செய்துகொடுத்தற்கு என்னதவம் செய்தேனோ என்றார் தந்தையார் மற்றவர்களோடுமகிழ்ச்சியுடன் சீர்

காழிக்குமீண்டுசென்று, பிள்ளையாருக்குஅதனைத் தெரிவித்து சோதிடர்களைக்கொண்டு விவாகத்திற்குச் சுபதினமும் சுபமுகூர்த்தமும் நியமிப்பித்துஎங்கும் விவாகபத்திரம் பெருஞ்சிறப்பினோடு அனுப்பி, விவாகத்துக்குவேண்டும் முயற்சிகளைச் செய்வித்தார் நம்பாண்டார் நம்பியும்விவாகத்துக்குவேண்டும் முயற்சிகளைச் செய்வித்தார்பிள்ளையார் விவாகதினத்துக்கு முதற்றினத்திலே சமாவர்த்தனம் பண்ணி, ரக்ஷாபந்தனஞ்செய்து,மற்றநாள் காலையில்நித்தியகர்மங்களைச் செய்து, திருத்தோணியப்பரை வணங்கிக்கொண்டு-முத்துச்சிவிகைமேல் ஏறி திருக்கல்யாணத் தரிசிக்கவந்த சமஸ்தரும்சூழ மங்கலவாத்தியங்கள் ஒலிக்க, குடைகள் சாமரங்கள் ஆலவட்டங்கள் முதலியன நெருங்க முத்துக்குடைநிழற்ற மகா அலங்காரத்தோடு சென்று திருநல்லூரைச்சமீபித்து அங்கிருந்துவந்த அனேகர் எதிர்கொள்ளப் போய் அங்குள்ள திருப்பெருமணம் என்னும் ஆலயத்திற்பிரவேசித்து சுவாமியைவணங்கித் திருப்பதிகம்பாடிக்கொண்டு பிராமணர்களுடைய வேண்டுகோளின்படி கோயிலுக்குப்புறத்தில் இருக்கின்ற ஒருதிருமடத்திலே புகுந்தருளினார் பிராமணர்கள் பிள்ளையாரைப் பத்துத்துவரையும் ஓமாலிகை முப்பத்திரண்டும் விரை ஐந்தும் ஆகிய இருவகை வாசனைத்திரவியங்களையும்வெவ்வேறு சேர்த்து அரைத்துத்திருமேனியிலே பூசி திருமஞ்சனநீர்ஆட்டி விலைமதிப்பில்லாதவஸ்திராபரணங்களாலே கோலம்செய்தார்கள் பின்பு பிள்ளையார் பரமசிவனது திருக்கண்ணினின்றும் உதிக்கும் திருவருட் குறியாகிய உருத்திராக்ஷ மாலையைச்சர்வலோகத்தாரும் துதிக்கும்படிவணங்கி, தாமே எடுத்துத்தரித்துபசுமலநீக்கத்துச்சிவத்துவக்குறியாகி அழகுக்கு அணியாய் விளங்குகின்ற திருவெண்ணீற்றைத் திருவைந் தெழுத்தோதிச் சாத்திக்கொண்டு மிக அலங்கரிக்கப்பட்டவீதியிலே எழுந்தருளிவந்து பரமசிவனைவணங்கி முத்துச்சிவிகைமேல் ஏறியருளினார் அப்பொழுது பலவகைப்பட்டவாத்தியங்களும் ஒலித்தன ஆகாயத்திலுள்ளதேவர்கள் கற்பகப்பூமாரிபெய்தார்கள். பிராமணர்கள் வேதகோஷஞ்செய்தார்கள். பிள்ளையார் முத்துக்குடைநிழற்ற, முத்துச்சின்னங்கள் எல்லாம் தம்முடைய எண்ணில்லாத திருநாமங்களை எடுத்து ஊத எழுந்தருளிவந்தார். பூம்பந்தருக்கு முன்வந்தவுடனே முத்துச்சிவிகையினின்றும் இறங்கி, பூக்களும் பொற்சுண்ணமும்பரந்த பாவாடைமேல்நடந்து திருக்கல்யாணமண்டபத்துட்சென்று இரத்தினாசனத்தின்மேல் வீற்றிருந்தருளினார் அப்பொழுது நம்பாண்டார்நம்பி தம்முடைய மனைவியார் பசுப்பாலும் சுத்தஜலமும் ஏந்திப் பின்வரவந்து பிள்ளையாரைப் பரமசிவனாகப்பாவித்து தம்முடைய மனைவியார் கரகநீரைவார்க்க, அவருடைய ஸ்ரீபாதங்களைவிளக்கி, அங்ஙனம்செய்த தீர்த்தத்தைத் தம்முடைய சிரசின் மேலே புரோக்ஷித்து உள்ளும்பூரித்து சுற்றத்தார்கள்மேலும் தெளித்தார் பிள்ளையாருடைய திருக்கரத்திலே ஜலத்தைவார்த்து, தம்முடைய கோத்திரத்தைச்சொல்லி, என்னுடையபுத்திரியைத் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளுக்குக்கொடுத்தேன் என்றார். விவாகமுகூர்த்தம்வர மணமகளைக்கொண்டுவந்து பிள்ளையாருக்கு வலப்பக்கத்தில் இருத்தினார்கள். திருநீலநக்கநாயனார் திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருமுன்பே பரமசிவனைத்தியானித்துக்கொண்டு. வேதவிதிப்படிசடங்குசெய்ய வேதங்கள் ஒலிக்க, திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருமங்கலியத்தைச்சாத்தி பாணிக்கிரகணம்பண்ணி, பொரியை அக்கினியில் இட்டு பரமசிவனைத்துதித்து அக்கினியை வலஞ்செய்யவேண்டி அக்கினியாவார் பரமசிவனே என்று திருவுளங்கொண்டு திருப்பெருமணம் என்னும் சிவாலயத்திற்செல்லக்கருதி வேதவிதிப்படி வளர்க்கப்பட்ட அக்கினியை வலஞ்செய்து இந்த இல்லொழுக்கம்வந்து சூழ்ந்ததே நான் இவளோடு பரமசிவனது திருவடியை அடைவேன் என்று நினைந்து, சமஸ்தரும் சூழும்படி மனைவியாரோடு சென்று, அச்சிவாலயத்திற்பிரவேசித்து தம்முடைய திருமணத்தைத் தரிசித்தவர்களுடையபாசத்தைநீக்கத் திருவுளங்கொண்டு திருநல்லூர்ப் பெருமணத்தில் வீற்றிருக்குங் கடவுளே தேவரீருடைய திருவடிகளை அடையும்பதம் இது என்று, "கல்லூர்ப்பெருமணம்" என்னுந் திருப்பதிகத்தைப்பாடியருளினார்.

நல்லூர்ப்பெருமணம்-பண்-அந்தாளிக்குறிஞ்சி. திருச்சிற்றம்பலம்.

கல்லூர்ப்பெருமணம்வேண்டாகழுமலம், பல்லூர்ப்பெருமணம்பாட்டுமெய்யாய்த்தில
சொல்லூர்ப்பெருமணம்சூடலரேதொண்டர், நல்லூர்ப்பெருமணமேயநம்பானே.

நறும்பொழிற்காழியுள்ஞானசம்பந்தன், பெரும்பதநல்லூர்ப்பெருமணத்தானை
யுறும்பொருளாற்சொன்னவொண்டமிழ்வல்லார்க், கறும்பழிபாவமவமிலாரே. திருச்சிற்றம்பலம்.

அப்பொழுது கருணாநிதியாகிய பரமசிவன், நீயும் உன்மனைவியும் உன்னுடைய விவாகத்தைக் காணவந்தவர்கள் சமஸ்தரும் இந்தச் சோதியினுள்ளேவந்து நம்மை அடையுங்கள் என்று அருளிச்செய்து சுத்தசோதி வடிவமாகி, கோயிலுட்படமேலோங்குந் தன்மையால், அச்சோதிக்கு ஒரு வாயிலைவகுத்துக் காட்டியருளினர். திருபாசமுத்திரமாகிய திருஞானசம்பந்தசுவாமிசோதிவடிவாய் நின்றகடவுளை வணங்கித்துதித்து, உலகம் உய்யும்பொருட்டு அதனை அடையும்நெறியே அருளிச்செய்யத் திருவுளங்கொண்டு, யாவருக்கும்ஞான மெய்ந்நெறிநமச்சிவாய என்கின்ற மந்திரம் என்னுங்கருத்தையுடைய நமச்சிவாயத் திருப்பதிகத்தைச் சமஸ்தருங்கேட்க அருளிச்செய்தார்.

நமச்சிவாயப்பதிகம்-பண்-கவுசிகம்.

திருச்சிற்றம்பலம்.

காதலாகிக்கசிந்துகண்ணீர்மல்கி, யோதுவார்தமைநன்னெறிக்குய்ப்பதும்
வேதநான்கினுமெய்ப்பொருளாவதும், நாதநாமநமச்சிவாயவே.

நந்திநாமநமச்சிவாயவ்வெனுஞ், சந்தையாற்றமிழ்ஞானசம்பந்தன்சொல்
சிந்தையால்மகிழ்ந்தேத்தவல்லார்கண்மேற், பந்தபாசமறுக்கவல்லார்களே.

திருச்சிற்றம்பலம்.

இக்கலியாணங்காணவந்த எல்லீரும் உங்கள்சனனநோய்தீரும் பொருட்டு இந்தச் சோதியினுள்ளே பிரவேசியுங்கள் என்று திருவாய்மலர்ந்தருளினர். பிறவிக்கடலிலே கரைகாணாது அழுந்தி அறிவின்றி மயங்குகின்றவர்கள். பிள்ளையாருடைய திருமணத்தைச்சேவிக்கப் பெற்றமையால், அந்தச்சோதியினுள்ளே புகுந்தார்கள். திருநீலநக்கநாயனர் முருகநாயனர் சிவபாதவிருதயர்நம்பாண்டார்நம்பி திருநீலகண்டப்பெரும்பாணர்முதலிய திருத்தொண்டர்கள் தங்கள் தங்கள்மனைவியரோடும் சுற்றத்தாரோடும் புகுந்தார்கள் பிள்ளையாருடைய முத்துச்சிவிகைமுதலியவற்றைத்தாங்கிச்சென்றவர்களும்மற்றைப்பரிசனங்களுந்தொழுதுபுகுந்தார்கள். சைவர்பாசுபதர், மகாவிரதர், காளாமுகர், வாமர், வைரவர், என்கின்ற அறுவகை உட்சமயிகளும் வைதிகசைவர்களும் சைவசித்தாந்திகளும் ஆகியசமஸ்தரும் அந்தச் சுத்தசோதியினுள்ளேபுகுந்தபின்சர்வான்மாக்களையும் உய்விக்கும்பொருட்டுத் திருவவதாரம்செய்தருளிய சைவசித்தாந்த சமயாசாரியராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் தம்முடைய மனைவியாரைக் கைப்பற்றிக்கொண்டு அந்தச்சோதியைவலஞ்செய்து அதனுள்ளேபுகுந்து, சிவசாயுச்சியம் அடைந்தார் அதன்பின் அந்தச்சோதி மறைந்துவிட, திருப்பெருமணமாகிய கோயில்தோன்றுதலும், உலகத்திலே பேறில்லாதவர்கள் எல்லாரும் கவலைகொண்டார்கள் பிள்ளையார் சோதியுட்புகுந்தமையைத்தூரத்தேகண்டு நணுகப்பெறாத அரிபிரமேந்திராதி தேவர்களும் முனிவர்களும் கவலை நீக்க எடுத்து ஸ்தோத்திரம்பண்ணினார்கள்.

## ஏயர்கோன்கலிக்காமநாயனர் புராணம்.

ஏதமில்வேளாளர்பெருமங்கலத்துளேயர்கோன்கலிக்காமரிறையைநேரோ
தூதுகொளுமவனணுகிலென்னுமென்னுந்துணிவினர்பாலிறைவனருஞ்சூலையேவி
வேதனைவன்றொண்டன்வரினீங்குமென்னவெகுண்டுடல்வாள்கொடுதுறந்துமேயநாவற்
போதகமுமுடலிகழவெழுந்துதாழ்ந்துபோற்றியதுவிலக்கியருள்பொருந்தினரே.

சோழநாட்டிலே, திருப்பெருமங்கலத்திலே, வேளாளர்குலத்திலே, சோழராஜாக்களிடத்திலே பரம்பரையாகச் சேனாபதி உத்தியோகம் செய்கின்ற ஏயர்குடியிலே, கலிக்காமநாயனர் என்ப



ஏயர்கோன்கலிக்காமநாயனர்.

வர் ஒருவர் இருந்தார். அவர் குருலிங்க சங்கம பத்திகளிலே சிறந்தவர், திருப்புன்கூரி லுள்ள சிவாலயத்திலே அநேகந் திருப்பணிகள்செய்தவர் அவர் சுந்தரமூர்த்திசுவாமிகள் பரமசிவனைப் பரவையாரிடத்திற்குத் தூதாக அனுப்பிய சமாசாரத்தைக்கேள்வியுற்று வெம்பி மிகக்கோபித்து நாயனை அடியான் ஏவுங்காரியம்மிகநன்று இப்படிச்செய்பவன்தொண்டனாம், இது என்னபாவம் பொறுக்க ஒண்ணாத இந்தப் பெரும்பாதகத்தைக்கேட்டும் உயிரோடு இருக்கின்றேனே என்றார். ஒருவன் பெண்ணாசைமேலீட்டினால் ஏவ ஒப்பில்லாதகடவுள் தூதராய் ஓர் இரவுமுழுதும் போக்குவரவுசெய்து உழன்றாராம் அரிபிரமேந்திராதி தேவர்களாலும் அறியப்படாத கடவுள் இசைந்தாராயினும் அவன் அவரை ஏவலாமா இதற்குமனம் நடுங்காத அந்தத்துரோகியை நான்காணுநாள் எந்நாளோ பெண்பொருட்டுக் கடவுளை இரவிலே தூதனுப்பிய பாதகனைக்காண்பேனாயில் என்னசம்பவிக்குமோ என்றுசொல்லி, மிகச்செற்றங்கொண்டு இருந்தார். சுந்தரமூர்த்திசுவாமிகள் இதனைக்கேள்வியுற்று, அதனைக்குறித்துப் பரமசிவனுக்கு விண்ணப்பஞ்செய்ய, பரமசிவன் இருவரையும் கூட்டுதற்குத் திருவுளங்கொண்டு, கலிக்காமநாயனாரிடத்திலே சூலைநோயை ஏவ அது அக்கினியிலே காய்ச்சப்பட்ட வேல் குடைதல் போல மிக்கவேதனைசெய்ய கலிக்காமநாயனார் அதனால் மிகவருந்தி வீழ்ந்து உயிர்த்துணையாகிய பரமசிவனுடைய திருவடிகளைச் சிந்தித்துத் துதித்தார். அப்பொழுது பரமசிவன் அவரிடத்தில் எழுந்தருளி, சுந்தரனால் அன்றி இந்நோய்தீராது என்று அருளிச்செய்ய அவர் சுவாமீ பரம்பரையாகத் தேவரீரே மெய்க்கடவுள் என்றுதுணிந்து தேவரீருக்குத் திருத்தொண்டுகள் செய்துவருகின்ற குடியிலுள்ளேனாகிய என்னைவருத்துகின்ற சூலைநோயை நூதனமாக ஆண்டுகொள்ளப்பட்ட ஒருவனாவந்து தீர்ப்பான் அவனாலே தீர்க்கப்படுதலினும் தீராதொழிந்து என்னைவருத்துதலே நன்று, தேவரீர்செய்யும் பெருமையை அறிந்தவர் யாவர் வன்றொண்டனுக்கு ஆகும் உறுதியையே செய்வீர் என்றார். உடனே பரமசிவன் அவர்முன்னேமறைந்து, சுந்தரமூர்த்தியிடத்திற்சென்று நம்முடைய ஏவலாலே கலிக்காமனைவருத்துகின்றசூலையை நீபோய்த்தீர்ப்பாய் என்றார். சுந்தரமூர்த்திசுவாமிகள் அதைக்கேட்டுத் திருவுளமகிழ்ந்து, கலிக்காமநாயனாரிடத்திற்குப்போம்படி புறப்பட்டு சூலைதீர்க்கும்படி தாம்வருஞ்சமாசாரத்தை அவருக்குத் தெரிவித்தற்கு முன்னே ஆள் அனுப்பினார். அவ்வாளினாலே சுந்தரமூர்த்திசுவாமிகளுடையவரவை அறிந்த கலிக்காமநாயனார் எங்கள்கடவுளைத் தூதனுப்பியவன் சூலைநோய்தீர்த்தற்குவரில் நான் செய்வது என்னாம் அவன் இங்கேவந்து தீர்த்தற்குமுன்னே இச்சூலையை வயிற்றினோடும் கிழிப்பேன் என்று உடைவாளினாலே தம்வயிற்றைக்கிழித்துக்கொண்டு இறந்துபோனார். அதுகண்ட அவர்மனைவியாரும் அனுமரணம் செய்யப்புகும்போது சுந்தரமூர்த்திசுவாமிகள் சமீபித்துவந்துவிட்டார் என்று முன்வந்தோர் சொல்ல, ஒருவரும் அழாதொழிக என்றுசொல்லி, பின்பு தம்முடைய நாயகரது செய்கையை மறைத்து, சுந்தரமூர்த்திசுவாமிகளை எதிர்கொள்ளும்பொருட்டுத் தங்கள் பந்துக்களை ஏவ அவர்கள்போய் எதிர்கொண்டுவணங்கினார்கள். சுந்தரமூர்த்திசுவாமிகள் அவர்களுக்கு அருள்செய்துவந்து, கலிக்காமநாயனார்வீட்டிற்புகுந்து ஆசனத்தில் இருந்து தமக்குச்செய்யப்பட்ட அருச்சனைகளை அங்கீகரித்து கலிக்காமநாயனாருடைய சூலையைநீக்கி அவருடன் இருத்தற்கு மிகவருந்துகின்றேன் என்றார். அப்பொழுது மனைவியாரது ஏவலால் வீட்டுவேலைக்காரர் வணங்கிநின்று, சுவாமீ அவருக்குத் தீங்கு ஒன்றும் இல்லை, உள்ளேபள்ளிகொள்கின்றார் என்றுசொல்ல சுந்தரமூர்த்திசுவாமிகள் தீங்கு ஒன்றும் இல்லைஎன்றீர் ஆயினும், என்மனந்தெளிந்திலது ஆதலால் அவரைநான்காணவேண்டும் என்றார். அவர்கள் அதுகேட்டு, கலிக்காமநாயனாரைக்காட்ட சுந்தரமூர்த்திசுவாமிகள் இரத்தம்சோரக் குடர்சொரிந்து உயிர்பொன்றிக்கிடந்தவரைக்கண்டு புகுந்தவாறுநன்று நானும் இவர்போல இறந்துபோவேன் என்றுசொல்லி உடைவாளை எடுத்தார். உடனே பரமசிவனது திருவருளினால் கலிக்காமநாயனார் உயிர்த்து எழுந்து அவர்கையில் வாளைப்பிடித்துக்கொள்ள அவர்விழுந்து நமஸ்கரித்தார், கலிக்காமநாயனாரும் சுந்தரமூர்த்திசுவாமிகளை நமஸ்கரித்தார் அப்பால் இருவரும் அதிகநண்புள்ளவர்களாகித் திருப்புன்கூருக்குப்போய் சுவாமிதரிசனஞ்செய்து சிலநாட்சென்றபின்பு திருவாரூரை அடைந்தார்கள் கலிக்காமநாயனார் சிலநாள் அங்கே சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு இருந்து பின்பு சுந்தரமூர்த்

தியிடத்திலே அனுமதிபெற்று தம்முடையவூருக்குத்திரும்பிவந்து திருத்தொண்டு செய்துகொண்டு இருந்து சிவபதம் அடைந்தார்.

# திருமூலநாயனார்புராணம்.

கயிலாயத்தொருசித்தர்பொதியிற்சேர்வார்காவிரிசூழ்சாத்தனூர்கருதுமூலன்
பயிலாநோயுடன்வியத்துயரநீடும்பசுக்களைக்கண்டவனுடலிற்பாய்ந்துபோத
வயலாகப்பண்டையுடலருளான்மேவியாவடுதண்டுறையாண்டுக்கொருபாவாகக்
குயிலாருமரசடியிலிருந்துகூறிக்கோதிலாவடகயிலைகுறுகினாரே.

திருக்கைலாசத்திலே பரமசிவனது ஆலயத்துக்கு முதற்பெருநாயகராகிய திருநந்திதேவருடைய திருவருளைப்பெற்ற மாணாக்கர்களாகிய சிவயோகிகளில் ஒருவர் அகஸ்தியமகாமுனிவரிடத்தேபொருந்திய நண்பினாலே அவருடன்சிலநாள் இருத்தற்கு அவர்வீற்றிருக்கும் பொதியமலையை அடைதற்பொருட்டு, திருக்கைலாசத்தை அகன்று வழிக்கொண்டு திருக்கேதாரம் பசுபதிநேபாளம் காசி திருக்காளத்தி திருவாலங்காடு காஞ்சிபுரம் திருவதிகை சிதம்பரம் என்னுந்தலங்களை வணங்கிக்கொண்டு திருவாவடுதுறையை அடைந்து அங்கேசுவாமிதரிசனம்செய்துகொண்டு இருந்தார் ஒருநாள் அந்தஸ்தலத்தை அகன்று செல்லும்பொழுது காவிரியாற்றங்கரையிலுள்ள புறவிலே பசுக்கூட்டங்கள் அழுதலை எதிரேகண்டார் சாத்தனூரில் இருக்கின்ற இடையனாகியமூலன் என்பவன் ஒருவன் அவைகளை மேய்க்கின்றவன் அவன் அத்தினத்திலே அவ்விடத்தில் இறந்துகிடந்தான் அப்பசுக்கூட்டங்கள் அவனுடையசரீரத்தை வந்தணைந்துசுற்றி மிகக்கதறிச் சுழன்றுமோப்பனவாகசிவயோகியார்கண்டு பரமசிவனது திருவருளினாலே இப்பசுக்களுடைய துயரத்தை நீக்கல்வேண்டும் என்று ஆலோசித்து இவ்விடையன் உயிர்பெற்று எழின் அன்றிப் பசுக்கள் துயரம்நீங்கா என்று திருவுளங்கொண்டு தம்முடைய சரீரத்துக்கு அரண்செய்து தாம் அவ்விடையனுடைய சரீரத்தினுள்ளே பிரவேசித்து திருமூலராய் எழுந்தார் எழவும் பசுக்கள் எல்லாம் நாத்தழும்ப நக்கிமோந்து கனைத்து மிகுந்த களிப்பினாலேவாலெடுத்துத்துள்ளிப் பின்புபோய்மேய்ந்தன திருமூலநாயனார் அதுகண்டு திருவுளமகிழ்ந்து அவைகள்மேயுமிடத்திற் சென்று அவைகளை நன்றாகமேய்த்தார் சூரியன் அஸ்தமயனமாக பசுக்கள் தத்தங் கன்றுகளை நினைந்து தாமேமுன் பையநடந்து சாத்தனூரை அடைந்தனசிவயோகியார் அப்பசுக்களுக்குப்பின் சென்று அவைகள் எல்லாம் வீடுகள்தோறும்புக நின்றார் மூலனுடைய மனைவி நாயகர் இன்றைக்கு மிகத்தாழ்த்தார் என்று பயங்கொண்டு சென்று சிவயோகியார் நின்ற இடத்தை அடைந்து இவருக்கு ஈனம் அடுத்தது போலும் என்று அவருடைய சரீரத்தைத்தீண்ட அவர் அதற்குஇசையாராயினார் அவள் அச்சுற்றுமயங்கி என்செய்தீர் என்று தளரதிருமூலநாயனார் உனக்கு என்னோடியாதொரு சம்பந்தமும் இல்லை என்று மறுத்து ஒரு பொதுமடத்தினுள்ளேபுகுந்து சிவயோகத்தில் இருந்தார் மனைவி அவ்விரவுமுழுதிலும் நித்திரைகொள்ளாது கவலைகொண்டு இருந்து மற்றநாள் அதனை விவேகிகள் பலருக்குத்தெரிவிக்க அவர்கள் வந்துபார்த்து அவளைநோக்கி இதுபைத்தியம் அன்று வேறுசார்பு உள்ளதும்அன்றுஇவர்கருத்துச் சிவயோகத்தினிடத்ததேயாம் இனி இவர் உங்கள்சுற்றவியல்போடு கூடார் என்றார்கள் அவள் அதுகேட்டுத் துயரம் எய்திமயங்க அவர்கள் அவளைக்கொண்டு அகன்றார்கள் சிவயோகத்தில் இருந்த திருமூலநாயனார் எழுந்து முதனாளிலே பசுக்கள் வந்தவழியேசென்று தாம் சேமித்த சரீரத்தைக்காணாது மெஞ்ஞானத்தையுடைய சிந்தையினால் ஆராய்ந்து பரமசிவன் ஆதிகாலத்திலே தம்முடைய பஞ்சவத்திரத்தினின்றும் தோற்றுவித்த காமிகம்முதலிய சைவாகமங்களிலே பேசப்பட்ட மெய்ப்பொருளைத் தமிழ்நாட்டில் உள்ளவர்களுக்கு உபயோகமாகும் பொருட்டுத் தம்மைக்கொண்டு தமிழினாலே ஒருநூல் செய்வித்தற்பொருட்டு அச்சரீரத்தை மறைத்த

ருளினார் என்று தெளிந்து திருவருளைத் துதித்து திருவாவடுதுறையை அடைந்து அங்குள்ள சிவாலயத்திலே பிரவேசித்து பரமசிவனைவணங்கி அதற்குப் புறக்கடைப்பக்கத்தில் இருக்கின்ற அரசின் கீழேபோய் சிவயோகத்தில் இருந்தார் அவர்மூவாயிரம் வருஷமளவு அங்ஙனம் இருந்து ஒவ்வொருவருஷத்திற்கு ஒவ்வொருதிருப்பாட்டாக மூவாயிரம்திருப்பாட்டினால் சைவாகமங்களிலே பிரதிபாதிக்கப்பட்ட ஞானம்யோகம் கிரியை சரியை என்னும்நான்குபாதங்களையும்பேசுகின்ற திருமந்திரம் என்னும் தமிழ்நூலைப்பாடியருளி பின் திருக்கைலாசத்தை அடைந்தார்.

## தண்டியடிகணாயனார்புராணம்.

திருவாரூர்வருந்தண்டியடிகள்காட்சிசேராதார்குளந்தொட்டற்கமணர்சீறிக்
குருடாநீமுன்செவிடுங்கூடிற்றென்றுகுறித்தறியைப்பறித்தெறியக்கொதித்துத்தங்க
ணருளாலேவிழித்தெவருமந்தராகவமணர்கலக்கம்பலகண்டவர்கள்பாழிப்
பருவானகற்பறித்தாவிக்கரையுங்கட்டிப்பரனருளாலமருலகம்பற்றினாரே.

சோழநாட்டிலே திருவாரூரிலே தண்டியடிகணாயனார் என்பவர் ஒருவர் இருந்தார் அவர்பிறவிக்குருடர் அவர் தம்முடைய அகக்கண்ணினாலே பரமசிவனைத்தரிசித்து ஸ்தோத்திரம்பண்ணுகின்றவர் எப்பொழுதும் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை மிகுந்த அன்பினோடு ஜபிக்கின்றவர், அந்தத்திருப்பதியிலுள்ள பூங்கோயிலைக் காலந்தோறும் வலஞ்செய்கின்றவர் இப்படி இருக்கும்நாளிலே அவ்வாலயத்துக்கு மேற்றிசையில் இருக்கின்ற திருக்குளம் பக்கம் எங்கும் சமணர்களுடைய பாழிகளாகி இடத்தினாலே குறைவுஎய்தினமையால் தண்டியடிகள் அதனை அறிந்து அத்திருக்குளத்தைத் தாம் பெருகக் கல்லல்வேண்டும் என்று நினைந்து, அவ்விடத்திற்சென்று குளத்தினுள்ளே கல்லுமிடத்தில் ஒருதறிநட்டு அதிலேகயிறுகட்டி கரையினும் தறிநட்டு அக்கயிற்றினுனியை அதனில் இசையக்கட்டி மண்வெட்டியையுங் கூடையையும் எடுத்து அக்கயிற்றிலே தடவிக்கொண்டு சென்று மண்ணைக்கல்லிக் கூடையில் எடுத்துக்கொண்டு, மீண்டும் அக்கயிற்றைத் தடவிப்போய்க்கரையிலேபோடுவார் இப்படித் தினந்தோறும் மிகுந்தவிருப்பத்துடன் திருக்குளங்கல்லும்பொழுது சமணர்கள் பொறாமைகொண்டு அவரை அணைந்து மண்ணைக்கல்லில் பிராணிகள் இறந்துபோம் வருத்தல் வேண்டாம் என்றுசொல்ல தண்டியடிகள் அவிவேகிகளே இது மெய்க்கடவுளாகிய பரமசிவனுக்குச்செய்யும் குற்றமற்றபுண்ணியம் இதன் அருமை உங்களுக்குவிளங்குமா என்றார். அதுகேட்ட சமணர்கள் நாம்சொன்ன தருமமுறையைக்கேட்டாயில்லை நீ கண்ணேயன்றிக் காதினையும் இழந்தனையோ என்றுசொல்ல தண்டியடிகள் மந்தபுத்தியும் காணாக்கண்ணும் கேளாச்செவியும் உங்களுக்கே உள்ளன என்றுசொல்லி திரிபுரதகனஞ்செய்த கடவுளுடைய திருவடிகளையேயன்றிவேறொன்றையும் நான்காணேன் அதனையறிதற்கு நீங்கள் யார் அக்கடவுளுடைய திருவருளினால் உலகம்எல்லாம் அறியும்படி என்கண்காணவும் உங்கள் கண் குருடாகவும்பெற்றால் நீங்கள் யாதுசெய்வீர்கள் என்றார் சமணர்கள் நீ உன்கடவுளது அருளினால் கண்பெற்றாயாகில் நாங்கள் இவ்வூரில் இரோம் என்றுசொல்லி அவருடைய மண்வெட்டியைப்பறித்து குறித்தறிகளைப்பிடுங்கி எறிந்தார்கள் தண்டியடிகள் மிகக்கோபங்கொண்டு கோயில்வாயிலிலேசென்று நமஸ்கரித்துசுவாமீ இன்றைக்குத்தேவரீரை நிந்தனைசெய்யும் அதிபாதகர்களாகிய சமணர்கள் திருக்குளங் கல்லுதலாகிய சிவபுண்ணியத்தையும் அதனைச்செய்யப்பெற்ற அடியேனையும் அவமானஞ்செய்தமையால் அடியேன் அதுபொழுது மிகவருந்துகின்றேன் சர்வசாமர்த்தியம் உள்ள தேவரீர் இவ்வருத்தத்தை நீக்கியருளல்வேண்டும் என்று பிரார்த்தித்து நமஸ்காரஞ்செய்து தம்முடைய திருமடத்திற்சென்று அழுதுகொண்டு இருந்தார். அன்றிரவு அவர் நித்திரைசெய்யும் பொழுது பரமசிவன் அவருக்குச் சொப்பனத்திலே தோன்றி தண்டியே உன்கவலையையொழிநாளைக்கு உன்கண்காணவும் அந்தச் சமணர்களுடைய கண்கள் மறையவும் அருள்செய்வோம் பயப்படாதொழி என்று அருளிச்செய்து சோழராஜாவு

க்கும் சொப்பனத்திலேதோன்றி தண்டி என்பவன் நமக்குக் குளங்கல்ல சமணர்கள் அதுகண்டு பொறாது அப்பணிக்குவிக்கினஞ்செய்தனர் நீ அவனிடத்திலேசென்று அவன்கருத்தை முடிப்பாய் என்று ஆஞ்ஞாபித்து மறைந்தருளினார். சோழராஜா விழித்து எழுந்து பரமசிவனை ஸ்தோத்திரஞ்செய்து சூரியன் உதித்தபின் தண்டியடிகளை அடைந்து தான்கண்ட சொப்பனத்தைச் சொல்லதண்டியடிகள் மஹாராஜனே நான்திருக்குளங்கல்லும்போது சமணர்கள்வந்து அதுதருமம் அன்றென்று பலசொல்லி, நான்நட்ட குறித்தறிகளைப்பிடுங்கி, என்னைவலிசெய்து மண்வெட்டியைப் பறித்துக்கொண்டார்கள். இன்னும் நீகண்ணையன்றிக்காதினையும் இழந்தனையோ என்றார்கள் அதற்கு நான் எங்கள் பரசிவனது திருவருளினால் என்கண்காணவும் உங்கள்கண்கள் மறையவும் பெற்றால் நீங்கள்யாதுசெய்வீர்கள் என்றுகேட்க நாங்கள் இந்தஊரில் இரோம் என்று ஒட்டினார்கள் இனி நிகழ்வதைக்கண்டு நீர் இந்தவழக்கை முடித்தல்வேண்டும் என்றார், அப்பொழுது அரசன் சமணர்களை அங்கே அழைத்துக்கேட்க அவர்கள் அதற்கு உடன்பட்டார்கள். அதுகண்டுதண்டியடிகள் முன்செல்ல அரசன் பின்சென்று திருக்குளக்கரையிலேநின்று தண்டியடிகளைநோக்கி, சிவபத்தரே நீர் பரமசிவனது திருவருளினாலே கண்பெறுதலைக்காட்டும் என்றுசொல்ல தண்டியடிகள் பரமசிவனே மெய்க்கடவுளும் சிறியேன் அவருக்கு அடியானும் ஆயில் இவ்வரசருக்கு முன்னேநான் கண்பெற்றுச் சமணர்கள் கண் இழப்பர்கள் என்றுசொல்லி ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை உச்சரித்துக்கொண்டு, திருக்குளத்திலேமுழுகி கண்பெற்று எழுந்தார். சமணர்களோ கண் இழந்து தடுமாறினார்கள். அதுகண்ட அரசன் தன்ஏவலாளரைநோக்கி தண்டியடிகளுடனே ஒட்டிக்கெட்ட சமணர்களைத்திருவாரூரினின்றும் அகன்றுபோம்படி துரத்துங்கள் என்று ஆஞ்ஞாபிக்க அவர்கள் அவ்வாறே துரத்தவும் சமணர்கள் கண்காணாமையால்மனங்கலங்கி குழியிலேவிழுவார்கள் கோலும் இல்லையேஎன்பார்கள் இது வழிஎன்று தூற்றைஅடைவார்கள் பொய்ப்பொருளைமெய்ப்பொருள் எனக்கொண்டு அழிந்தோம் என்பார்கள். பாய்களை இழப்பார்கள் பீலிகளைத்தடவிக்காணாமல் திரும்புவார்கள் மயங்கிநிற்பார்கள் காலும்கையும்முறியக்கற்களின்மேல் இடறிவிழுவார்கள் மிகநெருங்கி ஒருவரை ஒருவர் முட்டிக்கொள்வார்கள், ஓடுதற்குவழியறியாது மயங்குவார்கள். இந்தப்பிரகாரம் சமணர் கலக்கங்கண்டு ஓடத்துரத்திய பின்னர் சோழராஜா சமணர்களுடைய பாழிகளையும் பள்ளிகளையும் பறித்து திருக்குளத்துக்குக் கரைகட்டிமனமகிழ்ந்துதண்டியடிகளை வணங்கிக்கொண்டு போயினான் அவர் பரமசிவனைத்தியானித்து ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஜபித்து திருத்தொண்டுசெய்துகொண்டிருந்து சிவபதம் அடைந்தார்.

## மூர்க்கநாயனார் புராணம்.

தொன்டைவளநாட்டுவளர்வேற்காட்டூர்வாழ்தொல்லுழவர்நற்சூதர்சூதுவென்று
கொண்டபொருள்கொண்டன்பர்க்கமுதளிக்குங்கொள்கையினார்திருக்குடந்தைகுறுகியுள்ளார்
விண்டிசைவுகுமறுமொழிவீணர்மாளவெகுண்டிடலான்மூர்க்கரெனவிளம்புநாம
மெண்டிசையுமிகவுடையாரண்டர்போற்றுமேழுலகுமுடனாளுமியல்பினாரே.

தொண்டைநாட்டிலே திருவேற்காட்டிலேவேளாளர் குலத்திலே தலைமைபெற்ற ஒருவர் தினந்தோறும்சிவனடியார்களைச்சிவனெனவணங்கித் துதித்து அமுதுசெய்வித்துப் பின் தாம் உண்பவரும் அவர்கள் விரும்பும் பொருள்களையும் கொடுப்பவருமாய் இருந்தார். இப்படி இருக்கும்நாளிலேஅடியார்கள் அனேகர்வருகின்றமையால்அவர் தம்மிடத்துள்ள திரவியங்கள் எல்லாஞ் செலவாகிவிட அடிமை நிலம் முதலியனவற்றைவிற்றும் மகேசுரபூசையைவழுவாது மனமகிழ்ச்சியோடுசெய்துவந்தார் அதன்பின் மகேசுரபூசைச்செலவுக்குப் பொருள் இன்மையால், கவலைகொண்டு தாம் முன்னே பயின்றசூதினாலே பொருள்சம்பாதிக்கநினைந்து அவ்வூரிலே சூதாடுவோர் இல்லாமைபற்றி அவ்வூரை அகன்று, சிவஸ்தலங்கள் தோறும் சென்று, சுவாமிதரிசனஞ்செய்து சூதா



சோமாசிமாறநாயனார்



சாக்கியநாயனார்.

டலால்வரும் பொருளினாலே தம்முடைய நியதியைமுடித்து, சிலநாளிலே கும்பகோணத்தை அடைந்தார் அங்கேசூதாடி பொருள்தேடி மகேசுரபூசைசெய்தார். சூதிலே முதலாட்டத்திலே தாம்தோற்று பின் ஆட்டங்களிலே பலமுறையும் வென்று அதனாலேபொருள் ஆக்கி சூதிலேமறுத்தவர்களை உடைவாளைஉருவிக்குத்தி நற்சூதர் மூர்க்கர் என்னும் பெயர்களைப்பெற்றார். சூதினாலே வரும்பொருளைத் திருவமுது ஆக்குவோர்கள் கொள்ள தாம்தீண்டார். அடியார்கள் அமுதுசெய்தபின் தாம் கடைப்பந்தியிலே அமுதுசெய்வாராயினார், இவர் இப்படிச் சிலகாலம் மகேசுரபூசைசெய்துகொண்டிருந்து அந்தமகத்தாகிய சிவபுண்ணியத்தினாலே சிவபதம் அடைந்தார்.

## சோமாசிமாறநாயனார்புராணம்.

அம்பர்நகரந்தணர்சோமாசிமாறரன்பர்களாம்யாவர்க்குமன்பினமுதளிப்பா
ரும்பர்திகழ்வகையாகம்பலவுஞ்செய்யுமுண்மையினாரைந்தெழுத்துமோவாநாவார்
நம்பர்திகழ்திருவாரூர்நயந்துபோற்றுநாவலர்கோனடிபரவுநன்மையாலே
யிம்பர்தொழவும்பர்பணிந்தேத்தமேலையேழுலகுமுடனாளுமியல்பினாரே.

சோழமண்டலத்திலே திருவம்பரிலே பிராமணர்குலத்திலே சோமாசிமாறநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பரமசிவனது ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை மிகுந்த அன்பினோடு ஜபித்தலை நித்தியநியமம் எனக்கொண்டவர் எந்தக்குலத்தினராயினும் எந்தக்குணத்தினராயினும் பரமசிவன்மேல் அன்புடையர்களாயில் அவர்களே நம்மை ஆள்பவர் என்னும் மெய்யறிவினை உடையவர் அவ்வன்பர்கள் தம்முடையவீட்டுக்குவந்தால், அவர்களை எதிர்கொண்டுவணங்கித் திருவமுது செய்விப்பவர் பரமசிவனுக்குப் பிரீதியாகியயாகங்களை புகழ்பயன் முதலியனகருதாது நிஷ்காமியமாக வேதவிதிப்படிசெய்பவர் அவர் திருவாரூரிற்சென்று சைவசமயாசாரியராகிய சுந்தரமூர்த்திசுவாமிகளை அடைந்து அவருடைய திருவடிகளிலேபத்திபண்ணி அதனாலே சிவபதத்தைப்பெற்றார்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

ஆருவது

# வார்கொண்டவனமுலையாள்சருக்கம்.

## சாக்கியநாயனார்புராணம்.

சங்கமங்கைவரும்வேளாண்டலைவர்காஞ்சிச்சாக்கியரோடியைந்தவர்தந்தவறுஞ்சைவத்
துங்கமலிபொருளுமுணர்ந்தந்தவேடந்துறவாதேசிவலிங்கத்தொழுவோர்கண்டோ
ரங்கன்மலர்திருமேனியழுந்தச்சாத்தியமருநாண்மறந்தொருநாளருந்தாதோடிச்
செங்கலெறிந்திடுமௌவின்மகிழ்ந்தநாதன்றிருவருளாலமருலகஞ்சேர்ந்துளாரே.

திருச்சங்கமங்கையிலே வேளாளர் குலத்திலே உதித்த ஒருவர் ஜனனமரணத்துன்பங்களைநினைந்து கவலைகொண்டு அவைகளினின்று நீங்கும் நெறியாது என்று ஆராய்வாராயினார் அந்நா

ளிலே காஞ்சிபுரத்தை அடைந்து பௌத்தர்களை அணுகி அவர்கள் அனுசரிக்கும் பௌத்தசமயத்திலேபிரவேசித்து அச்சமயநூல்களை ஓதி அவற்றின்பொருள்களை ஆராய்ந்தார் ஆராய்ந்தபொழுது அச்சமயம் சற்சமயம் அன்று என்பது அவருக்கு தெள்ளிதிற் புலப்பட்டது அதுபோல மற்றைச்சமயநூல்களையும் ஆராய்ந்து அவைகளும் மெய் அன்று எனத்தெளிந்து, பரமசிவனது திருவருள் கூடுதலால், அறிவிக்க அறியும் சித்தாகிய ஆன்மாக்களும் அவ்வான்மாக்களினாலே செய்யப்படும் ஜடமாகிய புண்ணியம் பாவம் என்னும் கர்மங்களும் அக்கர்மங்களாலே பெறப்படும் சுகம் துக்கம் என்னும் பலங்களும் அப்பலங்களைக்கொடுக்கின்ற தானே அறியும் சித்தாகிய பதியும் எனப்பொருள்கள் நான்கு என்றும் அவைகளைப் பூர்வோத்தர விரோதமின்றி யதார்த்தக உணர்த்தும் நூல் சைவசமயநூலே என்றும் அந்நூல் உணர்த்தும்பதி பரமசிவனே என்றும் அறிந்துகொண்டார் எந்தநிலையிலே நின்றாலும் எந்தவேஷத்தை எடுத்தாலும் பரமசிவனுடைய திருவடிகளை மறவாமையேபொருள் என்றுகருதி தாம் எடுத்தபௌத்தவேஷத்தைத் துறவாமல் பரமசிவனை மிகுந்த அன்பினோடு இடைவிடாது தியானஞ்செய்வாராயினார் சிவசாதாக்கியம் அமூர்த்திசாதாக்கியம் மூர்த்திசாதாக்கியம் கத்துருசாதாக்கியம் கர்மசாதாக்கியம் என்னும் பஞ்சசாதாக்கியங்களுள் கர்மசாதாக்கியமாகிய சிவலிங்கத்தின்மகிமையை உணர்ந்து தினந்தோறும் சிவலிங்கதரிசனம் செய்துகொண்டே போசனம்பண்ணல்வேண்டும் என்று விரும்பி சமீபத்தில் ஓர் வெள்ளிடையிலிருக்கின்ற சிவலிங்கத்தைத் தரிசித்து அத்தியந்த ஆனந்தம் உள்ளவராகி தாம் செய்யும் செயல் இது என அறியாது அருகிலேகிடந்த ஒருசெங்கல்லைக்கண்டு அதைப் பதைப்பினுடனே எடுத்து அச்சிவலிங்கத்தின்மேல் எறிந்தார் சிறுபிள்ளைகள்செய்யும் இகழ்வாகிய செய்கைகளும் தந்தையர்களுக்குப் பிரீதியாமாறுபோல அந்தச் சாக்கிய நாயனாருடைய செய்கையும்பரமசிவனுக்குப் பிரீதியாயிற்று அந்நாயனார் அன்றுபோய் மற்றைநாள் அந்நியமத்தை முடித்தற்கு அணைந்தபொழுது முதனாளிலே தாம் சிவலிங்கத்தின்மேற்கல்லெறிந்த குறிப்பைநின்று ஆலோசித்து நேற்றுஎனக்கு இவ்வெண்ணம் வந்தது பரமசிவனது திருவருளே என்றுதுணிந்து அதனையே திருத்தொண்டாக நினைந்துஎப்பொழுதும்அப்படியே செய்யக்கருதினார்எல்லாச்செயல்களும்சிவன்செயல்என்றே தெளிந்தமையால் அந்நியதியைத்தினத்தோறும் வழுவாமல் அன்பினுடன் செய்யஅதுஆன்மாக்கள்தோறும் வியாபித்திருந்து எல்லாவற்றையும் உணரும்பரமசிவனுக்கு மிகச்சிறந்த திருத்தொண்டாகிமுடிந்தது ஒருநாள் அந்நாயனார் திருவருளினாலேமறந்து போசனஞ்செய்யப் புகும்பொழுதுஇன்றைக்குஎங்கள் சுவாமியைஎறியாமல் மறந்துவிட்டேன் என்றுஎழுந்துஅத்தியந்த ஆசையுடன் மிகவிரைந்து புறப்பட்டு சிவலிங்கத்தை அணைந்து ஒருகல்லை எடுத்து அதன்மேல் எறிய பத்திவலையிற்படுவாராகிய பரமசிவன் உமாதேவியோடு இடபாரூடராய் ஆகாயத்திலேதோன்றி அவரைத் தமது திருவடியிலே சேர்த்தருளினார்.

## சிறப்புலிநாயனார்புராணம்.

திருவாக்கூரருமறையோருலகமேத்துஞ்சிறப்புலியார்மறப்புலியாருரிமேற்செங்க
ணரவார்த்தார்வருமேற்றூர்க்கன்பரானார்க்கமுதளிப்பாரொளிவெண்ணீறணிந்தமார்பர்
பெருவாக்கான்மறைபரவியாகம்போற்றும்பெற்றியினாரைந்தெழுத்தும்பிறழாதோதிக்
கருவாக்காவிறைவன்றாளிணைகள்சேர்ந்தகருத்தினாரெனையாவுந்திருத்தினாரே.

சோழநாட்டிலே திருவாக்கூரிலே பிராமணர் குலத்திலே சிறப்புலிநாயனார்என்பவர் ஒருவர்இருந்தார் அவர் சிவனடியார்கள் வந்தபொழுதுஅவர்களை நமஸ்கரித்து இன்சொற்களைச்சொல்லி அவர்களைஅமுதுசெய்வித்து அவர்களுக்குவேண்டும்திரவியங்கள்எல்லாவற்றையுங் கொடுக்கின்றவர் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை அன்பினோடு ஜபிக்கின்றவர் பரமசிவனைக்குறித்து யாகங்கள் செய்கின்றவர் அவர் இன்னும் பல சிவபுண்ணியங்களைச்செய்துகொண்டு இருந்துசிவபதம் அடைந்தார்.



சிறப்புலிநாயனர்.



சிறுத்தொண்டநாயனார்.

## சிறுத்தொண்டநாயனார் புராணம்.

பல்குமருத்துவரதிபர்செங்காட்டங்குடிவாழ்படைத்தலைவரமுதளிக்கும்பரஞ்சோதியார்மெய்ச்
செல்வமிகுசிறுத்தொண்டர்காழிநாடன்றிருவருள்சேர்ந்தவர்வளருஞ்சீராளன்றன்னை
நல்குதிருவெண்காட்டுநங்கைசமைத்திடப்பின்னன்மதிச்சந்தனத்தாதிதலைக்கறியிட்டுதவப்
புல்கவரும்வயிரவர்தாமகிழ்ந்துமகவருளப்போற்றியவர்சிவனருளேபொருந்தினாரே.

சோழமண்டலத்திலே திருச்செங்காட்டங்குடியிலே ஆமாத்தியர்குலத்திலே, பரஞ்சோதியார் என்பவர் ஒருவர் இருந்தார் அவர் ஆயுள்வேதங்களிலும் படைக்கலத்தொழில்களிலும் குதிரையேற்றம் யானையேற்றங்களிலும் மிகச்சிறந்தவர் வேதாகமங்களை மெய்ப்பொருளை அறிதல்வேண்டும் என்னும் அவாவினோடு திருவருளை முன்னிட்டுப் பரீட்சித்தமையால் பரமசிவனே மெய்க்கடவுள் என்றும் அவருடைய திருவடிகளை அடைதலேமுத்திநெறியென்றும்தெளிந்து அவருடையதிருவடிகளை அகோராத்திரம் இடைவிடாது அன்பினோடு தியானிப்பவர் சிவனடியார்களுக்கு எக்காலமுந் திருத்தொண்டுசெய்பவர் அவர் அரசனிடத்திலே அணுக்கராகி அவன்பொருட்டு யானைசெலுத்திக் கொண்டு சென்று அவனோடு மாறுபட்ட பலஅரசர்களைவென்று அவர்கள் தேசங்களைக் கைப்பற்றி அவனால் நன்குமதிக்கப்பட்டவர் ஒருமுறை உத்தரதேசத்திலே வாதாவிஎன்னும் நகரத்திற்சென்று அதனைவென்றுபலவகை இரத்தினங்களும் நிதிக்குவைகளும் யானைக்கூட்டங்களும் குதிரைக்கூட்டங்களும் அரசனுக்கு முன்கொண்டுவந்தார்அதுகண்டு அரசன் அவருடைய யானையேற்றத்தின் வலிமையை அதிசயித்துப் புகழ்ந்துபேச அவரை அறிந்த மந்திரிகள் அரசனைநோக்கி மஹாராஜரே இவர் பரமசிவனுக்குத் திருத்தொண்டு செய்கையால் இவ்வுலகத்திலே இவருக்கு எதிராவார் ஒருவருமில்லை என்றார்கள் அரசன் அதைக்கேட்டு அஞ்சி நடுநடுங்கி இரண்டு கண்களினின்றும் சோகபாஷ்பஞ்சொரிய இவர் எங்கள் கடவுளாகிய பரமசிவனுடைய திருத்தொண்டர் என்பதை உணராது கொடிய போர்முனையிலே விட்டிருந்தேன் ஐயையோ இதுஎவ்வளவு கொடியபாவம் என்றுசொல்லி பின்பு பரஞ்சோதியாரைநோக்கி சுவாமீ இக்குற்றத்தைப் பொறுத்தருளல்வேண்டும் என்றுபிரார்த்தித்துநமஸ்கரித்தான் பரஞ்சோதியார் அரசன் தம்மை நமஸ்கரித்தற்கு முன்தாம் அவனை நமஸ்கரித்து மஹாராஜரே நான் எனது உரிமைத்தொழிற்கு அடுத்த திறத்தைச் செய்வேன் அதனாலே என்னதீங்கு என்றார் அரசன் அவருக்கு நிறைந்த நிதிக்குவைகளையும் விருத்திகளையும் கொடுத்து நீர் உம்முடைய நிலைமையை நான் அறியாவண்ணம் நடத்திக்கொண்டு வந்தீர் இனிஎன் மனக்கருத்துக்கு இசைந்து எனக்குப் பணிசெய்தலை ஒழிந்து நீர் விரும்பியவாறே சிவனுக்கும் சிவனடியார்களுக்கும் வெளிப்படத்திருத்தொண்டு செய்யும் என்றுவிடைகொடுத்தான் பரஞ்சோதியார் விடைபெற்றுக்கொண்டு, தம்முடைய திருப்பதியிற்சென்று கணபதீச்சரத்தில்வீற்றிருக்கின்ற கடவுளைவணங்கி அவருக்குத்திருத்தொண்டுகளைவழுவாதுசெய்வாராயினார். திருவெண்காட்டுநங்கையார் என்னும் மங்கையாரோடுகூடி இல்லறத்தில் வாழ்ந்திருந்து, நாடோறும் முன்னே சிவனடியார்களைத் திருவமுதுசெய்வித்து, பின் தாம் உண்பார் சிவனடியார்களை மிகுந்த அன்பினோடுவழிபட்டு, அவர்கள் திருமுன்பே மிகச்சிறியராய் ஒழுகுகின்றமையால் அவருக்குச் சிறுத்தொண்டர் என்னும்பெயர் கொடுக்கப்பட்டது, கணபதீச்சுரருடைய திருவருளினாலே அவருக்குத் திருவெண்காட்டு நங்கையாரிடத்திலே. சீராளதேவர் என்னும் புத்திரர் அவதரித்தார். அப்பிள்ளைக்குஐந்துவயசிலே வித்தியாரம்பஞ்செய்வித்தார் அந்நாளிலே அத்திருப்பதிக்கு எழுந்தருளிவந்த திருஞானசம்பந்தப்பிள்ளையாரை எதிர்கொண்டு அழைத்து, அவரை வணங்கித்துதித்து அவருடைய திருப்பதிகத்திலே சிறப்பித்துப் பாடப்பெற்றார்.

பரமசிவன் சிறுத்தொண்டநாயனாருடையமெய்யன்பை நுகர்ந்தருளுதற்குத்திருவுளங்கொண்டு உட்சமயங்கள் ஆறனுள் ஒன்றாகிய வைரவத்துக்கு உரிய திருவேடங்கொண்டு திருக்கைலாசத்தினின்றும் நீங்கி திருச்செங்காட்டங்குடியை அடைந்து, சிறுத்தொண்டநாயனாருடைய வீட்டுவாயி

விற்சென்று சிறுத்தொண்டர் வீட்டில் இருக்கின்றாரோ என்றுவினவ தாதியராகிய சந்தனநங்கையார் முன்வந்து வணங்கி சுவாமீ அவர் சிவனடியார்களைத்தேடிப் புறத்தேபோய்விட்டார் தேவரீர் உள்ளே எழுந்தருளும் என்றார் அதற்குவைரவர் பெண்கள் இருக்கும் இடத்தில் நாம்தனியே புகோம் என்று அருளிச்செய்ய திருவெண்காட்டுநங்கையார் அதைக்கேட்டு இவ்வடியவர் போய்விடுவார்போலும் என்றுபயந்து, விரைந்துவந்து சுவாமீ அடியேனுடைய நாயகர் எப்போதும் சிவனடியாரை அமுதுசெய்விப்பவர், இன்றைக்கு ஒருவரையுங் காணாமையால் தேடிப்போயினார் தேவரீருடைய திருவேடத்தைக் கண்டாராயில் மிகமகிழ்வர் இனித்தாழார் இப்பொழுதேவந்துவிடுவார், எழுந்தருளியிரும் என்றுவிண்ணப்பஞ்செய்ய வைரவர் நாம்உத்தரதேசத்திலுள்ளேம் சிறுத்தொண்டரைக் காணவந்தேம், எப்படியும்அவர்இல்லாதபோது நாம் இங்கே இரோம், கணபதீச்சரத்தில் உள்ள திருவாத்திமரத்தின்கீழ் இருக்கின்றோம் அவர் வந்தமாத்திரத்தே அவருக்குத் தெரிவியுங்கள் என்று சொல்லி திருவாத்தியை அணைந்து அதன்கீழ் இருந்தருளினார் சிறுத்தொண்ட நாயனார்சிவனடியார்களைத்தேடி எங்குங்காணாது வீட்டுக்குத்திரும்பிவந்து மனைவியாருக்குச்சொல்லித் துக்கித்தார் மனைவியார், உத்தரதேசவாசியாகிய ஒருவைரவர் இங்குவந்து நாங்கள் இங்கே எழுந்தருளியிருக்கும்படிசொல்ல, அதுகேளாது கணபதீச்சரத்தில் உள்ள திருவாத்தியின்கீழேபோய் இருக்கின்றனர் என்றார் உடனே சிறுத்தொண்டர் மிகுந்த விருப்பத்தினோடு விரைந்து சென்று அவரைக்கண்டு வணங்கிநிற்க அவர்பெரியசிறுத்தொண்டர் நீரோ என்று திருவாய்மலர்ந்தருளினார் சிறுத்தொண்டர் அவரைவணங்கி சுவாமீ சிவனடியார்கள் தங்கள் கருணைமேலீட்டினாலே அடியேனையே அப்படி அருளிச்செய்வர்கள், அதுநிற்க இன்றைக்குத் திருவமுதுசெய்வித்தற்குச் சிவனடியார்களைத் தேடியும் கண்டிலேன் இப்போது அடியேன்செய்த புண்ணியத்தினாலே தேவரீரைக்கண்டேன், தேவரீர் அடியேன்வீட்டுக்கு எழுந்தருளித் திருவமுதுசெய்யவேண்டும் என்று விண்ணப்பஞ்செய்ய வைரவர் அன்பரோ நாம்உத்தரதேசத்தில்உள்ளேம் உம்மைக்காணவந்தோம் நம்மை அமுதுசெய்வித்தல் உம்மால்முடியாது அதுமிக அருமை என்றார் சிறுத்தொண்டர் தேவரீர் அமுதுசெய்யும் இயல்பை அருளிச்செய்யும்சீக்கிரமாகப்பாகம்பண்ணுவிப்பேன் சிவனடியார்கள் தலைப்படின் தேடுதற்கு அரியனவும் எளியனவாம் என்றுசொல்ல வைரவர் நாம் ஆறுமாசத்துக்குஒருமுறைபசுவைக்கொன்று உண்போம், அதற்கு உரியநாளும்இந்நாளேயாம் அப்படியூட்டுதல் உம்மாலியலாது என்றார் சிறுத்தொண்டர், மிகநன்று, அடியேன் அனேகம் பசுக்களை உடையேன் தேவரீருக்குப் பிரீதியாகிய பசு இன்னதுஎன்று அருளிச்செய்வீராகில் அடியேன் விரைந்துசென்று பாகம் பண்ணுவித்துக் காலம் தாழ்க்காமல் வருவேன்என்றுசொல்ல வைரவர், நாம்உண்பதுநரபசு, அதுஐந்துவயசினை உடையதாயும் அவயவப்பழுதில்லாததாயும் ஒருகுடிக்குத் தான் ஒன்றேயாயும் இருக்கவேண்டும், அப்படிப்பட்ட சிறுவனை மனமகிழ்ச்சியோடு தாய்பிடிக்கத் தந்தைஅரிதல்வேண்டும் இப்படிச்சமைக்கப்பட்டகறியே நாம் இட்டு உண்பேம்என்றார் சிறுத்தொண்டர், தேவரீர் அமுதுசெய்வீராகில் அடியேனுக்கு இதுவும் அரிதன்று என்றுசொல்லிஅவரைவணங்கி விடைபெற்றுக்கொண்டு வீட்டுக்குப்போயினார் சிறுத்தொண்டருடைய வரவைநோக்கிநின்றமனைவியார் அவருடைய மலர்ந்தமுகத்தைக்கண்டு அவரைவணங்கி அடியாருடைய செய்கையைவினவஅவர்மனைவியாரை நோக்கி ஒருகுடிக்குஒரேசிறுவனாகி ஐந்துவயசுஉடையனுமாய்அவயவப்பழுதில்லாதவனுமாய்இருக்கும்பிள்ளையைமனமகிழ்ச்சியோடு தாய்பிடிக்கத்தந்தையரிந்து சமைத்தால் அமுதுசெய்தற்கு உடன்பட்டனர் என்றார் அப்பொழுது மனைவியார் அவ்வடியவரை அவர்விரும்பியபடி அமுதுசெய்விக்கும் பொருட்டு ஒருகுடிக்குஒருவனுஞ் சிறுவனைப் பெறுமாறு எங்ஙனம் என்றுசொல்ல சிறுத்தொண்டர் என் பிராணநாயகியே இத்திறத்துச்சிறுவரை வேண்டியதிரவியங்களைக்கொடுத்தால் தருவாருளராயினும் நேர்நின்று அச்சிறுவனை அரியத்துணியுந் தந்தைதாயரோ இல்லை இனித்தாழாமல் நாம் பெற்றசிறுவனையே அழைப்போம்என்றார் மனைவியார் அதற்கு இசைந்து எங்களைக்காக்கும்பொருட்டுஅவதரித்த புதல்வனைப் பள்ளிக்கூடத்தி னின்றும் அழைத்துக்கொண்டு வாரும்என்றுசொல்ல சிறுத்தொண்டர் மனமகிழ்ச்சியோடு பள்ளிக்கூடத்துக்கு விரைந்துசென்றுதம்முடைய புதல்வராகிய சீராளதேவரை எடுத்துத்தோண்மேல் வைத்துக்கொண்டு வீட்டுக்குத்திரும்பி வந்தார் மனைவியா

ர் எதிர்வந்துபுதல்வனைவாங்கி, திருமஞ்சனம் ஆட்டி கோலஞ்செய்து நாயகர்கையிற்கொடுத்தார், அவர் அடுக்களையிற்செல்லாது உலகத்தவர்கள் அறியாவண்ணம் ஓர் மறைவிடத்திற் கொண்டுபோனார், அப்பிள்ளையைப்பெற்றதாயார் பாத்திரங்களைக் கழுவிக்கொண்டுவந்தார். தந்தையார் புதல்வனை எடுத்து அவருடைய தலையைப்பிடிக்கதாயார் அப்புதல்வருடைய இரண்டுகால்களையுந்தம்முடைய மடியிலேஇடுக்கி, அவர்கைகள்இரண்டையும் தம்முடையகைகளினாலே பிடிக்க அப்புதல்வர் தம்முடைய தந்தைதாயார் மிகமகிழ்கின்றனர் என்று, மகிழ்ந்துநகைசெய்ய தந்தையார்மனமகிழ்ச்சியோடு ஆயுதத்தினாலே அவருடையதலையை அரிதலாகிய அரியசெய்கையைச்செய்தார் அறுத்த தலையின்இறைச்சி திருவமுதுக்கு ஆகாதுஎன்று கழித்து, அதனைமறைத்து நீக்கும்பொருட்டு, சந்தனநங்கையார்கையில்கொடுத்து மற்றையுறுப்புகளின் இறைச்சிகள் எல்லாவற்றையும் அறுத்துப் பாகம்பண்ணி, வேறுகறிகளும்அமைத்து சோறும் சமைத்து, நாயகருக்குத் தெரிவித்தார். நாயகராகிய சிறுத்தொண்டர் பெருங்களிப்புடையராகி, விரைந்துசென்று திருவாத்தியின் கீழ் இருந்தவைரவரைவணங்கி, சுவாமீதேவரீர் பிரியப்படி பாகம்பண்ணுவித்தேன் எழுந்தருளிவந்து திருவமுதுசெய்தருளல்வேண்டும்என்று விண்ணப்பஞ்செய்து அவரைவீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய், ஆசனத்தில்இருத்தி அவருடைய திருவடிகளை ஜலத்தினால்விளக்கி அந்தத்தீர்த்தத்தைத்தங்கள் சிரசின்மேலேதெளித்து வீடெங்கும்புரோக்ஷித்து,தூபதீபங்களால் அருச்சித்துவணங்கினார் மனைவியாராகிய திருவெண்காட்டுநங்கையார் பரிகலந்திருத்தி, அன்னமும் கறியமுதும்படைத்தார் வைரவர் அதைப்பார்த்து, நாம்சொல்லியமுறையே கொன்றபசுவினது உறுப்புக்கள் எல்லாவற்றையும் பாகம் பண்ணினீரா என்று வினவ, திருவெண்காட்டுநங்கையார், தலைஇறைச்சிமாத்திரம் திருவமுதுக்குஆகாது என்றுகழித்துவிட்டோம்என்றார். வைரவர்அதுவும் நாம்உண்பது என்றார். அதுகேட்டு சிறுத்தொண்டர்மனைவியாரோடும் திகைத்துஅயர சந்தனநங்கையார், நான் அத்தலைஇறைச்சியைஅடியவர் அமுதுசெய்யும்பொழுது நினைக்கவரும்என்று முன்னமேபாகம் பண்ணிவைத்தேன் என்று, எடுத்துக்கொடுக்க திருவெண்காட்டு நங்கையார் முகமலர்ந்து, வாங்கிப்படைத்தார். அதன்பின், வைரவர் சிறுத்தொண்டரை நோக்கி, நாம்தனியே உண்ணேம் சிவனடியார்களைக்கொண்டு வாரும் என்றுஅருளிச்செய்ய, சிறுத்தொண்டர் ஏங்கி ஐயோ அடியவர் திருவமுது செய்தற்கு இடையூறு இதுவோ என்றுநினைந்து வீட்டுக்குப்புறத்திலேபோய், சிவனடியார்களைத் தேடிக்காணாதுதுக்கத்தோடு திரும்பிவந்து வைரவரைவணங்கி சுவாமீ சிவனடியார்களைக்காணேன் அடியேன்திருநீறு இடுவாரைக்கண்டுஅன்னங்கொடுப்பேன்என்று விண்ணப்பஞ்செய்யவைரவர் சிறுத்தொண்டரைநோக்கி உம்மைப்போலத்திருநீறுஇட்டார் உளரோ நீர்இருந்து உண்ணும் என்று சொல்லி, பின்திருவெண்காட்டுநங்கையாரைநோக்கி, இவருக்குச்சோறுங்கறியும் படையும் என்று அருளிச்செய்ய அவரும்படைத்தார் சிறுத்தொண்டர் வைரவரை ஊட்டவேண்டி. உண்ணப்புகலும் வைரவர் தடுத்தருளி, ஆறுமாசத்துக்கு ஒருமுறைஉண்ணுகின்றநாம் உண்ணுமளவும் தரியாமல், எப்பொழுதும் உண்கின்ற நீர் முன்உண்பதுஎன் உம்முடன் உண்ணும்பொருட்டு, உமக்குப்புத்திரன் உண்டேல், அழையும் என்றார் சிறுத்தொண்டர். இப்போது அவன் உதவான்என்றுசொல்ல வைரவர்அவன் வந்தாற்றான் நாம் உண்பேம் தேடி அழையும்என்றார், சிறுத்தொண்டர் தரியாது எழுந்து, மனைவியாரோடு விரைந்து வீட்டுக்குப் புறத்திலேபோய் புதல்வனே வா என்று அழைக்க மனைவியாரும் நாயகரதுபணியில் நிற்பாராகி, சீராளனேசிவனடியார் அடியேங்கள் உய்யும்பொருட்டுஉடனுண்ண உன்னை அழைக்கின்றார் வாஎன்றுஅழைத்தார் அப்பொழுது அப்புதல்வர் பரமசிவனது திருவருளினாலே பள்ளிக்கூடத்தினின்று ஓடிவருபவர்போலவந்தார்.

தாயார் அவரை எடுத்துத்தழுவி, நாயகர்கையிற்கொடுக்க, அவர் இனிச்சிவனடியார் அமுதுசெய்யப்பெற்றேம்என்றுமன மிகமகிழ்ந்துஅப்புதல்வரை விரைவிற்கொண்டு, அடியவரை அமுதுசெய்வித்தற்கு உள்ளேவந்தார். அதற்குமுன் வைரவர் மறைந்தருள சிறுத்தொண்டர் அவரைக்காணாமையால் மனங்கலங்கித் திகைத்துவிழுந்தார் கலத்திலே இறைச்சிக்கறியமுதைக் காணாமையால் அச்சமுற்றார், வைரவர் அடியேங்கள் உய்யும்பொருட்டுத் திருவமுதுசெய்யாமல் எங்கே ஒளித்தனரோ என்று தேடி மயக்கங்கொண்டு, புறத்திற்செல்ல, அச்சிறுத்தொண்டர்செய்தது நிவேஷி

தானுட்டானமாயினும், அவர் சிவானந்தானுபவமேலிட்டு நிற்கையால் கருவிகரணங்கள்தற்போதச்சீவிப்பாய் நின்றுசெய்யாது சிவபோதச் சீவிப்பாய் எழுந்துசெய்தமைபற்றி அதனை விகிதானுட்டானமாகவே கொண்டருளிய பரமசிவன் அரிபிரமேந்திராதி தேவர்கள் முனிவர்கள் முதலாயினோர்சேவிக்க உமாதேவியோடும் சுப்பிரமண்ணியசுவாமியோடும் இடபாரூடராய் ஆகாயத்திலே தோன்றியருளினார். சிறுத்தொண்டரும் மனைவியாரும் புதல்வரும் தாதியாரும் ஆகிய நால்வரும் அவர்களைத்தரிசித்து, ஆனந்த அருவிசொரியஎலும்பும்மனமும் நெக்கு நெக்குருக, பரவசமாய்விழுந்து நமஸ்கரித்து, எழுந்து அஞ்சலி யஸ்தர்களாகி நின்று ஸ்தோத்திரம்பண்ணினார்கள். பின்புபரமசிவனும் பார்வதியம்மையும் சுப்பிரமண்ணியசுவாமியும், அவர்கள்நால்வரையும், தங்களைஎக்காலமும் பிரியாது வணங்கிப் பேரின்பத்தை நுகர்ந்துகொண்டு இருக்கும்பொருட்டு, உடன்கொண்டு திருக்கைலாசத்தைஅடைந்தார்கள்.

## கழறிற்றறிவார்நாயனார்புராணம்.

காவலர்மகோதையார்கொடுங்கோளூர்க்கோக் கழறியவையறிந்தகோச்சிலம்போசைக்கருத்தார்
நாவலர்கோனம்பரடிச்சேரனென்றே நவின்றுவரும்வண்ணானைநமந்தகோநற்
பாவலர்கோப்பாணபத்திரனால்வாய்ந்த பரமர்திருமுகம்வாங்கிப்பணிகோவெற்பின்
மேவியகோவானைக்குக்குதிரைவைத்த வீரர்கோவெனையாளுஞ்சேரர்கோவே.

மலைநாட்டிலே இராஜதானியாகிய மகோதை என்னும்பெயரையுடைய கொடுங்ககோளூரிலே சேரர்குடியிலே, பெருமாக்கோதையார் என்னும்பெயரையுடைய ஒரு சற்புத்திரர் சைவநெறி வாழும்படி அவதரித்தார். அவர் பாலியதசையிலேதானே வியாதிபீடையினால் வரும் சனனவைராக்கியம் தன்னுடைய தேக தோஷத்தைக்கண்டு வரும் தேகவைராக்கியம், சகல சம்பத்துக்களையும் குறைவற அனுபவித்து இனிப்போதும் என்று வரும் ஐசுவரியவைராக்கியம் ஆன்மிக தைவிக உற்பௌதிகங்களினாலே வரும் பிரபஞ்சவைராக்கியம் அருத்தத்தைத்தேடுதலினாலும் காத்தலினாலும் கள்ளர்கொண்டுபோதலினாலும் உண்டாகுந்துக்கம்பற்றிவரும் திரவியவைராக்கியம் மாதாப்பிதா ஸ்திரீபுத்திர இஷ்டபந்து சிநேகிதர்களைப் பிரிந்த துக்கத்தினாலே கூட்டமெல்லாம் பிரிந்தகாலத்திலே துக்கத்துக்கு எதுவென்றுவரும்சங்கவைராக்கியம் காமுகனாயிருக்கிறவன் தான்மோகிக்கப்பெற்ற ஸ்திரீயினிடத்திலே குணத்திலாயினும்தேகத்திலாயினும்வைராக்கியக்கேதுவாகிய ஒருதோஷத்தைக்கண்டபோதுவரும் ஸ்திரீவைராக்கியம், அன்னபானாதிகள்ஒருபொழுது இல்லாதிருக்கினும்தேகம்நில்லாது எத்தனைநாள் எத்தனைவகையாகப்புசித்தாலும் திருத்தியடையாது என்று வரும் போசனவைராக்கியம் தானத்துக்குப்போய்த் தள்ளுண்டதனால் வரும் பிரதிக்கிரகவைராக்கியம், இகத்திலே இப்படிப்பட்டதொரு எதுவும்இன்றிப் பூர்வஜன்மசிவபூஜா புண்ணியபலத்தினாலே தேகாதியாகிய சர்வவஸ்துக்களிலும்வரும் வைராக்கியம், என்னும் பத்துவகைவைராக்கியங்களுள் இறுதியில்நின்ற நிருகேதுகமாகிய உத்தமவைராக்கியத்தை உடையராகி, பரமசிவனுடைய திருவடியை அடைதல்வேண்டும் எனக்கருதி இராஜபுத்திரருக்குரிய தொழில்களைச்செய்தல் இன்றி திருவஞ்சைக்களம் என்னும் சிவஸ்தலத்தை அடைந்து, பரமசிவன் ஸ்வதந்திரர் நாய்பரதந்திரர் என்று உணர்ந்து சிவாதீனமாய் நின்று தினந்தோறும்பிராமமுகூர்த்தத்தில் எழுந்து ஸ்நானம்பண்ணி அனுஷ்டானஞ் செய்துகொண்டு திருநந்தனவனம் வைத்தல்பூக்கள்பறித்தல் திருமாலைகட்டல் திருவலகிடல் திருமெழுக்கிடல் திருப்பாட்டுப்பாடல் முதலிய திருத்தொண்டுகளைச் செய்வாராயினார்.

இப்படிநிகழுங் காலத்திலே, செங்கோற்பொறையன் என்னும் சேரமகாராஜனுக்கு இது நித்தியம் இது அநித்தியம் என்கின்ற பகுத்தறிவும் அநித்தியமாகிய இம்மைமறுமையின்பங்களில் வெறுப்பும்பிறவித்துன்பங்களும் அவன் செய்தபுண்ணியபலத்தினாலே தோன்றின அவைதோன்றவேதித்



యాంస్వారనామసంహ్మబ్రరం౹౨రటూం శనెలగం తిరింది.

கழறிற்றறிவார்நாயனார்.

గు. జై. వెంగళ్రాయరజు వ్రాసింది.

தியமாகிய மோக்ஷத்திலே ஆசை உண்டாயிற்று அதனால் அவன்பிறவிக்குக்காரணமாகிய வீண்முயற்சிகளைவிட்டு மோக்ஷத்துக்குக் காரணமாகிய யோகமுயற்சியைச்செய்யல்வேண்டும் என்றுதெளிந்து அரசியற்றுதலினின்றும் நீங்கி, தவஞ்செய்யும்பொருட்டுத் தபோவனத்தை அடைந்தான். மந்திரிமார்கள் சிலநாள் ஆலோசித்துத்தெளிந்து திருவஞ்சைக்களத்திலே திருத்தொண்டு செய்துகொண்டு இருக்கின்ற அச்சேரர்மரபிற்குமுதல்வராகிய பெருமாக்கோதையாரிடத்திலேபோய். அவரைவணங்கிநின்று இம்மலைநாட்டை நீரேமுடிசூடி அரசியற்றல்வேண்டும் என்று விண்ணப்பஞ்செய்யபெருமாக்கோதையார்,இவர்கள்வார்த்தை இன்பமயமாகிய திருத்தொண்டுக்கு இடையூறாய் இருக்கின்றது சிவபத்தியிலே சிறிதும்வழுவாது அரசியற்றுதற்குத் திருவருள் உளதாயில் இதனைச் சுவாமிக்கு விண்ணப்பஞ்செய்து அறிவேன்என்று ஆலயத்தினுள்ளே பிரவேசித்து சுவாமியைவணங்கிவிண்ணப்பஞ்செய்து அவருடையதிருவருளினாலே அவரிடத்தேவைத்த பத்திவழுவாது அரசியற்றும் சத்தியையும் யாரும்யாவும் கழறினவைகள் அனைத்தையும் அறியும்அறிவையும் நாசமில்லாத மகாபராக்கிரமத்தையும் பெருங்கொடையையும் அரசருக்கு உரியபடைவாகனம்முதலிய எல்லாவற்றையும் கைவரப்பெற்று,நமஸ்கரித்துக்கொண்டு புறத்தணைந்து மந்திரிமார்களுடைய வேண்டுகோளுக்குஉடன்பட்டார் மந்திரிமார்கள் பெருங்களிப்புடையர்களாகி அவரைநமஸ்கரித்தார்கள் கழறிற்றறிவாராகிய அப்பெருமாக் கோதையார் ஆன்மாக்கள்எல்லாம் உய்யும்பொருட்டுச் சுபதினத்திலே சுபமுகூர்த்தத்திலே முடிசூடி சிவாலயத்தை வலஞ்செய்து சந்நிதானத்திலேவிழுந்துநமஸ்கரித்து எழுந்து யானைமேற்கொண்டு கொற்றக்குடையும் வெண்சாமரமும் உரியவர்கள் தாங்க மகா அலங்காரத்தோடு நகரிவலஞ்செய்தார். செய்யும்பொழுது ஒருவண்ணான் தோளிலே உவர்ப்பொதிசுமந்துகொண்டு தமக்குமுன்னேவரக்கண்டு அவனுடைய சரீரம்மழையினாலேகரைந்த உவர் ஊறப்பெற்று வெளுத்திருத்தலால், விபூதியை உத்தூளனம் செய்தசிவனடியாரது திருவேடம் போலுதலை உணர்ந்து அத்தக்ஷணத்திலேதானே யானையினின்றும் இறங்கி, அத்தியந்த ஆசையோடு விரைந்துசென்று அவனுடைய கால்களிலே விழுந்து நமஸ்கரித்தார் உடனே அவ்வண்ணான்மனங்கலங்கி அவர் நமஸ்கரித்தற்குமுன் அவரைநமஸ்கரித்து அடியேனையார் என்றுகொண்டது அடியேன் அடிவண்ணான்என்றுசொல்லசேரமான்பெருமாணாயனாரும் அடியேன் அடிச்சேரன் தேவரீர் திருநீற்றுவேடத்தை நினைப்பித்தீர் வருந்தாதேபோம் என்று சொல்லி நமஸ்காரம்பண்ணினார். மந்திரிமார் முதலிய சமஸ்தரும் சேரமான்பெருமாணாயனாருடைய சங்கமபத்தி மேலீட்டைக்கண்டு ஆச்சரியம் எய்தி சிரசின்மேலேஅஞ்சலிசெய்து ஸ்தோத்திரம் பண்ணினார்கள். சேரமான் பெருமாணாயனார் யானைமேல் ஏறி நகரியைவலங்கொண்டு மாளிகைவாயிலிலே புகுந்துயானையினின்றும் இறங்கி, மண்டபத்தை அடைந்து, இரத்தினசிங்காசனத்தில் ஏறி, வெண்கொற்றக்குடை நிழற்ற, வெண்சாமரம்வீச அரசர்கள் மலர்தூவி வணங்கித்துதிக்க, வீற்றிருந்தருளினார். இங்ஙனம் இருந்து, மனுநீதிநெறியை நடத்தி எண்ணிறந்த அரசர்கள் திறைகொணர அகத்தும்புறத்தும் பகையை அறுத்து சைவசமயம் அபிவிர்த்தியாகும்படி அரசியற்றுவாராயினார். தில்லையின்கணுள்ள திருச்சிற்றம்பலத்திலே ஆனந்தத்தாண்டவம்செய்தருளுகின்ற சபாநாயகருடைய ஸ்ரீபாதமேதாம்தேடும்பொருளும் தமக்கு உரியபெருந்துணையும் என்றுதெளிந்த மெய்யறிவினாலே அத்திருவடியைமிகுந்த அன்பினோடு சைவாகமவிதிப்படி எந்நாளும் அருச்சிப்பார் அருச்சனை முடிவிலே சபாநாயகர் அவரைத்தமது திருச்சிலம்பொலியைக்கேட்பிப்பார் சேரமான்பெருமாணாயனார். சிவனடியார்களுக்கும் தரித்திரர்களுக்கும் கனகமாரிபொழிகின்றவராகி பரமசிவனுக்கு உரிய பலயாகங்களைச்செய்தார்.

இப்படிநிகழும்காலத்திலேபாண்டிநாட்டிலே மதுரையில் வீற்றிருக்கும் சொக்கநாதசுவாமியானவர், தம்மை அன்பினோடும் இசைப்பாட்டினாலே துதிக்கின்ற பாணபத்திரருக்குப்பெருஞ்செல்வத்தைக்கொடுத்தருளுதற்குத் திருவுளங்கொண்டு இரவில் அவருக்குச்சொப்பனத்திலேதோன்றி, உனக்குப்பொன் இரத்தினம்பட்டாடைமுதலியவைகள் எல்லாவற்றையும் நீவேண்டியபடி குறைவின்றித் தரும்பொருட்டு. நம்மேல்எப்பொழுதும் அன்புடையனாகிய சேரனுக்கு ஓலைதருவோம் தாழாமல்போய்வா என்று அருளிச்செய்து "மதிமலிபுரிசைமாடக்கூடற்,பதிமிசைநிலவும்பானிறவரிச்சிற, கன்னம்பயில்பொழிலாலவாயின், மன்

னியசிவன்யான்மொழிதருமாற்றம், பருவக்கொண்மூப்படியெனப்பாவலர்க், குரிமையினுரிமையினுதவியொளிதிகழ், குருமாமதிபுரைகுலவியகுடைக்கீழ்ச், செருமாவுகைக்குஞ் சேரலன்காண்க, பண்பாலியாழ்பயில்பாண பத்திரன், றன்போலென்பாலன்பன்றன்பாற், காண்பதுகருதிப்போந்தனன், மாண்பொருள்கொடுத்து வரவிடுப்பதுவே"

என்னுந்திருப்பாசுரத்தை வரைந்த திருமுகத்தைக்கொடுத்தருளினர். பாணபத்திரர் அத்திருமுகத்தைத் தலைமேற்கொண்டு, அப்பொழுதே புறப்பட்டு, கொடுங்கோளூரை அடைந்து,மாளிகைக்குமுன் வந்து, சேரமான்பெருமாணாயனருக்கு அறிவித்தார். உடனே அவர்சிரசின்மேலே கைகுவித்து, மிகுந்த அன்பினேடும் கண்ணீர்சொரிய எழுந்துமாளிகைக்குப் புறத்தில்வந்து, பாணபத்திரரைப் பலமுறைவணங்கி, சுவாமி தேவரீர் அடியேனை ஒருபொருள் எனமதித்து, திருமுகங்கொண்டு வந்தீரோ என்றார் அப்பொழுது பாணபத்திரர் சுவாமிதந்தருளிய திருமுகத்தைக் கையிலே கொடுத்துவணங்க சேரமான்பெருமாணாயனர்அதனைமுடிமேற்கொண்டு கூத்தாடி, மொழிகுழற, ஆனந்த அருவிசொரிய பரவசமாய்ப்பூமியிலே பலமுறைவிழுந்தார், திருமுகத்தைப் பலதரம் வணங்கி அதனை வாசித்து திருவருளைத்துதித்து,மாளிகையினுள்ளே புகுந்து, மந்திரிமார்களைநோக்கி, நம்முடைய குலமாளிகையில் இருக்கின்றபண்டாரம் முழுதையும் பொதிசெய்து ஆளின்மேல் ஏற்றிக்கொண்டுவாருங்கள் என்று ஆஞ்ஞாபிக்க, அவர்கள் ஏற்றிக்கொண்டுவந்து வணங்கினர்கள், சேரமான்பெருமாணாயனர் பாணபத்திரருக்குஅந்தத்தனங்களை வெவ்வேறாகக்காட்டி, சுவாமீ தேவரீர் இவைகளையும் யானைகுதிரை தேர்காலாள் என்னும் சதுரங்கங்களையும் அடியேனுடைய அரசையும் கைக்கொண்டருளும் என்றுசொல்ல, பாணபத்திரர் தமக்குச் சேரமான்பெருமாணாயனர் தந்ததனங்களெல்லாவற்றையுங்கண்டு மனமகிழ்ந்து அதிசயித்து அவரைநோக்கி சுவாமீ அடியேன் எனக்கு வேண்டுவனவற்றைமாத்திரங் கொள்ளும்பொருட்டே சிவாஞ்ஞை அரசையும் அரசுறுப்பையும் தேவரீரே கைக்கொண்டருளும் என்று சொல்லிவணங்கினர் சேரமான் பெருமாணாயனரும் சிவாஞ்ஞையைமறுத்தற்கு அஞ்சி அதற்கு உடன்பட்டார். பாணபத்திரர் தனங்கள் எல்லாவற்றையும் யானை குதிரை உள்ளிட்டனவற்றுள் வேண்டுவனவற்றையும் கொண்டு ஓர் யானைமேல் ஏறிப்போனர். சேரமான்பெருமாணாயனர் பாணபத்திரருக்குப்பின், கண்ணீர்சொரிய கைதொழுது கொண்டுசெல்ல பாணபத்திரர் நகர்ப்புறத்தில்அவரிடத்திலே விடைபெற்றுக்கொண்டுபோய் மதுரையை அடைந்தார்.

சேரமான் பெருமாணாயனர், ஒருநாள்முன் போலப் பூஜாந்தத்திலே சபாநாயகருடையதிருச்சிலம்பொலி தமக்குக்கேளாதொழிய,மனமயங்கி அடியேன் என்ன பிழைசெய்தேனே என்று பொருமி இனி இந்தத்தேகத்தினல் அடையும்வேதின்பம்யாது என்றுஉடைவாளைஉருவிதமது மார்பிலே நாட்ட சபாநாயகர் விரைந்து திருச்சிலம்பொலியைக் கேட்பித்தார். உடனே நாயனர் உடைவாளை அகற்றி நமஸ்காரம்பண்ணி ஸ்தோத்திரஞ்செய்து சுவாமி இத்திருவருளை முன்செய்யாதொழிந்தது என் என்றார் அப்பொழுது சபாநாயகர் சைவசமயாசாரியராகிய சுந்தரமூர்த்திசுவாமிகளை நினைப்பிக்கும்பொருட்டு எதிர்நின்றருளாது வன்றொண்டனுகிய சுந்தரன் கனகசபையின்கண்ணே நமது ஆனந்த திருநிருத்தத்தைவந்துவணங்கிப் பதிகம்பாடுதலால் நாம் நின்று அதனைக்கேட்டுவரத் தாழ்த்தோம் என்னுந்திருவாக்கை அருளிச்செய்தார், சேரமான்பெருமாணாயனர் அடியார்களுக்கு இவர் அருளுங்கருணை இருந்தவாறு என்னென்று கனகசபையை வணங்கி வன்றொண்டரையும் தரிசித்தல்வேண்டும் என்று விரும்பிசுபதினத்திலே திருவஞ்சைக்களத்தில் வீற்றிருக்கும் கடவுளைவணங்கி சேனைகளோடு புறப்பட்டுப்போய்ச் சிதம்பரத்தை அடைந்து கனகசபையிலே நிருத்தஞ்செய்கின்ற சபாநாயகரைவணங்கி சிவானந்தக்கடலுள் அமிழ்ந்தி பொன்வண்ணத்தந்தாதி பாடியருளினர். சபாநாயகர் அதற்குப்பரிசிலாக தமது குஞ்சிதபாதத்தினது திருச்சிலம்பின் ஓசையை எதிரே கேட்பித்தார். சேரமான் பெருமாணாயனர் காலந்தோறும் சபாநாயகரைத் தரிசனஞ்செய்துகொண்டு அப்பதியில் இருந்தார்.

சிலநாளாயினபின்,சுந்தரமூர்த்திசுவாமிகளைத் தரிசித்து வணங்குதற்கு விரும்பிப் புறப்பட்டு இடையில் உள்ள சிவஸ்தலங்களை வணங்கிக்கொண்டு திருவாரூரை அடைந்து, தம்மை எதிர் கொண்ட சுந்தரமூர்த்திசுவாமிகளை நமஸ்கரித்து, அவரோடு கோயிலிற்சென்று வன்மீகநாதரைவணங்கி, தி

ருமும்மணிக் கோவைபாடி, பரவையார் வீட்டிலேபோய் சுந்தரமூர்த்தி சுவாமிகளோடும் இருந்தார். சிலதினம்சென்றபின்சுந்தரமூர்த்திசுவாமிகளோடு திருவாரூரை அகன்று வேதாரணியத்தை அடைந்து சுவாமிதரிசனம்செய்து, திருவந்தாதி பாடினார். அதன்பின்பாண்டிநாட்டிற்சென்று, அங்குள்ள மதுரைமுதலாகிய திருப்பதிகளை வணங்கிக்கொண்டு சுந்தரமூர்த்தியோடும் திருவாரூருக்குத் திரும்பிவந்து, அவரோடும் சுவாமிதரிசனம்செய்துகொண்டு இருந்தார். பலநாட்சென்றபின், சுந்தரமூர்த்தியைத் தம்முடைய ஊருக்கு வரும்படி பிரார்த்தித்து, அழைத்துக்கொண்டு சென்று, தம்முடைய கொடுங்கோளூரை அடைந்து அவரோடும் இருந்தார். ஒருநாள் சுந்தரமூர்த்தி சுவாமி வன்மீகநாதனை நினைந்து உருகி, திருவாரூருக்குப்போம்படி எழுந்துசெல்ல சேரமான் பெருமாணாயனார் பிரிவாற்றாதவராகி, எழுந்து அவரைப்பின்றொடர்ந்து, போகாதபடிதடுத்து, அதற்கு அவர் உடன்படாமைகண்டு, மந்திரிகளைக் கொண்டு தம்முடையமாளிகையில் இருக்கின்றபண்டாரம்முழுதையும் பொதிசெய்து ஆட்களின் மேலே எற்றுவித்து சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு முன்செல்லும்படி அனுப்பி அந்தச்சுவாமிகளைவிழுந்துநமஸ்கரித்தார் சுந்தரமூர்த்திசுவாமிகள்சேரமான்பெருமாணாயனாரைத்தழுவி விடைகொடுத்துச்சென்று, திருவாரூரைஅடைந்தார் சுந்தரமூர்த்திசுவாமிகளிடத்திலேவிடைபெற்ற சேரமான் பெருமாணாயனார் சுந்தரமூர்த்திசுவாமிகளை மறவாதசிந்தையோடு கொடுங்கோளூரிலே அரசுசெய்துகொண்டு இருந்தார்.

நெடுநாள் ஆயினபின்சுந்தரமூர்த்திசுவாமிகள் பின்னும் கொடுங்கோளூருக்குவந்து சேரமான் பெருமாணாயனாரோடு இருந்தார். பலநாளாயினபின், ஒருநாள் சேரமான்பெருமாணாயனார் ஸ்நானம்பண்ணும்பொழுது சுந்தரமூர்த்திசுவாமிகள் திருவஞ்சைக்களத்துக்குப்போய்சுவாமிதரிசனம் செய்து திருக்கைலாசத்தில் இருந்து பரமசிவனால் அனுப்பப்பட்ட வெள்ளையானையின்மேல் எறி தம்முடையதோழராகியசேரமான்பெருமாணாயனாரை நினைத்துக்கொண்டுசென்றார். சேரமான் பெருமாணாயனார்சுந்தரமூர்த்திசுவாமிகளுடைய செயலை அறிந்து அந்தக்ஷணத்தில் அருகில்நின்ற ஓர்குதிரையில்எறிக்கொண்டு திருவஞ்சைக்களத்துக்குப்போய், வெள்ளையானையின் மேற்கொண்டு ஆகாயத்திற்செல்லும் சுந்தரமூர்த்திசுவாமிகளைக் கண்டு தாம்எறிய குதிரையின்செவியிலே ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஓதியருளினார். உடனே அந்தக் குதிரையானது ஆகாயத்திலேபாய்ந்து சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய வெள்ளையானையை அடைந்து அதனைவலஞ்செய்து அதற்குமுன்னாகச்சென்றது சேரமான் பெருமாணாயனாருடைய படைவீரர்கள் குதிரையிற்செல்லும் அந்நாயனாரைத் தங்கள்கண்ணுக்குப்புலப்படும் எல்லைவரைக்கும் ஆகாயத்திலேகண்டு, பின்காணாமையால் மிகுந்த திடபத்தியினாலே உருவிய உடைவாட்களினால் தங்கள்தங்கள் தேகத்தைவீழ்த்தி வீரயாக்கையைப்பெற்றுப்போய் சேரமான்பெருமாணாயனாருக்கு முற்பட்டு அவரைச்சேவித்துக்கொண்டு சென்றார்கள். சேரமான்பெருமாணாயனாரும்சுந்தரமூர்த்திசுவாமிகளும் திருக்கைலாசத்தின் தெற்கு வாயிலுக்கு முன் போன உடனே குதிரையினின்றும்யானையினின்றும் இறங்கி பலவாயில்களையும் கடந்து திருவணுக்கன் திருவாயிலை அடைந்தார்கள். அங்கே சேரமான்பெருமாணாயனார் தடைபட்டுநிற்க சுந்தரமூர்த்திசுவாமிகள் உள்ளேபோய்ச் சுவாமிசந்நிதானத்திலேவிழுந்து நமஸ்கரித்து எழுந்து, ஸ்தோத்திரம்பண்ணி சுவாமீ தேவரீருடைய திருவடிகளை அடையும்பொருட்டு, சேரமான்பெருமாள் திருவணுக்கன் திருவாயிலின் புறத்திலே வந்து நிற்கின்றார் என்று விண்ணப்பஞ்செய்ய பரமசிவன் சேரமான்பெருமாணாயனாரை உள்ளே அழைப்பிக்க அவர்விரைந்துவந்து, சந்நிதானத்திலே நமஸ்கரித்து ஸ்தோத்திரம்பண்ணினார். பரமசிவன் திருமுறுவல்செய்து இங்கேநாம்அழையாதிருக்க நீ வந்தது என்னென்று அருளிச்செய்ய, சேரமான் பெருமாணாயனார் அஞ்சலிசெய்துநின்று, சுவாமீ சுந்தரமூர்த்திசுவாமிகளுடைய திருவடிகளைத் துதித்து, அவர் எறிய வெள்ளையானைக்குமுன் அவரைச்சேவித்துக்கொண்டுவந்தேன் தேவரீர் பொழிகின்ற பெருங்கருணைவெள்ளம் முன்கொண்டுபுகுதலால் திருமுன்புவரப்பெற்றேன் இனி ஒரு விண்ணப்பம் உண்டு அரிபிரமேந்திராதிதேவர்களாலும் முனிவர்களாலும் வேதங்களாலும் துதிக்கப்படுதற்கு அரியபெருமையை உடைய தேவரீர் மேல் அன்பினாலே தேவரீரது திருவருள்கொண்டு திருவுலாப்பாடினேன் அதனைத் தேவரீர் கேட்டருளல்வேண்டும் என்று விண்ணப்பம்செய்தார். அப்பொழுது பரமசிவன் பஞ்சபாசத்தடை நீங்

கும்படி வன்றொண்டனை அடைந்த சேரனே அவ்வுலாவைச் சொல்லு என்று திருவாய்மலர்ந்தருள சேரமான்பெருமாணாயனாரும் அதனைக்கேட்பித்தார் பரமசிவன் அதற்குஅருள்செய்துநம்முடைய கணங்களுக்கு நாதராய் இரு என்றுசொல்லியருளினார். சேரமான்பெருமாணாயனார் சிவகணநாதராகி, சுவாமியை சேவிப்பாராயினார் அவர் அருளிச்செய்த திருக்கைலாச ஞானவுலாவைக் கைலாசகிரியிலே அன்று கேட்ட மாசாத்தரானவர் அதனைத் தரித்து இந்தத் தமிழ் நாட்டில் உள்ள திருக்கடவூரிலே வெளிப்படச் சொல்லி இப்பூமியிலே விளங்கும் பொருட்டு நாட்டியருளினார்.

## கணநாதநாயனார்புராணம்.

தந்தமலிவயற்காழிமறையோரோத்துங் கணநாதர்திருத்தோணிக்கடவுளார்க்கு
நந்தவனம்பலவமைத்துமலருங்கொய்து நற்றாமஞ்சொற்றாமநயந்துசாத்தி
வந்தவரைத்தொண்டாக்கிப்பணிகள்பூட்டி வாதுசெய்தவாரணத்தைமகிழ்ந்துவாழ்த்தி
புந்திமகிழ்ந்தரனருளாற்கயிலைமேவிப் பொருவில்கணத்தவர்காவல்பொருந்தினாரே.

சீர்காழியிலே பிராமணர்குலத்திலே கணநாத நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் திருத்தோணியப்பருக்கு மிகுந்த அன்பினோடு தினந்தோறும் திருப்பணிகள் செய்பவர் தம்மை விரும்பிவந்து அடைபவர்களை நந்தனவனம் அமைத்தல், பூக்கொய்தல், திருமாலைகட்டல், திருமஞ்சனம் எடுத்தல், திருவலகிடுதல், திருமெழுக்கிடுதல், திருவிளக்கேற்றல், திருமுறை எழுதல், திருமுறை வாசித்தல், முதலாகிய திருத்தொண்டுகளுள் அவரவருக்குஏற்ற திருத்தொண்டுகளிலேபயில்வித்து அவர்களைச் சிவனடியார்கள் ஆக்குவார் கிருகஸ்தாச்சிரமத்தில் இருந்து சிவனடியார்களை வழிபடுவார். சமய குரவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளைத் தினந்தோறும் முப்பொழுதினும் அத்தியந்த ஆசையோடு விதிப்படி பூசைசெய்தார். அந்தப் பூசாபலத்தினாலே திருக்கயிலாசமலையை அடைந்து, சிவகணங்களுக்கு நாதரானார்.

## கூற்றுவநாயனார்புராணம்.

குன்றாதபுகழாளர்களந்தைவேந்தர் கூற்றுவனார்மாற்றலர்மண்கொண்டுசூடப்
பொன்றாழுமுடிவேண்டப்புலியூர்வாழும் பூசுரர்கள்கொடாதகலப்புநிதனீந்த
மன்றாடுந்திருவடியேமுடியாச்சூடி மாநிலங்காத்திறைவனுறைமாடக்கோயிற்
சென்றாசையுடன்வணங்கிப்பணிகள்செய்து திருவருளாலமருலகஞ்சேர்ந்துளாரே.

களந்தைவேந்தராகிய கூற்றுவநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை விதிப்படி உச்சரிப்பவர் சிவனடியார்களுக்குத் திருத்தொண்டுசெய்பவர் அவர் திருவருள் வலியினால் மகா ஐசுவரியம் உடையராகி கஜரததுரகபதாதி என்னும் சதுரங்கங்கள் நிறைந்த வீரச்செருக்கில் மேலாயினார் பல அரசர்களோடு யுத்தம் செய்து அவர்களை ஜயித்து அவர்களுடைய நாடுகள் எல்லாவற்றையும் கவர்ந்து அரசர் திருவில்முடி ஒன்றுதவிர மற்றவைகள் எல்லாவற்றையும் உடையராயினார் உலகத்தை ஆளுதற்குத் தமக்குமுடிசூட்டும்பொருட்டு தில்லைவாழந்தணர்களை வேண்ட அவர்கள் நாங்கள் சோழகுலத்தாருக்கே அன்றி மற்றவர்களுக்கு முடிசூட்டோம் என்றுமறுத்து தங்களுள் ஒருகுடியை முடியைக் காத்துக் கொள்ளும்படி இருத்தி சேரமண்டலத்துக்குப்



கணநாதநாயனார்.



கூற்றுவநாயனார்.



பொய்யடிமையில்லாதபுலவர்.

కు. జె. వెంక్క ప్రారాయం రాజువా శిం. ది ౨౩



புகழ்ச்சோழநாயனார்.

போயினார்கள். கூற்றுவநாயனார் ஐயுறவினாலே மனந்தளர்ந்து, சபாநாயகரைப்பணிந்து அற்றை நாள் இரவிலே அடியேனுக்குத் திருவடியையே முடியாகத் தந்தருளல்வேண்டும் என்று பிரார்த்தித்துக்கொண்டு நித்திரைசெய்ய சபாநாயகர் அவருக்குச் சொப்பனத்திலே தோன்றி தம்முடைய திருவடிகளைக்கொடுத்தருளினார். கூற்றுவநாயனார் அவைகளையே முடியாகச்சூடி பூமிமுழுதையும் பொதுநீக்கி ஆண்டார். பரமசிவன் வீற்றிருக்கின்ற முக்கியஸ்தலங்கள் எங்கும்சென்றுவணங்கி திருப்பணிகள்செய்து சிவபதம் அடைந்தார்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

ஏழாவது

# பொய்யடிமையில்லாதசருக்கம்.

## பொய்யடிமையில்லாதபுலவர்புராணம்.

பொய்யறியாக்கபிலரொடுபரணராதிப் புலவோர்பொற்பார்கலைகள்பொருந்தவோதிச்
செய்யுளிடைவளராசுமதுரநல்ல சித்திரவித்தாரமெனத்தெரிக்குஞ்செம்மை
மெய்யுடையதொடைகளெல்லாமன்றுளாடன் மேவியகோனிருதாளில்விரவச்சாத்திக்
கையுடையஞ்சலியினராயருளான்மேலைக் கருதரியவமருலகங்கைக்கொண்டாரே.

பாண்டிநாட்டிலே சிறந்துவிளங்குகின்றதுவாதசாந்தபுரமாகிய மதுராபுரியிலே சொக்கநாதசுவாமியிடத்திலே, சதுரமாய் இரண்டுசாண் அளவினதாகி மெய்ப்புலவர்களுக்கெல்லாம் முழம்வளர்ந்து இருத்தற்கு இடங்கொடுக்கின்ற சங்கப்பலகையைப்பெற்று அதனில் இருந்து தமிழ்மொழியைவளர்த்தகடைச்சங்கப்புலவர்கள் கபிலர், பரணர், நக்கீரர், முதலாக நாற்பத்தொன்பதின்மர் அவர்கள் விபூதிருத்திராக்ஷதாரணர்களாய் ஸ்ரீபஞ்சாக்ஷர ஜபபரர்களாகி அகத்தியம் தொல்காப்பியம் என்னும் இலக்கணநூல்களின்படி ஆசு - மதுரம் - சித்திரம் - வித்தாரம் - என்னும் நாற்கவிகளினாலும் அத்தியந்த மெய்ப்பத்தியோடு பரமசிவனையேபாடி, பொய்யடிமை யில்லாத புலவர்கள் எனப் பெயர் பெற்று சிவபதம் அடைந்தார்கள்.

## புகழ்ச்சோழநாயனார்புராணம்.

பொழின்மருவுங்கருவூர்வாழ்புகழார்சோழர் போதகம்போலென்னுயிரும்போக்குமென்றே
யழலவிர்வாள்கொடுத்தபிரானதிகைமான்மே லடர்ந்தபெரும்படையேவவவர்கொண்டேய்ந்த
தழல்விழிகொடலைகாண்பார்கண்டதோர்புன் சடைத்தலையைமுடித்தலையாற்றாழ்ந்துவாங்கிக்
கழல்பரவியதுசிரத்தினேந்திவாய்ந்த கனன்மூழ்கியிறைவனடிகைக்கொண்டாரே.

சோழநாட்டிலே உறையூரிலே புகழ்ச்சோழநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் மற்றை அரசர்கள் பணிகேட்க, உலகம் தம்முடைய செங்கோலின்முறைநிற்க சைவசமயம் தழைக்க,

அரசியற்றினார் சிவாலயங்கள் எல்லாவற்றினும் நித்திய நைமித்திகங்களை வழுவின்றி நடத்துவிப்பார் சிவனடியார்களுக்கு வேண்டுவனவற்றைக்குறிப்பறிந்துகொடுப்பார். இப்படியிருக்கும்நாளிலே கொங்குமுதலிய குடதேசங்களின் அரசர்கள்தரும் திறையை வாங்கும்பொருட்டு தங்கள்குலத்தார்களுக்கு உரிய கருவூர் என்னும் இராஜதானியிலே அரசுரிமைச் சுற்றத்தோடு வந்தணைந்தார். அங்குள்ள ஆனிலை என்னும் கோயிலில் இருக்கின்ற பரமசிவனை வணங்கி, மாளிகையிலே புகுந்து அத்தாணிமண்டபத்திலே சிங்காசனத்தில் வீற்றிருந்து குடதேசத்து அரசர்கள்கொணர்ந்த திறைகளைக்கண்டு, அவர்களுக்கு அருள்புரிந்து, மந்திரிமாரைநோக்கி, நம்முடைய ஆஞ்ஞாசக்கரத்துக்கு அமையாத அரசர்கள் இருக்கின்ற அரணங்கள் உளவாகில், தெரிந்துசொல்லுங்கள் என்றார் இப்படி நிகழும்நாளிலே, சிவகாமியாண்டார் கொணர்கின்ற புஷ்பங்களைச் சிதறிய தம்முடைய யானையையும் ஆதோரணர்களையும்கொன்ற எறிபத்தநாயனாரை அணைந்து, என்னையுங் கொன்றருளும் என்று, தமது வாளைக்கொடுத்து திருத்தொண்டிலே மிகச்சிறந்து விளங்கினார். மந்திரிமார்கள் புகழ்ச்சோழநாயனாரை வணங்கி, திறைகொணராத அரசன் ஒருவன்உளன்என்றுசொல்ல புகழ்ச்சோழர் வியப்பினாலே புன்முறுவல்செய்து அவன்யாவன் என்றுவினவ மந்திரிமார் அவன் அதிகன்என்பவன் அவன் சமீபத்திலே மலையரணத்துள்ளே இருப்பவன் என்றார்கள். அதுகேட்ட புகழ்ச்சோழர் நீங்கள் படைகொண்டுசென்று அவ்வரணத்தைத் துகளாகப்பற்றறுத்துவாருங்கள் என்று ஆஞ்ஞாபிக்க மந்திரிமார் சேனையோடுசென்று அம்மலையரணைப் பொடிபடுத்து அதிகனுடையசேனைகளை வதைத்தார்கள். அதிகன்அஞ்சி ஓடிப்போய்ச் சுரத்தில் ஒளித்துவிட்டான். புகழ்ச்சோழருடைய படைவீரர்களிற் பலர் அதிகனுடைய படைவீரர்களின் தலைகளையும் மற்றவர்கள் நிதிக்குவைகளையும் யானை குதிரைகளையும்கொண்டு மந்திரிமாரோடு கருவூரிலேவந்துசேர்ந்தார்கள் புகழ்ச்சோழநாயனார் தமக்குமுன்னே படைவீரர்கள் கொண்டுவந்த தலைக்குவைகளுள் ஒருதலையின் நடுவிலே ஒரு புன்சடையைக்கண்டார். கண்டபொழுதேநடுங்கி, மனங்கலங்கிகைதொழுது பெரும்பயத்தினுடனே எதிர்சென்று அத்தலையிற் சடையைத் தெரியப்பார்த்து கண்ணீர்சொரிய அழுது, நான் சைவநெறியைப் பரிபாலித்து அரசியற்றியபடி மிக அழகிது சடைமுடியையுடையவர் பரமசிவன் அருளிச்செய்த மெய்ந்நெறியைக் கண்டவர் அவருடைய சடைத்தலையைத் தாங்கிவரக்கண்டும் அதிபாதகனாகிய நான் பூமியைத்தாங்குதற்கு இருந்தேனே என்றுசொல்லி ஒன்று செய்யத்துணிந்து மந்திரிமாரைநோக்கி பூமியைக் காத்து அரசளித்துப் பரமசிவனுக்கு வழித்தொண்டு செய்யும்பொருட்டு என்னுடைய குமாரனுக்கு முடிசூட்டுங்கள் என்று விதித்து அதனைக்கேட்டு அயரும் மந்திரிகளைத்தேற்றி அக்கினிவளர்ப்பித்து விபூதியை உத்தூளனஞ்செய்து சடைச்சிரத்தை ஒருபொற்கலத்தில்ஏந்தி தம்முடைய திருமுடியிலேதாங்கி அவ்வக்கினியை வலஞ்செய்து உயிர்த்துணையாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை எடுத்து ஓதி அதனுள்ளேபுகுந்து பரமசிவனது திருவடிநிழலிலே அமர்ந்து இருந்தார்.

## நரசிங்கமுனையரையநாயனார்புராணம்.

நாடுபுகழ்முனைப்பாடிநாட்டுமேய நரசிங்கமுனையர்புவிநயந்துமன்று
ளாடுமவராதிரைநாளடியார்க்கம்பொ னமுதளிப்பாரொளிவெண்ணீறணிந்துதூர்த்த
வேடமுடையவர்க்கிரட்டிச்செம்பொனீந்து விடுத்தழகாராலயங்கள்விளங்கச்செய்து
தோடலர்தாருடையபிரானருளையாளத் தோன்றினாரெனையருளினூன்றினாரே.

திருமுனைப்பாடிநாட்டிலே நரசிங்கமுனையரையநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார் அவர் பரமசிவனது திருவடியை அடைதலே தமக்குப் பெரும்பேறு எனத் துணிந்தவர், அநித்தியமும் துக்கமுமாகிய அரசியற்கையில்வைத்த விருப்பத்தாலன்று சர்வான்மாக்களும் சற்சமயமர்கியசை



,நரசிங்கமுனையரையநாயனர்



அதிபத்தநாயனார்.

வத்தைக் கைக்கொண்டு முத்தியின்பத்தை அடைதல்வேண்டும் என்னும் பெருங்கருணையினாலே பலசத்துருமுனைகளைக்கடந்து சைவநெறிவாழும்படிதிருவருளைமுன்னிட்டுநின்று அரசாள்வார் சிவாலயங்கள்தோறும் நித்திய நைமித்திகங்களை ஒழுங்குபெற நடத்துவிப்பார். திருவாதிரை நக்ஷத்திரந்தோறும் விசேஷபூசைசெய்வித்துதம்மிடத்தில்வரும் சிவனடியார்களைத் திருவமுது செய்வித்து, அவர்களுக்குத் தனித்தனியே நூறுபொன் கொடுப்பார். ஒரு திருவாதிரை நக்ஷத்திரத்திலே அப்படியே அடியார்களுக்குப்பொன்கொடுக்கும்பொழுது தூர்த்தவேடமுள்ள ஒருவர் விபூதி அணிந்துகொண்டுவந்தார் அவருடையவடிவு இருந்தபடியைக்கண்டு பக்கத்தில் உள்ளவர்கள் இகழ்ந்து ஒதுங்க நரசிங்கமுனையரையர் அதிகண்டுஎதிரேசென்று அவரை அஞ்சலிசெய்து அழைத்துக் கொண்டுபோய் அவரை மிக உபசரித்து சீலம் இல்லாதவர்களாயினும் விபூதியை அணிந்தவர்களை உலகத்தார் இகழ்ந்து நரகத்தில் வீழாவண்ணம் அவருக்கு இரட்டிப்பொன்கொடுத்து, அவரை வணங்கி, இன்சொற்சொல்லிவிடைகொடுத்து அனுப்பினர் இந்தப்பிரகாரம் அருமையாகிய திருத்தொண்டுகள் பலவற்றைச்செய்து சிவபதப்பிராப்தியானார்.

## அதிபத்தநாயனர் புராணம்.

அலையாருங்கடலுலகைநகருள்வாழுமதிபத்தர்பரதவர்களதிபர்வேலை
வலைவாரிவருமீனிற்றலைமீனீசன்வார்கழற்கேயென்றுவிடுமரபார்பன்னாட்
டலையானதொருமீனேசாரநாளுந்தந்தொழிலால்விடுத்துமிடிசாரச்செம்பொ
னிலையாருமணிநயந்தமீனென்றெய்தநீத்தருளாலிறைவனடிநேர்ந்துளாரே.

சோழமண்டலத்திலே நாகபட்டணத்திலே சமுத்திரதீரத்திலே உள்ள நுளைப்பாடியிலே பரதவர்கள்குலத்திலே அதிபத்தநாயனர் என்பவர் ஒருவர் இருந்தார் அவர் பரதவர்களுக்குத் தலைவராகி அவர்கள் வலைப்படுத்துக்குவிக்கும் மீன்குவைகளைப்பெற்றுவாழ்வார் சிவபத்தியில்மிகச்சிறந்தவராதலால் அகப்படும்மீன்களிலே ஒருதலைமீனை இது பரமசிவனுக்கு என்றுமிகுந்தஅன்பினோடு எப்பொழுதும் விட்டுவந்தார் ஒருநாளிலே ஒருமீனேவரினும் அதனைப்பரமசிவனுக்கு என்றேவிடுவார். இப்படி ஒழுகும்நாட்களிலே அடுத்தடுத்து அனேகநாட்களில் ஒவ்வொருமீனே அகப்பட அதனைக்கடலிலே விட்டுவந்தார். மீன்விலையினாலே மிகுஞ்செல்வம்மறுத்தமையால் தம்முடைய கிளைகள் உணவின்றிவருந்தவும், தாம் வருந்தாது பட்டமீனைப்பரமசிவனுக்கு என்றேவிட்டு மகிழ்ந்தார். இப்படிநெடுநாள்வர உணவின்மையால்திருமேனிதளரவும் தம்முடைய தொழிலிலேநிலைநின்றமையைப் பரமசிவன் அறிந்து அவரது அன்பென்னும் அமுதை உண்பாராயினர். இப்படி நிகழும்நாளிலே வேறு ஒருநாள் பரதவர்கள் அவ்வொருமீனையும் அவ்வாறேவிட்டு விலைமதிப்பில்லாத மகாதிவ்வியப் பிரகாசங்கொண்ட நவரத்தினங்களால் உறுப்பமைந்த அற்புதமயமாகிய ஒருபொன்மீனை வலைப்படுத்து, கரையில் ஏறியபோது அம்மீன் சூரியன் உதித்தாற்போல உலகமெல்லாம்வியக்கும்படி மிகப்பிரகாசிக்கக்கண்டு அதனைஎடுத்து, ஒருமீன்படுத்தோம் என்றார்கள் அதிபத்தநாயனர் அம்மீனைக்கண்டு இது இரத்தினங்களால்உறுப்பமைந்தபொன்மீனாதலால், என்னை ஆட்கொண்டருளிய பரமசிவனுக்கு ஆகும் என்று கடலிலேவிட்டார் அப்பொழுது பரமசிவன் இடபாரூடராய் ஆகாயத்திலேதோன்றியருள அதிபத்தநாயனர் ஆனந்த அருவிசொரிய மனங்கசிந்துருகி நமஸ்கரித்து, சிரசின்மேல் அஞ்சலி செய்தார். சுவாமி தமது உலகத்திலே அடியார்களோடு இருக்கும்படி அவருக்கு அருள்செய்தார்.

## கலிக்கம்பநாயனார் புராணம்.

கடவுளருட்கண்ணார்கள்பயிலுந்தொல்லைக்கடந்தைநகர்வணிகர்கலிக்கம்பரன்பர்க்
கடிமையுறவமுதளிப்பாரடியானீங்கியருளுருவாயன்பருடனணையவேத்தி
யிடையிலவரடியிணையும்விளக்காநிற்பவிகழ்மனைவிகரகமலியிரண்டுகையும்
படியில்விழவெறிந்தவள்செய்பணியுந்தாமேபரிந்துபுரிந்தரனருளேபற்றினாரே.

சோழமண்டலத்திலேபெண்ணாகடத்திலேவைசியர்குலத்திலே கலிக்கம்பநாயனார் என்பவர்ஒருவர் இருந்தார். அவர் அந்தத்திருப்பதியில் உள்ள தூங்கானைமாடம் என்னுங்கோயிலில் வீற்றிருக்கும் பரமசிவனுக்குத் திருத்தொண்டு செய்பவர் சிவலிங்கத்தை வழிபடினும் சிவனடியார்களைவழிபடாதொழியில் அவ்வழிபாடு நிஷ்பலமாம்என்று சிவாகமம் செப்புதலால், தினந்தோறும் சிவனடியார்களை அத்தியந்த ஆசையோடு திருவமுதுசெய்வித்து அவர்களுக்குவேண்டுந் திரவியங்கள் எல்லாவற்றையும்கொடுப்பார். இப்படிஒழுகும் நாளிலே ஒருநாள் தமதுவீட்டிலே அமுதுசெய்ய வந்த சிவனடியார்கள் எல்லாரையும் பழையமுறைப்படி அமுதுசெய்யத் தொடங்குவித்தற்கு, அவர்களை முன்பு அழைத்து, தமதுமனைவியார்கரகநீர்வார்க்க அவர்களுடைய திருவடிகளைவிளக்கும்பொழுது, முன்பு தமக்குப் பணிவிடைக்காரராய் இருந்து பணிவிடையை வெறுத்துச்சென்ற ஒருவர் சிவவேடந்தாங்கிவர அவருடையதிருவடிகளையும் விளக்கப்புகுந்தார். மனைவியார் இவர் எங்களிடத்திலே பணிவிடைக்காரராய் இருந்து போனவர்போலும் என்று சிந்தித்தலால் கரகநீர் வார்க்கத்தாழ்க்க, கலிக்கம்பநாயனார் அதுகண்டு இவள் இந்தச்சிவனடியாருடைய முந்தியநிலையைக்குறித்து வெள்கி நீர்வாராதொழிந்தாள் என்று துணிந்து வாளைஎடுத்து அம்மனைவியார் கையிற் கரகத்தைவாங்கி, அக்கையைத்தறித்து அக்கரக நீரை எடுத்து தாமே அவருடைய திருவடிகளைவிளக்கி அத்தியந்த ஆசையோடு தாமே வேண்டுவனவெல்லாம்செய்து அவ்வடியார்களை அமுதுசெய்வித்தார். அந்நாயனார் பின்னும் சிலகாலம் திருத்தொண்டின்வழிநின்று, சிவபதத்தை அடைந்தார்.

## கலியநாயனார்புராணம்.

தடமதில்சூழொற்றியூர்நகருள்வாழுஞ்சக்கரப்பாடியர்குலமெய்த்தவமாயுள்ளார்
படர்புகழார்கலியனார்நலியுங்கூற்றைப்பாய்ந்தவர்க்குவிளக்கெரிக்கும்பரிவான்மற்றோ
ருடலிலராய்ச்செக்குழல்வார்க்கதவுநேராதுயர்மனைவியைக்கொள்வாருளருமின்றி
மிடறுதிரமகனிறையவரியநாதன்வியன்கைகொடுபிடிப்பவருண்மேவினாரே.

தொண்டைமண்டலத்திலேதிருவொற்றியூரிலே உள்ள சக்கரப்பாடியிலே செக்கார்குலத்திலே கலியநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார் அவர் பெருஞ்செல்வராகி செல்வநிலையாமையையும்யாக்கைநிலையாமையையும் உணர்ந்து சிவபுண்ணியம்செய்தல்வேண்டும் எனத்தெளிந்து அந்தத்திருப்பதியில் உள்ளசிவாலயத்தின் உள்ளும்புறம்பும் அல்லும்பகலும் எண்ணிறந்த திருவிளக்கு எற்றுவாராயினார் பரமசிவன் நெடுங்காலம் இத்தொண்டைச்செய்துவரும் அவ்வடியாருடையபத்திவலிமையைப் பிறர்க்குப் புலப்படுத்தும் பொருட்டு அவரிடத்து உள்ளசெல்வம்எல்லாம் குன்றும்படி அருள்செய்தார். அவர் தாம் வறுமை எய்தியும் தமது மரபில் உள்ளோர்தரும் எண்ணெயைவாங்கிக் கூறி விற்றுக்கொணர்ந்து, கூலிபெற்று தாம் செய்யும் திருத்தொண்டை வழுவாதுசெய்தார். சிலநாளாயினபின் அவர்கள் கொடாதொழியஅவர்மனந்தளர்ந்து, தைலவினைசெய்யும் இடத்திற் சென்றுதொழில்செய்து கூலிவாங்கித்திருவிளக்கிட்டார். பின்பு அத்தொழில்செய்வோர்கள்பலராய்



கலிக்கம்பநாயனர்.



கலயநாயனார்.



சத்திநாயனார்.



ஐயடிகள்காடவர்கோனையனார்

ப்பெருகினமையால், அத்தொழிலால்வரும்பேறும் கிடையாதுமுட்ட ஒருநாள்கவலைகொண்டு, தம்முடைய மனைவியாரை விற்பதற்கு நகரெங்கும் கூறி வாங்குவார் இன்மையால் மனந்தளர்ந்து ஆலயத்தை அடைந்து திருவிளக்குஏற்றும் சமயத்திலே திருவிளக்குப்பணிமாறில் நான் இறந்து விடுவேன் என்று துணிவுகொண்டு, திரிஇட்ட அகல்களைப்பரப்பி எண்ணெய்க்குப் பிரதியாகத் தமது இரத்தத்தைநிறைக்கும் பொருட்டுஆயுதத்தினாலே கழுத்தை அரிந்தார் அப்பொழுது கிருபாசமுத்திரமாகிய பரமசிவன் நேர்வந்து அவருடையகையைப்பிடித்து அவருக்குமுன்னே இடபாரூடராய்த்தோன்றியருள அவர் தாம் உற்ற ஊறுநீங்கிசிரசின்மேல் அஞ்சலிசெய்துகொண்டுநின்றார். சுவாமி அவரைத்தமது திருவடியிலேசேர்த்தருளினார்.

## சத்திநாயனார்புராணம்.

விரிதருகாவிரிநாட்டுவரிஞ்சியூர்வாழ் வேளாளர்சத்தியார்விமலர்பாதத்
துரியவர்களடிபரவுமொருமையார்நா வோவாமேயைந்தெழுத்துமுரைக்குநீரா
ரிருளின்மிடறுடையபிரானடியார்தம்மை யிகழ்வார்நாத்தண்டாயத்திடுக்கிவாங்கி
யரியுமதுதிருத்தொழிலாவுடையார்மன்று ளாடியசேவடிநீழலடைந்துளாரே.

சோழநாட்டிலே வரிஞ்சியூரிலே வேளாளர்குலத்திலே பரமசிவனுடையதிருவடிகளை மறத்தல் சிறிதும் இல்லாத பெரும்பத்தர் ஒருவர் இருந்தார். அவர் சிவனடியார்களை இகழ்ந்துபேசும் அதிபாதகிகளுடைய நாக்கைத் தண்டாயத்தால் இடுக்கித் தமது கையிற் சத்தியினால் அரிதலாகிய அருமைப்பெருமைத் திருத்தொண்டை நெடுங்காலம் அன்பினோடு செய்துகொண்டு இருந்து, சத்திநாயனார் என்னும் பெயரைப்பெற்று பரமசிவனுடைய திருவடிநீழலை அடைந்தார்.

## ஐயடிகள்காடவர்கோனாயனார்புராணம்.

வையநிகழ்பல்லவர்தங்குலத்துவந்த மாமணிமாநிலமுழுதுமகிழ்ந்துகாக்கு
மையடிகள்காடவர்கோனருளானூல்க ளறிந்தரசுபுரிந்திடுதெல்லையுமென்றே
பொய்யனையவுடல்வாழ்வுகழியுமாறு பொருந்தியிடும்புகழ்வெண்பாபுலியூர்மேவுஞ்
செய்யதிருவடிமுதலாப்பதிகடோறுஞ் செப்பினரொன்வினைகடப்பினாரே.

தொண்டை மண்டலத்திலே காஞ்சிபுரத்திலே பல்லவர்குலத்திலே சைவத்திருநெறி வாழும்படி அரசியற்றும் ஐயடிகள்காடவர்கோனாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் எவ்வுயிர்களும் இம்மைமறுமை இன்பங்களையும் முத்தியையும் அடைதல்வேண்டும் எனவிரும்பி பிறதேசங்களையும் தமக்கு அதீனப்படுத்தி சைவந்தழைத்தோங்க அரசர்களும் பணிசெய்ய அரசியற்றினார். சிலகாலஞ்சென்றபின் அரசாட்சி துன்பமயம் எனக்கருதி அதனைவெறுத்து அப்பாரத்தை இறக்கித் தம்முடைய புத்திரன்மேல் ஏற்றி பூமியிலுள்ள சிதம்பரம்முதலாகிய சிவஸ்தலங்கள்தோறும் சென்று சுவாமிதரிசனம் பண்ணி திருப்பணி செய்து ஒவ்வொரு திருவெண்பாப்பாடினார். இந்தப்பிரகாரம் நெடுங்காலம் திருத்தொண்டு செய்து கொண்டிருந்து சிவபதத்தை அடைந்தார்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

எட்டாவது

# கறைக்கண்டன்சருக்கம்.

## கணம்புல்லநாயனார்புராணம்.

இலகுவடவெள்ளாற்றுத்தென்பால்வாழு மிருக்குவேளூரதிபொழிலார்சென்னிக்
கலைநிலவாரடிபரவுங்கணம்புல்லர்தில்லைக் கருதுபுலீச்சரத்தரற்குக்காதற்றீப
நிலைதரத்தாமிடமிடியாலொருநாட்புல்லா னீடுவிளக்கிடவதுவுநேராதாகத்
தலைமயிரினெரிகொளுவுமளவினாதன் னுவாதவாழ்வருளுந்தன்மையாரே.

வடவெள்ளாற்றுக்குத் தென்கரையில் உள்ள இருக்குவேளூரிலே சிவபத்தியிற்சிறந்தவரும் பெருஞ்செல்வரும் ஆகிய ஒருவர் இருந்தார். அவர் செல்வம்பெற்றதினால் அடையும்பயன் இதுவே என்று சிவாலயத்தினுள்ளே திருவிளக்கேற்றி ஸ்தோத்திரம் பண்ணுவா ராயினார். நெடுங்காலம் சென்றபின் வறுமை எய்தி, சிதம்பரத்தை அடைந்து சபாநாயகரைத் தரிசனஞ் செய்துகொண்டு தம்முடையவீட்டில் உள்ளபொருள்களைவிற்றுஅங்குள்ள திருப்புலீச்சரம் என்னும் ஆலயத்தில் திருவிளக்கேற்றிவந்தார். இப்படி ஒழுகும்நாளிலே வீட்டுப்பொருள்களும் ஒழிந்துவிட கணம்புல்லுக்களை அறிந்துகொண்டுவந்து விற்று நெய்வாங்கித் திருவிளக்கெரித்தார். அதனால் அவருக்குக் கணம்புல்லநாயனார் என்னும்பெயர் உண்டாயிற்று. ஒருநாள் தாம் அரிந்துகொண்டுவந்த புல்லு விலைப்படாதொழியவும், தம்முடையபணி தவறாது அப்புல்லையேமாட்டி விளக்கெரித்தார். முன்பு விளக்கெரிக்கும் யாமம் அளவும் எரித்தற்கு அப்புல்லுப்போதாமையால் அடுத்த விளக்கிலே தம்முடைய திருமுடியை மடுத்து எரித்தார். அப்பொழுது பரமசிவன் பெருங்கருணை செய்தருள கணம்புல்லநாயனார் சிவலோகத்தை அடைந்தார்.

## காரிநாயனார்புராணம்

திருக்கடவூர்வருமுரவோர்காரியாராந் திகழ்தொண்டர்வண்டமிழ்நூறிருந்தவோதி
விருப்பொடுதம்பெயராற்பாவிளம்பிமும்மை வேந்தரையுமுறைமுறையேமேவியங்க
ணுரைத்தவுரைநயமாக்கியவர்பாலேய்ந்த வொண்பொருளாலாலயங்களோங்கச்செய்து
தரைக்குளருந்தவர்க்கேவறகமுன்போற்றுந் தன்மையாலருள்சேர்ந்தநன்மையாரே.

திருக்கடவூரிலே, தமிழ்மொழியிலே மகா பாண்டித்தியம் உள்ள காரிநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் தம்பெயரால் தமிழ்க்கோவை பாடி, தமிழ்நாட்டு மூவேந்தரிடத்தும் சென்று அவர்கள் மகிழும்படி உரைத்த உரைகளை நயமாக்கி, அவர்களிடத்திற்பெற்ற திரவியங்களைக்கொண்டு சிவாலயங்கள் பலவற்றைக்கட்டுவித்தும், சிவனடியார்களுக்குவேண்டும் திரவியங்களைக் கொடுத்தும் திருக்கைலாசமலையை மறவாத கருத்தினராகி, உலகம் எங்குப் தம்முடைய சிவகீர்த்தியை நிறுத்தி, பரமசிவனது திருவருளைப்பெற்று மனம்போல உடம்பும் திருக்கைலாசமலையை அடையப்பெற்றார்.



கணம்புல்லநாயனார்.



காரிநாயனார்



நெடுமாறநாயனர்.



வாயிலார்நாயனர்.

## நின்றசீர்நெடுமாறநாயனார்புராணம்.

தன்னன்மலிநெல்வேலிக்கவினார்மாறர் கவுரியர்கோனமணருறுகலக்கமெல்லாம்
பொன்னெயில்சூழ்சிரபுரக்கோனணையமாற்றிப் புநிதமிகுநீறணிந்துபோற்றிசெய்து
மன்னுபுகழ்மங்கையருக்கரசியாரா மலர்மாதுமணிமார்பமகிழ்ந்துமாற்றார்
வெந்நிடுதல்கண்டரசுபுரிந்துகாழி வேந்தரருள்சேர்ந்தபெருவிறலினாரே.

பாண்டிநாட்டிலே மதுராபுரியிலே, கூன்பாண்டியர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர்சமணர்களுடைய துர்ப்போதனையினாலே பொய்ம்மார்க்கமாகிய ஆருகத மதத்திலே பிரவேசித்தும், சோழராஜாவுடைய புத்திரியாரும் சைவசிகாமணியுமாகிய மங்கையர்க்கரசியாரை மனைவியாராகவும்குலச்சிறைநாயனாரை மந்திரியாராகவும்பெற்றிருந்தமையால், சமயகுரவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருக்கரத்தினாலே தீண்டி விபூதிசாத்தப்பட்டு, அவர் அருளிய மெய்யுபதேசத்தைப்பெற்று கூன்நிமிர்ந்து நெடுமாறநாயனார் எனப்பெயர்பெற்றார். தம்மோடுபொரவந்த வடபுலத்து அரசர்களோடு திருநெல்வேலிப் போர்க்களத்திலே யுத்தம்செய்து வென்று சைவசமயம் அபிவிர்த்தியாகும்படி நெடுங்காலம் அரசியற்றிக்கொண்டிருந்து சிவபதம் அடைந்தார்.

## வாயிலார்நாயனார்புராணம்.

ஞாயிலார்மதிற்றொண்டைநாட்டுமேன்மைநண்ணுமயிலாபுரியின்வேளாண்டொன்மை
வாயிலார்மலைவில்லானடியேபோற்றிமறவாமைதனைநின்றமநமேசெம்பொற்
கோயிலாவுயர்ஞாநம்விளக்காநீராக்குலவியவாநந்தமன்பேயமுதாக்கொண்டு
தாயிலானிருசரணநிகழவேத்துந்தன்மையாரருள்சேர்ந்தநன்மையாரே.

தொண்டைநாட்டிலே மயிலாப்பூரிலேவேளாளர் குலத்திலே வாயிலார்நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் பரமசிவனை ஒருபொழுதும்மறவாத மனமாகிய ஆலயத்துள் இருத்தி, ஞானமாகிய திருவிளக்கையேற்றி ஆனந்தமாகிய திருமஞ்சனம் ஆட்டி அன்பாகிய அமுதத்தைநைவேதனம் பண்ணுதலாகிய ஞானபூசையை நெடுங்காலம்செய்து கொண்டிருந்து சிவபதத்தை அடைந்தார்.

## முனையடுவார்நாயனார்புராணம்.

பொன்னிவளந்தருநாட்டுப்புகழுநீடூர்ப்பொருவிறிருமலிவேளாண்டொன்மைமிக்கார்
முன்னியவர்முனையடுவாரிகலார்போரின்முரணழிவார்தமக்காகமொழிந்தகூலி
மன்னுநிதிகொண்டுசயங்கொடுத்துவந்தவளர்பொருளாலிறைவனடிவழுவாவன்பர்க்
கன்னமவர்நசையின்மிகமிசையநல்குமன்பர்துன்பமவையாவுமகன்றுளாரே.

சோழநாட்டிலே திருநீடூரிலே வேளாளர்குலத்திலே சிவனடியார்களிடத்தே மிகுந்தபத்தியுள்ள ஒருபெரியவர் இருந்தார் அவர் சத்துருக்களுடைய போர்முனையிலே தோற்றவர்கள் தம்மிடத்தில்வந்து கூலிபேசினால் அவர்களுக்காகப்போய்ப் போர்செய்து வென்று பொருள் சம்பாதித்து சிவனடியார்களுக்குச் சொன்னசொன்னபடியே நிரம்பக்கொடுத்துஅவர்களைத்திருவமுதுசெய்வித்துக்கொண்டு இருந்தார். அதனால் அவருக்கு முனையடுவார்நாயனார் என்னும் திருநாமம் உண்டாயிற்று அவர்நெடுங்காலம் இவ்வருமையாகிய திருத்தொண்டைச் செய்துகொண்டிருந்து சிவபதம்பெற்றார்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஒன்பதாவது

# கடல்சூழ்ந்தசருக்கம்.

## கழற்சிங்கநாயனார்புராணம்.

காடவர்தங்குலமுவந்தகழலார்சிங்கர்காதன்மிகுதேவியுடன்காவலாரூ
ராடவலபெருமானைப்பணிவாரங்கோரகன்றமலர்தனைமோந்தவரிவைமூக்கைச்
சேடுடையசெருத்துணையாரரியக்கேட்டுத்திறலரசர்மலரொடுத்தசெங்கையென்றே
சூடகமுன்கைதடிந்துஞாலங்காத்ததூய்மையாரருள்சேர்ந்தவாய்மையாரோ.

காடவர்குலத்திலே, பரமசிவனுடைய திருவடிகளையேயன்றி மற்றொன்றையும் அறியாதகழற்சிங்கநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார் அவர்பரமசிவனது திருவருள் வலிமையினால் வடபுலத்தரசர்களைப் போரிலேவென்று, அவர்கள் நாடுகளைக்கவர்ந்து, எங்கும்சைவசமயம் தழைத்தோங்கும்படி அரசாண்டார். இப்படி ஒழுகும் நாளிலே மாதேவியோடு சிவஸ்தலங்கள் தோறும்சென்று, சுவாமிதரிசனம்பண்ணித் திருத்தொண்டு செய்வாராகி, திருவாரூரை அடைந்து,கோயிலிலே பிரவேசித்து சுவாமியைவணங்கினார். அப்பொழுது அவருடைய மாதேவிகோயிலை வலஞ்செய்து, அங்குள்ளசிறப்புக்கள் எல்லாவற்றையும் தனித்தனியே பார்த்துக் கொண்டுவந்து திருமாலைகட்டும் மண்டபத்தின்பக்கத்திலே விழுந்துகிடந்த ஒருபுதுப்பூவை எடுத்துமோந்தாள் உடனே செருத்துணைநாயனார் இதனைப்புஷ்பமண்டபத்துள் எடுத்து மோந்தாள் என்று நினைத்து விரைந்து ஓடிவந்து அவளைக்கூந்தலிலே பிடித்து இழுத்துவீழ்த்தி அவளுடையமூக்கைப்பிடித்து, கத்தியினாலே அறிந்தார் அவள்சோர்ந்துபுலம்பினாள் அப்பொழுது கழற்சிங்கநாயனாரும் சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு அவளுக்குச் சமீபத்தில் வந்து அவளைப்பார்த்து மிகக்கோபித்து சிறிதும் அஞ்சாமல் இந்தக்கொடுஞ் செய்கையைச்செய்தவர் யாவர் என்றுவினாவ செருத்துணைநாயனார் இவள்சுவாமிக்குச் சாத்தற்பாலதாகிய புஷ்பத்தை எடுத்து மோந்தமையால் நானே இப்படிச்செய்தேன் என்றார் அப்பொழுது கழற்சிங்கநாயனார் அவரை நோக்கி புஷ்பத்தை எடுத்த கையையன்றோமுன் துணிக்கவேண்டும் என்றுசொல்லி கட்டியஉடைவாளை உருவித்தம்முடையமாதேவியினது புஷ்பமெடுத்தகையைத் துணித்தார் அதுகண்டு தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள், இவ்வரியதிருத்தொண்டைச்செய்தகழற்சிங்கநாயனார்நெடுங்காலம் சைவநெறிதழைத்தோங்க அரசியற்றி பரமசிவனுடைய திருவடிநீழலை அடைந்தார்.

## இடங்கழிநாயனார்புராணம்.

கோனாட்டுக்கொடும்பாளூரிருக்கும்வேளிர்குலத்தலைவரிடங்கழியார்கொங்கிற்செம்பொ
னானேற்றூர்மன்றின்முகடம்பொன்மேய்ந்தவாதித்தன்மரபோர்நெற்கவர்ந்தோரன்பர்
போதாப்பணிருளின்கட்காவலாளர்புரவலர்முன்கொணரவவர்புகலக்கேட்டு
மானேற்றூரடியாரேகொள்கவென்றுவழங்கியரசாண்டருளின்மன்னினாரே.



கழற்சிங்கநாயனார்.



செருத்துணைநாயனார்.



புகழ்த்துணைநாயனார்.

கோனாட்டிலே கொடும்பாளூரிலே வேளிர்குலத்திலே கனகசபையின் முகட்டைக் கொங்கிற் செம்பொன்னால் வேய்ந்த ஆதித்தன்குடியிலேஇடங்கழிநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார் அவர்சைவநெறியும் வைதிகநெறியும் தழைக்கசிவாலயங்கள் எங்கும் நித்திய நைமித்திகங்கள் சிவாகமவிதிப்படி நடக்க அரசியற்றுங்காலத்திலே சிவனடியார்களைத் திருவமுதுசெய்விக்கும் ஓரடியவர் ஒருநாள் திருவமுது செய்வித்தற்குப் பொருள் எங்கும் அகப்படாமையால் மனந்தளர்ந்துமகேசுரபூசைமேல்வைத்த அத்தியந்த ஆசையினால் விழுங்கப்பட்டமையால் செயற்பாலது இதுஎன்பது தெரியாமல் அவ்விடங்கழிநாயனாருடையபண்டாரத்திலே நெற்கூட்டுநிரைகள் நெருங்கியகோட்டகாரத்தில் அத்தராத்திரியிலே புகுந்து முகந்து எடுத்தார் காவலாளர்கள் அதைக்கண்டுஅவரைப்பிடித்து இடங்கழிநாயனாருக்கு முன்கொண்டுவந்தார்கள் இடங்கழிநாயனார்அவ்வடியாரைப்பார்த்து நீர் ஏன் நம்முடைய நெற் பண்டாரத்தைக்கவர்ந்தீர் என்றுவினாவ அவ்வடியவர் நான்சிவனடியார்களை அமுதுசெய்வித்தற்குப் பொருள் இன்மையால் இங்ஙனம் செய்தேன்என்றார் இடங்கழிநாயனார் அதுகேட்டு மிக இரங்கி எனக்கு இவரன்றோபண்டாரம் என்றுசொல்லி சிவனடியார்கள் எல்லாரும் நெற்பண்டாரத்தைமாத்திரம் அன்றிமற்றைநிதிப் பண்டாரங்களையும் எடுத்துக்கொள்க என்று எங்கும்பறை அறைவித்தார் பின்னும் நெடுங்காலம் திருநீற்றின் நெறிதழைக்கும்படிதண்ணளியோடு அரசியற்றிக் கொண்டிருந்து சிவபதத்தை அடைந்தார்.

## செருத்துணைநாயனார்புராணம்.

இரைத்தணையார்புனற்பொன்னிமருதநன்னாட் டெழிலாருந்தஞ்சைநகருழவரோத்துஞ்
செருத்துணையார்திருவாரூர்சேர்ந்துவாழ்வார் செல்வமிகும்பல்லவர்கோன்றேவிவீழ்ந்த
மருத்துணையார்மலரெடுத்துமோப்பக்கண்டு வளமலிபூங்கத்தியாலவண்மூக்கீர்ந்த
கருத்துணையார்விறற்றிருத்தொண்டினையேசெய்து கருதலருமமருலகங்கைக்கொண்டாரே.

சோழமண்டலத்திலே மருகனாட்டிலே தஞ்சாவூரிலே வேளாளர்குலத்திலே சைவசிரோமணியாகிய செருத்துணைநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் திருவாரூரை அடைந்து காலந்தோறும் வன்மீகநாதரைவணங்கி திருத்தொண்டுகள் செய்துகொண்டு இருந்தார். இருக்கும்நாளிலே அங்கே சுவாமிதரிசனம் செய்யவந்த கழற்சிங்கநாயனாருடைய மாதேவி பூமாலைகட்டும் மண்டபத்தின் பக்கத்திலே விழுந்துகிடந்த ஒருபூவை எடுத்து மோந்ததைக்கண்டு அம்மண்டபத்திற் பூவை எடுத்து மோந்தாள் என்று நினைந்து கத்தியினாலே அவளுடையமூக்கை அரிந்தார். பின்னும் நெடுங்காலம் திருத்தொண்டின்வழிநின்று சிவபதத்தை அடைந்தார்.

## புகழ்த்துணைநாயனார்புராணம்.

புண்ணியர்கள்புகழழகார்திருப்புத்தூர்வாழ் புகத்துணையாரகத்தடிமைப்புநிதர்சின்னாள்
மண்ணிகழமழைபொழியாவற்காலத்தால் வருந்துடலநடுங்கிடவுமணிநீரோத்தி
யண்ணன்முடிபொழிகலசமுடிமேல்வீழ வயர்ந்தொருநாட்புலம்பவரனருளாலீந்த
நண்ணலருமொருகாசுப்படியால்வாழ்ந்து நலமலிசீரமருலகநண்ணினாரே.

செருவிலிபுத்தூரிலே ஆதிசைவர்குலத்திலே புகழ்த்துணைநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவாகமப்படி பரமசிவனை அருச்சனைசெய்துவருங் காலத்திலே, பஞ்சம் உண்டாயினமை

யால் பசிமிகப்பெற்றும் அருச்சனையை விடுவேன் அல்லேன் என்று அல்லும் பகலும் அருச்சிப்பார். ஒருநாள் திருமஞ்சனம் ஆட்டும்பொழுது மிகுந்த பசிநோயினால் கைசோர்ந்து கலசம் திருமுடிமேல்விழ தாம்திருவடியிலேவிழுந்து அயர்ந்து திருவருளினாலே நித்திரை அடைந்தார். அப்பொழுது பரமசிவன் அவருக்குச் சொப்பனத்திலேதோன்றி பஞ்சம் நீங்கும்வரைக்கும் உனக்குத் தினந்தோறும் இங்கே ஒவ்வொருகாசு வைப்போம் என்று அருளிச்செய்தார். புகழ்த்துணைநாயனார் விழித்து எழுந்து பீடத்தின்கீழே ஒருகாசு இருக்கக்கண்டு அதனைக் கைக்கொண்டு வாழ்ந்தார். அந்நாளைப்போல எந்நாளிலும் அப்படியே ஒவ்வொரு காசுபெற்று பஞ்சம்நீங்கியபின்னும் நெடுங்காலம் மெய்யடிமைத் தொழில்செய்து பரமசிவனது திருவடிநீழலை அடைந்தார்.

## கோட்புலிநாயனார்புராணம்.

குலவுபுகழ்நாட்டியத்தான்குடிவேளாளர் கோட்புலியார்குவித்துயர்த்தசெந்நெற்கூடு
நிலவணிவார்க்கமைத்தாணைநிறுத்தியொன்னார் நேர்மலைவார்திருவாணைநினையாதேநெற்
சிலமிடியாலழித்தபடியறிந்துவாளாற் சேர்ந்தபெருங்கிளைஞருடல்சிதறவீசி
யிலகுமொருகுழவியையுமெறிந்துநாத னெண்ணரியகருணைநிழலெய்தினாரே.

சோழநாட்டிலேநாட்டியத்தான்குடியிலேவேளாளர் குலத்திலே சிவபத்தியிற்சிறந்த கோட்புலிநாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் அரசனிடத்தில் சேனாதிபதி யுத்தியோகம் செய்து அதனாலே தமக்குக்கிடைக்கும் வேதனத்தைக் கொண்டு சிவாலயங்களுக்குத் திருவமுதின் பொருட்டு நெல்லுவாங்கிக் கட்டுதலாகிய திருப்பணியை நெடுங்காலம்செய்துவந்தார். இப்படி ஒழுகும்நாளிலே அரசனது ஏவலினால் போர்முனையிற்செல்ல வேண்டி சுவாமிக்குத் திருவமுதின் பொருட்டுத் தாம் திரும்பிவரும் வரைக்கும் வேண்டும் நெல்லைக்கட்டி தம்முடைய சுற்றத்தார்கள் எல்லாருக்கும் தனித்தனியே அதில் எடுத்துச் செலவழியா திருக்கும்படி ஆணையிட்டு போருக்குப்போயினார், சிலநாளிலே பஞ்சம் வந்தமையால் அந்தச்சுற்றத்தார்கள் நாங்கள் உணவின்றி இறப்பதிலும் சுவாமிக்குத் திருவமுதின்பொருட்டுக் கட்டப்பட்ட இந்நெல்லைக்கொண்டாயினும் பிழைத்து பின் கொடுப்போம் என்று நெல்லைக் கூடுகுலைத்து எடுத்துச் செலவழித்தார்கள், கோட்புலிநாயனார் அரசனுடையபகைஞரைப் போர்முனையிலேவென்று அவனிடத்திலே நிதிக்குவைபெற்று தம்முடைய ஊரை அடைந்து தம்முடைய சுற்றத்தார்கள் அதிபாதகம் செய்தமையை உணர்ந்து ஒன்றுசெய்யத் துணிந்து தம்முடைய வீட்டிலே புகுந்து, அவர்கள் எல்லாரையும் அழைப்பித்து தம்பேரோர் கடைகாக்க, சிவத்திரவியத்தை எடுத்துச் செலவழித்த அதிபாதகிகளாகிய தந்தைதாய் உடன்பிறந்தார் மனைவி முதலிய சுற்றத்தார் சமஸ்தரையும் பணிவிடைக்காரரையும் வாளினாலேதுணித்தார். அப்பொழுது தம்பேரோர் அங்கேபிழைத்த ஒரு ஆண்பிள்ளையைப்பார்த்து இப்பிள்ளை அவ்வன்னத்தை உண்டதன்று இது இக்குடிக்கு ஒருபிள்ளை இதனைக் கொல்லா தருள்செய்யும் என்று வேண்ட, கோட்புலிநாயனார் இது இந்நெல் உண்டவளுடைய முலைப்பாலை உண்டது என்று அதை எடுத்து எறிந்து வாளினாலே துணித்தார். உடனே பரமசிவன் கோட்புலிநாயனாருக்குத் தோன்றி அன்பனே உன் கைவாளினாலே தங்கள் பாவத்தினின்றும் நீங்கிய உன் சுற்றத்தார்கள் சுவர்க்கத்தை அடைய நீ இந்தப்படியே நம்முடன் வருவாய் என்று கருணைசெய்து எழுந்தருளினார்.



கோட்புலிநாயனார்.



பத்தராய்ப்பணிவார்.



பாமவுணயேபாடுவோர்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பத்தாவது

# பத்தராய்ப்பணிவார்சருக்கம்.

## பத்தராய்ப்பணிவார்புராணம்.

தொண்டரடித்தொழல்பூசைத்தொழின்மகிழ்தலழகார் அிளங்கியவர்ச்சனைபுரிதலொருகுதிநியமங்கள்
கொண்டபணிதிருவடிக்கேகொடுத்தலீசன் குணமருவுமருங்கதையைக்குலவிக்கேட்டு
மண்டிவிழிதுளும்பன்மயிர்சிலிம்பலுன்னன் மருவுதிருப்பணிகாட்டிவருபவாங்கி
யுண்டிகொளாதொழிதலெனவிவையோரெட்டு முடையரவர்பத்தரெனவுரைத்துளாரே.

சிவனடியார்களைக் கண்டால் அவர்களுடைய சாதியை விசாரியாமல் அவர்களைச் சிவன் எனப் பாவித்து நமஸ்கரித்து குதிகுதித்து கொண்டாடி மனமகிழ்ந்து அத்தியந்த ஆசையுடன் பசுவுக்குப்பின் கன்று அணைதல்போல அணைந்து அவர்களுடன் பேசுங்காலத்து அவர்களைப் பேசும் பூச்சிய வசனமும் தங்களைப்பேசும்நைச்சியவசனமும் தப்புமோ என்னும் கூச்சத்துடனேபேசி அவர்களுக்கு வேண்டும் கருமமே தங்களுக்கு வேண்டும் கருமமாகச் செய்தலும் பரமசிவனை மிகுந்த அன்பினோடு எவ்விடத்தும் யாவர்களும் விதிப்படி அருச்சித்தலைக் கண்டால் மனமகிழ்தலும், பரமசிவனையும் அவருடைய அடியார்களையும் தெவிட்டாத விருப்பத்தோடு சைவாகம விதிப்படி அருச்சித்தலும், தங்கள் உடம்பினாலே செய்யும் புண்ணியங்கள் எல்லாவற்றையும் பரமசிவனது திருவடிக்கே கொடுத்தலும், சிவசரித்திரங்களையே அன்பினோடு கேட்டலும், பரமசிவனையே வணங்கி மனம் நெக்குநெக்குருகிச் சரீரம் நடுக்குற்று உரோமப் புளகிதம் உண்டாக மதகினிற்புறப்படும்ஜலம்போலஆனந்தபாஷ்பம்பொழியநாத்தழும்பப்பரவசமாதலும்நின்றாலும்இருந்தாலும்கிடந்தாலும்நடந்தாலும் உண்டாலும்துயின்றாலும்விழித்தாலும் பரமசிவனை ஒருபோதும் மறவாதிருத்தலும் சிவவேடம் தரித்துத் திருத்தொண்டர்போல் நடித்து அதனால் சீவனம்செய்யாமையும் ஆகிய இவ்வெட்டினையும் உடையவர்களே பத்தராய்ப் பணிவார் என்று சொல்லப் படுவார்கள்.

## பரமனையேபாடுவார்புராணம்.

அருந்தமிழால்வடகலையாலருளாலொன்றாலறிவுநெறிமருவுமருங்கவிகள்யாவுந்
திருத்தியவானவர்பணியமன்றுளாடுந்தேவர்பிரான்கழலிணையேசேரவோதி
விருத்திடுநாவுடையபயன்மேவினோர்தாமேலானேமெனமகிழ்ந் துவிழிநீர்சோரப்
பரிந்தருளாற்பரமனையேபாடவல்லபான்மையாரெமையாளுமேன்மையாரே.

சம்ஸ்கிருதம் தமிழ்என்னும் பாடைகளைக்கற்று அவைகளுக்குஉரிய இலக்கணங்களிலே மகாபாண்டித்தியம் உடையர்களாகி ஜனனமரணப்பட்டு உழல்கின்ற பசுக்களாகிய பிரம விட்டுணுமுதலிய தேவர்களையும் மனிதர்களையும் மதித்து அவர்களுக்குக் கர்மானுகுணமாகக்கிடைத்த அநித்தியமும் துக்கமுமாகிய வாழ்வை மெய்யெனக்கருதி அவர்களைப்பாடி வாணாளை வீணாளாகப்போ

க்காது,பதியாகிய பரமசிவனது மகிமையைவே தாகமபுராணவழியால் உள்ளபடி அறிந்துஅவரு டைய திருவடிகளை அடைந்துமனங்கசிந்துருக உரோமம் சிலிர்ப்ப ஆனந்த அருவிசொரிய அவ ரையேமெய்யன்போடு பாடிநாம் சுவதந்திரராகிய பரமசிவனுக்கே ஆளாயினேம் பரதந்திரராகிய மற்றுள்ளோர்களில் ஒருவருக்கும் குடியல்லேம். அவர்கள் எல்லாருக்கும் மேலானேம் என்று இறுமாப்பு அடைந்து திரிகின்றவர்களே பரமனையேபாடுவார் என்று சொல்லப் படுவார்கள்.

## சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்புராணம்.

பாரணவும்புலனந்தக்கரணமொன்றும்படராமேநடுநாடிபயிலுநாதங்
காரணபங்கயன்முதலாமைவர்வாழ்வுங்கழியுநெறிவழிபடவுங்கருதிமேலைப்
பூரணமெய்ப்பரஞ்சோதிப்பொலிவுநோக்கிப்புணர்ந்தணைந்தசிவாநுபவபோகமேவுஞ்
சீரணவுமவரன்றேவெம்மையாளுஞ்சித்தத்தைச்சிவன்பாலேவைத்துளாரே.

உச்சுவாச நிச்சுவாசம் இரண்டையும் அடக்கி சுழுமுனைமார்க்கத்திலே பிராணவாயுவை நிறுத்தி விஷயங்களின் வழிமனசைப்போகவொட்டாமல் திருப்பி ஒருகுறிப்பிலே நிறுத்தி, மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அனாகதம் விசுத்திஆக்கினை என்னும் ஆறாதாரங்களின் அந்தர்மாதிருகாக்கிரமத்தை அறிந்து அவ்வவ்வாதாரங்களின் அதிதேவதைகளைத்தியானித்து அவ்வாறாதாரங்களினும் அசபாசத்தி சிவான்மிகையாய்நிற்கும் முறைமையைப்பார்த்து மூலாதாரந்தொடங்கி விநாயகர் முதலாகிய தேவதைகளைப்பொருந்திஅபிமுகம் பண்ணிக்கொண்டு ஆறாதாரத்துக்கும் மேலாகிய பிரமரந்திரமளவும் அசபையுடன்சென்றணைந்து அந்தப்பிரமரந்திரத்திலே அதோமுகமாய்ச் சகஸ்ரதளமாய் இருக்கிற தாமரைமுகையைச் சோதிசோதிபதோச்சாரணத்தாலே உதிக்கும் சிவார்க்கனாலே அலரச்செய்து அந்தத்தாமரைப்பூவின் கேசராக்கிரத்திலே உள்ள சந்திரமண்டலத்தை ஆகுஞ்சனஞ்செய்தலினாலே மூலாக்கினியை அக்கினிபீசாக்கர உச்சாரணத்தினாலே எழுப்பி நாடிசக்கரத்தைப்பேதித்து அவ்வக்கினியினாலே சந்திரமண்டலத்தை இளகப்பண்ணி, அந்தஅமிர்தத்தைச் சர்வநாடிவழியாகநிரப்பி, அவ்விடத்தில் உண்டாகிய சுகோதயத்தில் அந்தமயமான ஞானாமிர்த அவத்தையை அடைந்து நின்று,சோமசூரியாக்கினிப் பிரகா சாதிகளாகிய பிரத்தியேகப் பிரகாசங்கள்எல்லாம் சூரியோதயத்திலே நக்ஷத்திராதிப்பிரகாசங்கள் அடங்கினாற்போலத் தன்னிடத்தடங்கச் சர்வதோமுகமாய் ஸ்வயபரப்பிரகாசகமாய் இருக்கின்ற பூரணப் பிரகாசத்தைப்பாவிக்கின்றவர்களே சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார் என்று சொல்லப்படுவார்கள்.

## திருவாரூர்ப்பிறந்தார்புராணம்.

பொங்கியமாதவமுடையார்வருணநான்கிற்பொருந்தினர்களல்லாதபுகழினுள்ளார்
சங்கையிலாவருந்தவமுன்புரிந்தாரிங்குச்சார்விலாரிறைவனருள்சார்தலாலே
கங்கைவாழ்சடைமுடியானருளைநீங்காக்கணநாதரெனவாழுங்கருத்தர்கன்னிச்
செங்கண்வரால்வளர்வாவிதிகழுமாரூர்ச்சிறந்துளாரெமையாளப்பிறந்துளாரே.

பூர்வஜன்மத்திலே செய்த புண்ணியத்தினாலே திருவாரூர் என்னும் சிவஸ்தலத்திலே சைவமரபினராய்ப் பிறந்தவர்கள்பிராமணர் க்ஷத்திரியர்வைசியர் சூத்திரர் என்னும் நான்குவருணத்தா ராயினுஞ்சங்கர சாதியாராயினும் பரமசிவனுடைய திருவருளை அடைதலால் சிவகணநாதர்களாய்இருப்பர்கள் திருவாரூர்ப்பிறந்தார் எல்லாரும் சிவகணநாதர்கள் என்றுசிவனே நமிநந்தியடிகளுயனாருக்கு அருளிச்செய்தனர் அந்நாயனாரும் அவர்கள் எல்லாரும் சிவகணநாதவடிவினராய்த் தோன்றக்கண்டனர்.



சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்.



திருவாரூர்ப்பிறந்தார்.



முப்பொழுதுந் திருமேனி தீண்டுவார்.



முழுநீறுபூசிய முனிவர்.



அப்பாலுமடிச்சார்ந்தார்.

## முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்புராணம்.

செப்பலருந்தவமுடையசெம்மையாளர்சிறுகாலேமலர்வாவிதிகழமூழ்கி
யொப்பிறுநீறணிந்துநியதியாற்றியோவாமேயைந்தெழுத்துமுறைத்துமேன்மை
தப்பில்சிவாகமவிதியாலின்பாலன்பாந்தன்மையானன்மையாந்தகையாரொன்று
முப்பொழுதுந்திருமேனிதீண்டவல்லமுறைமையார்பிறவிதெறுந்திறமையாரே.

சிருட்டிகாலத்திலே அநாதிசைவராகிய சதாசிவமூர்த்தியுடைய சத்தியோசாதம்வாமதேவம் அகோரம் தற்புருடம் ஈசானம் என்னும் பஞ்சவத்திரத்தினின்றும் தோன்றிய கௌசிகர் காசிபர் பாரத்துவாசர் கௌதமர் அகத்தியர் என்னும் பஞ்சரிஷிகோத்திரத்திலே ஜனித்த சிவப்பிராமணர்கள் ஆதிசைவர் என்று சொல்லப்படுவார்கள். அவர்களுள் சமயதீக்ஷை விசேஷதீக்ஷை நிர்வாணதீக்ஷை ஆசாரியாபிஷேகங்களைப் பெற்றவர்களே சர்வாதிகாரிகள்என்றும், உத்தமோத்தமசிவாசாரியர்கள்என்றும், சிவாகமங்கள்செப்பும் பரார்த்தப்பிரதிட்டை பரார்த்தபூசைகள் செய்தற்கு அவர்களே உரியவர்கள். மற்றையர்கள் உரியர்கள் அல்லர்அதனால் அவர்களேசிவாகம வியுற்பன்னர்களாகி, கிருதகிர்த்தியராய் முப்பொழுதினும் சிவலிங்கத்தை அருச்சிப்பார்கள். ஆதலால், அவர்களே முப்பொழுதுந்திருமேனி தீண்டுவார்என்றுசொல்லப்படுவார்கள்.

## முழுநீறுபூசியமுனிவர்புராணம்.

கற்பமனுகற்பமுபகற்பமென்றிக்கடனவிணைந்ததிருநீறுங்கனற்கணீறும்
பொற்புடையவராஞ்சானங்கியாறுபொல்லாதபூமியெதிர்புனைதலாகா
வற்புதமாந்திரிபுண்டமதியின்பாதியகிலாங்கந்தீபமிகுமழகார்வட்ட
முற்பொலியவுடலணியுமுறையாரன்றேமுழுநீறுபூசவல்லமுநிவர்தாமே.

உற்பத்தியினாலே கற்பம் அனுகற்பம் உபகற்பம் என மூவகைப்படும் விபூதியை ஆயினும், நித்தியாக்கினியில் எடுத்த விபூதியை ஆயினும், சிவன் முன்னும் அக்கினிமுன்னும் குருமுன்னும் அசுத்தநிலத்தும் வழிநடக்கும்போதும் பூசாது உத்தூளனம் திரிபுண்டரம் பிறைவடிவம் முக்கோணம் வட்டம் ஆகச்சிவாகமவிதிப்படி அன்போடு பூசுகின்றவர்கள் முழுநீறுபூசிய முனிவர் என்று சொல்லப்படுவார்கள்.

## அப்பாலுமடிச்சார்ந்தார் புராணம்.

தாராருமூவேந்தர்பயிலுந்தொல்லைத்தமிழ்நாட்டப்புறத்திறைவன்சரணஞ்சார்ந்த
சீராருந்தொண்டர்களுமண்டரேத்துந்திருத்தொண்டத்தொகையருளாற்செப்புங்காலத்
தேராருந்தொடையிலுறுதிப்பாலப்பாலெந்தைபிரானடியடைந்தவியல்பினோரு
மாராதகாதலுடையவர்களன்றேவப்பாலுமடிச்சார்ந்தவடியார்தாமே.

சேரசோழபாண்டியர் என்னும் மூவேந்தருக்கும் உரிய தமிழ்நாட்டுக்கு அப்புறத்திலே பரமசிவனுடைய திருவடிகளை அடைந்தவர்களும் சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய திருத் தொண்டத் தொகையிலே சொல்லப்பட்ட திருத்தொண்டர்களுடைய காலத்துக்கு முன்னும்பின்னும் பரமசிவனுடைய திருவடிகளை அடைந்தவர்களும் அப்பாலு மடிச்சார்ந்தார் என்று சொல்லப்படுவார்கள்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பதினோராவது

# மன்னியசீர்ச்சருக்கம்.

## பூசலார்நாயனார் புராணம்.

பொருவருந்தண்டகநாட்டுநின்றவூர்வாழ்பூசுரர்கோப்பூசலார்புந்தியாலே
யிருநிதியந்தேடியாலயமுமாக்கியெழுந்தருளப்பண்ணுவதாவெண்ணுங்காலை
பரனைதனைக்காடவர்கோற்கருளமன்னனந்நகரமணைந்தவ்வாறறிந்துதாழ
விரவுமநக்கோயிலுறவிருத்தியங்கண்வேண்டுவகொண்டிறைஞ்சியருண்மேவினாரே.

தொண்டை மண்டலத்திலே திருநின்றவூரிலே பிராமணர்குலத்திலே பூசலார்நாயனார் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவனடியார்களுக்குவேண்டுவனவற்றை எப்படியும் தேடிக்கொடுத்து, பரமசிவனுக்கு ஓர் ஆலயம்கட்டுதற்கு விரும்பி எங்கும் வருந்திப் பொருள்தேடி அற்பமும் கிடையாமையால் நைந்து, இதற்குயாதுசெய்வேன் என்று ஆலோசித்து, மனோபாவனையினாலே ஆலயம்கட்டத்துணிந்து மனசினாலே அதற்குவேண்டும் திரவியங்களையும் உபகரணங்களையும் சிற்பரையும்தேடி, சுபதினத்திலே அடிநிலைபாரித்துஇரவிலும் நித்திரைஇன்றி நெடுநாட்கூடக்கோயில் கட்டிமுடித்து பிரதிட்டை செய்தற்குஉரியசுபதினத்தை எதிர்பார்த்துக்கொண் டிருந்தார் அதுநிற்க காடவராஜர் காஞ்சீபுரத்திலே ஒருசிவாலயம்கட்டுவித்தார். அதிலே பிரதிட்டை செய்யநியமித்தசுபதினத்துக்கு முதற்றினத்திலே பரமசிவன் பூசலார் நாயனாருடைய அன்பைவிளக்கும்பொருட்டு அவ்வரசருக்குச் சொப்பனத்திலேதோன்றி நின்றவூரில் இருக்கின்றபூசலன்என்பவன்நமக்குஒரு கோயில்கட்டி யிருக்கின்றான் அதிலே நாளைக்கு நாம்போவோம் உன்கோயிலில் பிரதிட்டையை நாளைஒழித்து பின்கொள்வாய்என்று அருளிச்செய்து மறைந்தருளினார். காடவராஜர் விழித்து எழுந்து அந்தப் பூசலார்நாயனாரை வணங்குதற்கு விரும்பி நின்றவூரை அடைந்து, அங்குவந்தார்சிலரைநோக்கி பூசலார்நாயனார்கட்டிய கோயில் எவ்விடத்தது என்றுவினாவ அவர்கள் அவர் இங்கே கோயில்கட்டிற்றிலர் என்றார்கள் உடனேகாடவராஜர் அவ்வூர்ப் பிராமணர்களை அழைப்பித்துபூசலார்நாயனார் என்பவர் யாவர் என்றுவினாவ, அவர்கள் எல்லாரும் அவர் பிராமணர் இவ்வூரார்என்றுசொல்லி அவரை அழைத்தற்குப் புறப்பட்டார்கள் அப்பொழுது காடவராஜர் அவரை அழைக்க ஒட்டாமல் தாமே அவரிடத்திற்சென்றுஅவரை வணங்கி சுவாமீ நீர் ஒரு சிவாலயம் கட்டியிருக்கிறீர் என்றும் பிரதிட்டை செய்யும்நாள் இன்றுஎன்றும் பரமசிவனால் அறிந்து உம்மைத்தரிசித்து வணங்குதற்குவந்தேன் அவ்வாலயம்யாது என்று விண்ணப்பம் செய்ய பூசலார்நாயனார் மருண்டு நோக்கி, பரமசிவன் என்னைஒருபொருளாகக்கொண்டு அருளிச்செய்தது நான்திரவியம் இல்லாமையால் மனோபாவனையினாலே கட்டிய கோயிலையே என்றுநினைந்து, நிகழ்ந்ததை எடுத்துச்சொன்னார். காடவராஜர் அதைக்கேட்டுவியந்து அவரைச்சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து ஸ்தோத்திரம்செய்து அனுமதிபெற்றுக்கொண்டு தமது ஊருக்குத்திரும்பிவிட்டார். பூசலார்நாயனார் தாம்மனசினாலே கட்டிய கோயிலிலே சுபமுகூர்த்தத்திலே பரமசிவனைப் பிரதிட்டைசெய்து நெடுங்காலம் பூசைசெய்துகொண்டிருந்துசிவபதத்தை அடைந்தார்.



பூசலார்நாயனார்.



நேசநாயனார்.



கோசசெங்கட்சோழநாயனார்.

## மங்கையர்க்கரசியார்புராணம்.

மங்கையர்க்குத்தனியரசிவளவர்குலக்கொழுந்துமன்னவர்சூழ்தென்னவர்க்குமாதேவியார்மண்
சங்கைகெடவமண்சமயஞ்சாடவல்லசைவசிகாமணிஞானத்தமிழிற்கோத்த
பொங்குதிருவருளுடையபோதவல்லிபொருவினெடுமாறனார்புயமேல்வாழுஞ்
செங்கலசமுலையாடனருளாலின்பஞ்சேர்ந்தவளைப்புகழ்ந்தடியேன்வாழ்ந்தவாறே.

மதுரையில்இருந்த நெடுமாறநாயனாருக்கு மனைவியார் சோழராஜாவுடைய புத்திரியாராகிய மங்கையர்க்கரிசியார் அவர் சமயகுரவராகிய திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளால் திருப்பதிகத்திலே சிறப்பித்துப் பாடப்பட்டவர் அந்தப்பரமாசாரியருடைய திருவருளினாலே நெடுங்காலம் தம்முடையநாயகருக்குச் சைவவழித் துணையாகி பாண்டிநாடெங்கும் சைவத்திருநெறியைப் பரிபாலனம்செய்து கொண்டிருந்து அந்நாயகரோடு சிவபதத்தை அடைந்தார்.

## நேசநாயனார்புராணம்.

சாலியர்கோக்காம்பிலித்தலைவர்மேன்மைதாவாதபுகழ்நேசர்தஞ்சொலென்றுங்
கோலியவைந்தெழுத்தோதிச்சிந்தையுன்னிக்கொண்டபொருளன்பர்கொளக்கொடுத்துவாழ்வார்
சிலமிகுந்திருத்தொண்டர்க்குடையுங்கீளுந்திருந்தியவெண்கோவணமுஞ்சேரவீந்து
பாலனையவொளிநீற்றூன்பாதமேத்திப்பரலோகமுழுதாண்டபான்மையாரே.

காம்பிலிநகரத்திலே சாலியர்குலத்துக்குத்தலைவராகிய நேசநாயனார்என்பவர் ஒருவர்இருந்தார். அவர் தம்முடைய மனத்தின்செய்கையைப் பரமசிவனுடைய திருவடிக்குஆக்கி, வாக்கின்செய்கையை ஸ்ரீபஞ்சாக்ஷரத்துக்குஆக்கி, கையின் செய்கையைச் சிவனடியார்களுக்குஆக்குவாராகி வஸ்திரமும் கீளும் கோவணமும் நெய்து தம்மிடத்தில் வரும் சிவனடியார்களுக்கு இடையறாதுகொடுத்து நாடோறும் அவர்களை வணங்கித் துதித்துக் கொண்டிருந்து சிவபதத்தை அடைந்தார்.

## கோச்செங்கட்சோழநாயனார்புராணம்.

வெண்ணாவலிறைக்கொளிநூற்பந்தர்செய்தவியன்சிலம்பியதுவழித்தவெள்ளானைக்கை
புண்ணாடிக்கடித்தவுடலொழியச்சோழனுயர்குலத்துச்சுபதேவன்கமலத்தோங்கும்
பெண்ணாகியவள்வயிற்றில்வைகிச்செங்கட் பெருமானாய்த்தென்னவராய்ப்பெருங்கோவில்பலவுங்
கண்ணார்வித்துயர்தில்லைமறையவர்க்குமுறையுள்கனகமயமாக்கியருள்கைக்கொண்டாரே.

சோழமண்டலத்திலே சந்திரதீர்த்தத்தின்பக்கத்திலே ஒருசோலை இருந்தது அதிலேநின்ற ஒரு வெண்ணாவன் மரத்தின்கீழே ஒருசிவலிங்கம் வெளிப்படலும் ஒருவெள்ளானை அதைக்கண்டு நாடோறும் புழைக்கையினால் தீர்த்தம் முகந்துஆட்டி புஷ்பங்களைச்சாத்தி வழிபட்டு ஒழுகும்அதனால் அந்தஸ்தலத்துக்குத் திருவானைக்கா என்று பெயராயிற்று அறிவினையுடைய ஒருசிலந்தி அந்தச் சிவலிங்கத்தின்மேல் சருகுஉதிராவண்ணம் தன்வாய்நூலினாலேமேற்கட்டிசெய்தது, சிவலிங்கத்தை

வணங்கவந்தவெள்ளானை அதைக்கண்டு அது அநுசிதம்என்று நினைந்து அதைச் சிதைக்க சிலந்தி மீளவும்மேற்கட்டிசெய்தது, வெள்ளானை மற்றநாள் அதையும் சிதைத்தது. அதுகண்டுசிலந்தி, எங்கள் சுவாமிமேல் சருகுஉதிராவண்ணம் நான்வருந்திச் செய்த மேற்கட்டியை இது அழிக்கலாமா என்று கோபித்து, வெள்ளானையினது புழைக்கையினுள்ளேபுகுந்துகடிக்க வெள்ளானைகையைநிலத்திலே மோதிக்கொண்டுவிழுந்துஇறந்தது. கையைமோதியபோது அதனுள்ளேபுகுந்தசிலந்தியும்இறந்தது, சுபதேவன்என்னும் சோழமகாராஜன் தன் மனைவியாகிய கமலவதியுடன் சிதம்பரத்தை அடைந்து, சபாநாயகரை உபாசனைசெய்துகொண்டு இருக்கும்நாளிலே, கமலவதி புத்திரபாக்கியம் இன்மையால் வரம்வேண்ட அந்தச்சிலந்தி திருவருளினாலே அவளுடையவயிற்றிலே மகவாய்வந்து அடைந்தது, கமலவதிக்குப்பிரசவகாலம் அடுத்தபொழுது, சோதிடர்கள், இப்பிள்ளைஒருநாழிகை கழித்துப் பிறக்குமாகில், முப்புவனங்களையும்அரசாளும் என்றார்கள். கமலவதி, என்பிள்ளைஇப்போது பிறவாமல்ஒருநாழிகை கழித்துப் பிறக்கும்படி என்னைத்தலைகீழாகத் தூக்குங்கள் என்றுசொல்ல அங்குள்ளவர்கள் அங்ஙனங் கட்டித்தூக்கி, சோதிடர்கள் குறித்தகாலமணையக்கட்டவிழ்த்துவிட்டார்கள் கமலவதி, இறவாதொழிந்துபெற்றெடுத்தேன் கோச்செங்கண்ணனோஎன்று சொல்லிபிள்ளையைப்பெற்றுஇறந்தாள் சுபதேவன் அப்புதல்வரை வளர்த்துமுடிசூட்டி அரசை அவரிடத்தில் ஒப்பித்து, தான் தவஞ்செய்து சிவலோகத்தை அடைந்தான் கோச்செங்கட்சோழர், பரமசிவனது திருவருளினாலே பூர்வசன்மவுணர்ச்சியோடு பிறந்துசைவநெறிதழைக்க அரசியற்றுவாராகி சிவாலயங்கள் பலவற்றைக் கட்டுவிக்கத்தொடங்கினார். திருவானைக்காவிலே தாம் முன்னே அருள்பெற்றதைஅறிந்து அங்கே வெண்ணாவலுடன் பரமசிவனுக்குக் கோயில்கட்டுவித்தார். மந்திரிகளைஏவி சோழநாட்டில் வெவ்வேறிடங்களிலே சிவாலயங்கள்கட்டுவித்து அவ்வாலயங்கள்தோறும் நிமிந்தங்கள் அமைத்தார். பின்பு சிதம்பரஸ்தலத்தை அடைந்து சபாநாயகரைத் தரிசித்துவணங்கி, தில்லைவாழந்தணர்களுக்குத் திருமாளிகைகள் கட்டுவித்துப் பின்னும் பலதிருத்தொண்டுகளைச் செய்துகொண்டிருந்து சபாநாயகருடைய திருவடிநீழலை அடைந்தார்.

## திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்புராணம்.

பிறங்கெருக்கத்தம்புலியூர்வாழும்பேரியாழ்பேணுதிருநீலகண்டப்பெரும்பாணனார்சீர்
நிறந்தருசெம்பொற்பலகையாலவாயினிமலன்பாற்பெற்றாரூர்நேர்ந்துசிவன்வாயி
றிறந்தருளும்வடதிசையேசேர்ந்துபோற்றித்திருஞானசம்பந்தர்திருத்தாள்வாழ்த்தி
யறந்திகழுந்திருப்பதிகம்யாழிலேற்றியாசிறிருப்பெருமணஞ்சேர்ந்தருள்பெற்றாரே.

சோழநாட்டிலேதிருவெருக்கத்தம்புலியூரிலே திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார் என்பவர் ஒருவர்இருந்தார் அவர் பரமசிவனுடைய திருப்புகழை யாழில்இட்டுப்பாடுவாராகி சோழநாட்டில்உள்ளசிவஸ்தலங்களைவணங்கிக்கொண்டுசென்று பாண்டி நாட்டிற்சேர்ந்து மதுரையில் இருக்கின்ற சொக்கநாதசுவாமியினுடைய கோயில்வாயிலைஅடைந்து நின்றுபரமசிவன்மேலனவாகிய பாணிகளை யாழில்இட்டுவாசித்தார் சொக்கநாதசுவாமி அதனைத் திருவுள்ளத்துக்கொண்டு அன்றிரவிலேதம்முடைய அடியார்கள் எல்லாருக்கும் சொப்பனத்திலே தோன்றி ஆஞ்ஞாபிக்க அவர்கள் மற்றநாள் திருநீலகண்டப்பெரும்பாணரைச்சுவாமிக்குத் திருமுன்பே கொண்டுவந்தார்கள் திருநீலகண்டப்பெரும்பாணர் அது சுவாமியுடைய ஆஞ்ஞையென்றுதெளிந்து திருமுன்பேஇருந்துயாழ்வாசித்தார். அப்பொழுது இந்தப்பாணர் அன்பினோடு பாடுகின்றயாழ் பூமியிலேஉள்ள சீதம்தாக்கினால் வீக்குஅழியும் ஆதலால் இவருக்குப்பொற்பலகை இடுங்கள் என்று ஆகாயத்தினின்றும் ஓர்அசரீரிவாக்கு எழுந்தது. அதைக்கேட்டஅடியார்கள் பொற்பலகையை இட. திருநீலகண்டப் பெரும்பாணர் அதில் ஏறி, யாழ்வாசித்தார். பின்பு பலதலங்களை வணங்கிக்கொண்டு திருவாரூரிற்சேர்ந்து, கோயில்வாயிலை அடைந்து. யாழ்வாசிக்க, பரமசிவன் வடதிசையிலே ஒருவாயில்வகுக்க திரு



திருநீலகண்டயாழ்ப்பாணநாயனர்.



சடையநாயனார். இசைஞானியார்.

நீலகண்டப்பெரும்பாணர் புகுந்து வன்மீகநாதரை வணங்கினார். நெடுநாள் ஆயினபின் அவ்விடத்தினின்றும் நீங்கி, சீர்காழியில் வீற்றிருக்கின்றசமயகுரவராகியதிருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகளுடையதிருவடிகளைஅடைந்துவழிபட்டு அவரை ஒருபொழுதும்பிரியாது, அவர்பாடியருளும்திருப்பதிகங்களை யாழில்இட்டுவாசிக்கும் பெரும்பேற்றைப் பெற்று, திருநல்லூர்ப்பெருமணத்திலே அவருடனேசிவபதத்தைஅடைந்தார்.

## சடையநாயனார்புராணம்.

சங்கையிலாவரன்மறையோர்நாவலூர்வாழ்தவரதிபர்தம்பிரான்றோழராய
வெங்கள்பிரான்றவநெறிக்கோரிலக்குவாய்த்தவிசைஞாநியார்தநயரொண்ணார்சிங்க
மங்கையர்கடொழும்பரவைமணவாளநம்பிவந் துதிக்கமாதவங்கள்வருந்திச்செய்தார்
வெங்கணராவிளங்குமிளம்பிறைசேர்சென்னிவிடையினாருள்சேர்ந்தசடையனாரே.

திருநாவலூரிலே ஆதிசைவர்குலத்திலே, சடையநாயனார்என்பவர்ஒருவர் இருந்தார். அவர்உலகமெல்லாம் மெஞ்ஞானஒளியைப்பெற்று உய்யும்படிசமயகுரவராகிய சுந்தரமூர்த்திசுவாமிகளைப் புத்திரராகப்பெற்ற பெரும்பேற்றை உடையவர்.

## இசைஞாநியார்புராணம்.

நாவற்றிருப்பதிக்கோர் சல்வச்சைவநாயகமாஞ்சடைனார்நயந்தவின்பப்
பூவைக்குலம்மடந்தைபொற்பார்கொம்புபுநிதமிகுநீறணிந்துபோற்றிசெய்தே
யாவிற்றிகழுந்தலைவன்வலியவாண்டவாரூராவதரிக்கவருந்தவங்கள்புரிந்தார்
யாவர்க்குமெட்டாதவிசைந்தவின்பவிசைஞானியெனஞாநமெளிதாமன்றே.

சடையநாயனாருடைய மனைவியார் இசைஞாநியார் என்பவர், எம்பிரான்றோழராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் பெற்றருளிய அவருடைய பெரும் புகழைச்சிறியேனுடைய புன்மொழியினாலேபுகழமுடியுமோ. முடியாது.

## திருத்தொண்டர்புராணம்முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருத்தொண்டர் குருபூசை.

அறுபத்துமூன்று நாயன்மார்களும் திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசகசுவாமிகளும் சிவபதம் அடைந்த மாதமும் நக்ஷத்திரமும் மேலே உணர்த்தப்படும் சைவசமயிகள் யாவரும் அவர்களுக்கு வருடந்தோறும் அவரவர் அடைந்த மாத நக்ஷத்திரத்திலே சிவாகமவிதிப்படி அன்போடு குருபூசை செய்தல்வேண்டும் அவர்கள் அனைவருக்கும் செய்தற்குச் சத்தியில்லாதவர்கள் அவர்களுள் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருநாவுக்கரசுசுவாமிகள் சுந்தரமூர்த்திசுவாமிகள் மாணிக்கவாசகசுவாமிகள் என்னும் நால்வருக்கு மாத்திரம் ஆயினும் செய்தல்வேண்டும் அவர்கள் நால்வரும் பல அற்புதங்களைச்செய்து பரசமயங்களை வென்று சற்சமயமாகிய சைவசமயத்தை ஸ்தாபனம்பண்ணி, ஆன்மாக்கள் உய்யும்பொருட்டுத் தமிழ்வேதம் செய்தருளி சமயகுரவர்கள் என நிற்றலால் அவர்களுக்குக் குருபூசை செய்வது மிக அவசியமாம்.

சிவானந்தமாலை - ரு - ம், திருவெண்பா.

சொற்கோவுந் தோணிபுரத் தோன்றலுமென் சுந்தரனுஞ்
சிற்கோலவாதவூர்த் தேசிகனு - முற்கோலி
வந்திலரே னீறெங்கே மாமறை நூலெங்கே
யெந்தைபிரா னஞ்செழுத் தெங்கே.

| | அடியார்பெயர். | மாதம். | நக்ஷத்திரம். |
|---|---|---|---|
| க | திருநீலகண்டநாயனார் | தைமாதம் | விசாகநக்ஷத்திரம் |
| ௨ | இயற்பகைநாயனார் | மார்கழிமாதம் | உத்திரநக்ஷத்திரம் |
| ௩ | இளையான்குடிமாறநாயனார் | ஆவணிமாதம் | மகாநக்ஷத்திரம் |
| ௪ | மெய்ப்பொருணாயனார் | கார்த்திகைமாதம் | உத்திரநக்ஷத்திரம் |
| ரு | விறன்மிண்டநாயனார் | சித்திரைமாதம் | திருவாதிரைநக்ஷத்திரம் |
| சா | அமர்நீதிநாயனார் | ஆனிமாதம் | பூரநக்ஷத்திரம் |
| எ | எறிபத்தநாயனார் | மாசிமாதம் | அத்தநக்ஷத்திரம் |
| அ | ஏனாதிநாதநாயனார் | புரட்டாசிமாதம் | உத்திராடநக்ஷத்திரம் |
| கூ | கண்ணப்பநாயனார் | தைமாதம் | மிருகசீரிடநக்ஷத்திரம் |
| ௰ | குங்குலியக்கலயநாயனார் | ஆவணிமாதம் | மூலநக்ஷத்திரம் |
| ௰க | மானக்கஞ்சாறநாயனார் | மார்கழிமாதம் | சுவாதிநக்ஷத்திரம் |
| ௰௨ | அரிவாட்டாயநாயனார் | தைமாதம் | திருவாதிரைநக்ஷத்திரம் |
| ௰௩ | ஆனாயநாயனார் | கார்த்திகைமாதம் | அத்தநக்ஷத்திரம் |
| ௰௪ | மூர்த்திநாயனார் | ஆடிமாதம் | கார்த்திகைநக்ஷத்திரம் |
| ௰ரு | முருகநாயனார் | வைகாசிமாதம் | மூலநக்ஷத்திரம் |
| ௰சா | உருத்திரபசுபதிநாயனார் | புரட்டாசிமாதம் | அச்சுவினிநக்ஷத்திரம் |

| | அடியார்பெயர். | மாதம். | நக்ஷத்திரம். |
|---|---|---|---|
| ௰௭ | திருநாளைப்போவார்நாயனார் | புரட்டாசிமாதம் | உரோகிணிநக்ஷத்திரம் |
| ௰௮ | திருக்குறிப்புத்தொண்டநாயனார் | சித்திரைமாதம் | சுவாதிநக்ஷத்திரம் |
| ௰௯ | சண்டேசுரநாயனார் | தைமாதம் | உத்திரநக்ஷத்திரம் |
| ௨௰ | திருநாவுக்கரசுசுவாமிகள் | சித்திரைமாதம் | சதயநக்ஷத்திரம் |
| ௨௧ | குலச்சிறைநாயனார் | ஆவணிமாதம் | அனுடநக்ஷத்திரம் |
| ௨௨ | பெருமிழலைக்குறும்பநாயனார் | ஆடிமாதம் | சித்திரைநக்ஷத்திரம் |
| ௨௩ | காரைக்காலம்மையார் | பங்குனிமாதம் | சுவாதிநக்ஷத்திரம் |
| ௨௪ | அப்பூதிநாயனார் | தைமாதம் | சதயநக்ஷத்திரம் |
| ௨௫ | திருநீலநக்கநாயனார் | வைகாசிமாதம் | மூலநக்ஷத்திரம் |
| ௨௬ | நமிநந்தியடிகணாயனார் | வைகாசிமாதம் | பூசநக்ஷத்திரம் |
| ௨௭ | திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் | வைகாசிமாதம் | மூலநக்ஷத்திரம் |
| ௨௮ | ஏயர்கோன்கலிக்காமநாயனார் | ஆனிமாதம் | இரேவதிநக்ஷத்திரம் |
| ௨௯ | திருமூலநாயனார் | ஐப்பசிமாதம் | அச்சுவினிநக்ஷத்திரம் |
| ௩௰ | தண்டியடிகணாயனார் | பங்குனிமாதம் | சதயநக்ஷத்திரம் |
| ௩௧ | மூர்க்கநாயனார் | கார்த்திகைமாதம் | மூலநக்ஷத்திரம் |
| ௩௨ | சோமாசிமாறநாயனார் | வைகாசிமாதம் | ஆயிலியநக்ஷத்திரம் |
| ௩௩ | சாக்கியநாயனார் | மார்கழிமாதம் | பூராடநக்ஷத்திரம் |
| ௩௪ | சிறப்புலிநாயனார் | கார்த்திகைமாதம் | பூராடநக்ஷத்திரம் |
| ௩௫ | சிறுத்தொண்டநாயனார் | சித்திரைமாதம் | பரணிநக்ஷத்திரம் |
| ௩௬ | சேரமான்பெருமாணாயனார் | ஆடிமாதம் | சுவாதிநக்ஷத்திரம் |
| ௩௭ | கணநாதநாயனார் | பங்குனிமாதம் | திருவாதிரைநக்ஷத்திரம் |
| ௩௮ | கூற்றுவநாயனார் | ஆடிமாதம் | திருவாதிரைநக்ஷத்திரம் |
| ௩௯ | புகழ்ச்சோழநாயனார் | ஆடிமாதம் | கார்த்திகைநக்ஷத்திரம் |
| ௪௰ | நரசிங்கமுனையரையநாயனார் | புரட்டாசிமாதம் | சதயநக்ஷத்திரம் |
| ௪௧ | அதிபத்தநாயனார் | ஆவணிமாதம் | ஆயிலியநக்ஷத்திரம் |
| ௪௨ | கலிக்கம்பநாயனார் | தைமாதம் | இரேவதிநக்ஷத்திரம் |
| ௪௩ | கலியநாயனார் | ஆடிமாதம் | கேட்டைநக்ஷத்திரம் |
| ௪௪ | சத்திநாயனார் | ஐப்பசிமாதம் | பூசநக்ஷத்திரம் |
| ௪௫ | ஐயடிகள்காடவர்கோனாயனார் | ஐப்பசிமாதம் | மூலநக்ஷத்திரம் |
| ௪௬ | கணம்புல்லநாயனார் | கார்த்திகைமாதம் | கார்த்திகைநக்ஷத்திரம் |
| ௪௭ | காரிநாயனார் | மாசிமாதம் | பூராடநக்ஷத்திரம் |
| ௪௮ | நெடுமாறநாயனார் | ஐப்பசிமாதம் | பரணிநக்ஷத்திரம் |
| ௪௯ | வாயிலார்நாயனார் | மார்கழிமாதம் | இரேவதிநக்ஷத்திரம் |
| ௫௰ | முனையடுவார்நாயனார் | பங்குனிமாதம் | பூசநக்ஷத்திரம் |
| ௫௧ | கழற்சிங்கநாயனார் | வைகாசிமாதம் | பரணிநக்ஷத்திரம் |
| ௫௨ | இடங்கழிநாயனார் | ஐப்பசிமாதம் | கார்த்திகைநக்ஷத்திரம் |
| ௫௩ | செருத்துணைநாயனார் | ஆவணிமாதம் | பூசநக்ஷத்திரம் |
| ௫௪ | புகழ்த்துணைநாயனார் | ஆவணிமாதம் | ஆயிலியநக்ஷத்திரம் |
| ௫௫ | கோட்புலிநாயனார் | ஆடிமாதம் | கேட்டைநக்ஷத்திரம் |

| | அடியார்பெயர். | மாதம். | நக்ஷத்திரம். |
|---|---|---|---|
| ௫௬ | பூசலார்நாயனார் | ஐப்பசிமாதம் | அனுடநக்ஷத்திரம் |
| ௫௭ | மங்கையர்க்கரசியார் | சித்திரைமாதம் | உரோகிணிநக்ஷத்திரம் |
| ௫௮ | நேசநாயனார் | பங்குனிமாதம் | உரோகிணிநக்ஷத்திரம் |
| ௫௯ | கோச்செங்கட்சோழநாயனார் | மாசிமாதம் | சதயநக்ஷத்திரம் |
| ௬௰ | திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார் | வைகாசிமாதம் | மூலநக்ஷத்திரம் |
| ௬௧ | சடையநாயனார் | மார்கழிமாதம் | திருவாதிரைநக்ஷத்திரம் |
| ௬௨ | இசைஞானியார் | சித்திரைமாதம் | சித்திரைநக்ஷத்திரம் |
| ௬௩ | சுந்தரமூர்த்திசுவாமிகள் | ஆடிமாதம் | சுவாதிநக்ஷத்திரம் |
| | மாணிக்கவாசகசுவாமிகள் | ஆனிமாதம் | மகாநக்ஷத்திரம் |

சித்திரைச் சதயத்தப்பர் சிறந்தவை காசிமூலத்
தத்தரைப் பணிசம்பந்த ரானிமா மகத்திலந்த
முத்தமிழ் வாதவூரர் முதியநல் லாடிதன்னிற்
சுத்தமாஞ் சுவாதிநாளிற் சுந்தரர் கைலைசேர்ந்தார்.

---



8930
Q23

